# சங்கப் பாடல்களில் பாலை நில இனவரைவியல்

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக

முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

இந்திராணி.பி

பதிவு எண் : 17211174022005

தமிழ்



மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

திருநெல்வேலி - 627 012

பிப்ரவரி - 2022

# மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

## திருநெல்வேலி-12

## சான்றிதழ்

**'சங்கப் பாடல்களில் பாலை நில இனவரைவியல்'** என்னும் தலைப்பில் பி.இந்திராணி (பதிவு எண்: 17211174022005) அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு ராணி அண்ணா அரசு மகளிர் கல்லூரி, தமிழ் ஆய்வு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும், இவ்வாய்வுக்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் இதுவரை அளிக்கப் பெறவில்லை என்றும் சான்று அளிக்கப்படுகின்றது.

இடம் : திருநெல்வேலி

நாள் :

| | |
|---|---|
| ஆய்வாளர் | நெறியாளர் |
| பி.இந்திராணி | (முனைவர் பா.வைடூரியம்மாள்) |

## CERTIFICATE OF GENUINESS OF THE PUBLICATION

This is to certify that the Ph.D candidate **Mrs.P.Indirani** working under my supervision has published the research article(s) as detailed below:

| Sl. No | Title for the Research Article | Name of the Journal | Volume no. | Page no | | Year of Publications | ISSN No. | Published by |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | From | To | | | |
| 152/200 | பாலை நில மக்களின் நம்பிக்கைகள் | Modern Tamizh Research | Vol.9 no.4 | 1076 | 1080 | October - December 2021 | ISSN 2321 - 984X | Raja Publication |
| 107/150 | பாலை நில மக்கள் கொண்டாடிய விழாக்கள் | Modern Tamizh Research | Vol.9 no.4 | 754 | 758 | October - December 2021 | ISSN 2321 - 984X | Raja Publication |

The contents of the above publication(s) incorporate part of the results presented in his/her thesis.

**Research Supervisor**

**(Signature with Seal)**

ஒவ்வொரு இயலிலும் கூறப்பட்ட செய்திகள் தொகுக்கப்பட்டு முடிவுகளாகத் தரப்பட்டுள்ளன.

## நன்றியுரை

**‘சங்கப் பாடல்களில் பாலை நில இனவரைவியல்’** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்த திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்கும், ராணி அண்ணா அரசு மகளிர் கல்லூரி ஆட்சிக்குழுவினருக்கும், முதல்வர் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்த தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் முனைவர் இரா.சிவசங்கரி அவர்களுக்கும், இவ்வாய்வில் எனக்கு நெறியாளராக இருந்து ஆய்வு முயற்சிகளை ஊக்குவித்து உற்சாகப்படுத்திய, ஆய்விற்குத் தேவையான அனைத்து உதவிகளையும் அன்புடன் நல்கிய தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் முனைவர். பா.வைடூரியம்மாள் அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுப்பணிக்கு ஊக்கமளித்து ஒவ்வொரு நாளும் உற்சாகப்படுத்தி ஆலோசனைகள் வழங்கிய ராணி அண்ணா அரசு மகளிர் கல்லூரி தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் மற்றும் உதவிப்பேராசிரியர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்விற்கு நிதியுதவி அளித்த செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கு எனது பணிவார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்விப் பணியில் என்னை முழுமையாக ஈடுபடுத்திய என் கணவர் பிரேம்குமார் மற்றும் என் தாய், தந்தையர்க்கும் பேருதவி புரிந்த என் தோழி கா.மாரியம்மாள், என் சகோதர, சகோதரி ஆகியோருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

குறுகிய காலத்தில் கணிப்பொறி மூலம் தட்டச்சுப் பணிகளைச் செவ்வனே முடித்து இவ்வாய்வேட்டின் புறவடிவங்கள் அமைய உதவிய

மருதம் கணினி நிறுவனத்துக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வாளர்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| அகத் | - | அகத்திணை |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| ஐந் | - | ஐந்திணை |
| கலி | - | கலித்தொகை |
| கு.எண் | - | குறள் எண் |
| குறள் | - | திருக்குறள் |
| குறிஞ்சி | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறுபாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| தொ.ஆ | - | தொகுப்பாசிரியர் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நம்பி | - | நம்பியகப்பொருள் |
| நற் | - | நற்றிணை |
| நூற் | - | நூற்பா |
| நெடு | - | நெடுநல்வாடை |

| | | |
|---|---|---|
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பட்டி | - | பட்டினப்பாலை |
| பதிற் | - | பதிற்றுப்பத்து |
| பரி | - | பரிபாடல் |
| பா | - | பாடல் |
| பா.எண் | - | பாடல் எண் |
| பா.வரி | - | பாடல்வரி |
| புறம் | - | புறநானூறு |
| பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | - | பொருநராற்றுப்படை |
| பொருள் | - | பொருளதிகாரம் |
| மதுரை | - | மதுரைக்காஞ்சி |
| மலை | - | மலைபடுகடாம் |
| மு.நூ | - | முகநூல் |
| மேலது | - | மேற்கூறியது. |

# பொருளடக்கம்

# சங்கப் பாடல்களில் பாலை நில இனவரைவியல்

## (ஆய்வுச் சுருக்கம்)

### முன்னுரை

ஐந்திணைகளுள் நடுவண் திணையாக இருப்பது பாலை நிலமாகும். பாலைநிலம் சுரமும் சுரம் சார்ந்த இடமும் ஆகும். இங்குள்ள மக்கள் வழிப்பறி செய்வதையே தங்கள் தொழிலாக கொண்டிருந்ததைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இம்மக்களின் வாழ்க்கைமுறை, தொழில் போன்றவற்றைப் பற்றி ஆராய்வதாக இவ்வாய்வேடு அமைகிறது.

### ஆய்வுத் தலைப்பு

**‘சங்கப் பாடல்களில் பாலைநில இனவரைவியல்’** என்பதே ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

### ஆய்வுநோக்கம்

சங்க இலக்கியத்தில் வழிப்பறி ஒரு குறிப்பிட்ட மக்களின் வாழ்வியல் தொழிலாகக் கூறப்பட்டுள்ளது. இயல்பான வாழ்க்கைமுறைக்கு உட்பட்டதாகவே வழிப்பறியும் கொள்ளையிடுதலும் அமைந்திருந்தன என்பதைச் சங்க இலக்கியங்கள் வழி அறிவதே இவ்வாயின் நோக்கமாகும்.

### ஆய்வின் கருதுகோள்

பாலைநிலம் என்பது நிரந்தரமாகவே அவ்வாறே இருந்ததா என்பது பற்றியும் வாழ்க்கைமுறை பற்றியும் ஆராய்வதே ஆய்வின் கருதுகோளாகும்.

### ஆய்வேட்டின் அமைப்பும் பகுப்பும்

ஆய்வு அறிமுகம் ,ஆய்வுமுடிவுரை நீங்கலாக இவ்வாய்வு நான்கு இயல்களைக் கொண்டு அமைகிறது.

1. இனவரைவியலும் பாலைநிலமும்
2. திணைக்கோட்பாடும் ஐவகைமக்களின் வாழ்க்கைநிலையும்
3. களவு விளக்கமும் வகைகளும்
4. ஆறலைக் கள்வர் வாழ்க்கைமுறையும் தொழில்முறையும்

### முடிவுரை

இயல் -1

# இனவரைவியலும் பாலைநிலமும்

## 1.0 முன்னுரை

பண்பாட்டு மானிடவியலின் முக்கியமான பிரிவாக இனவரைவியல் அமைந்துள்ளது. இதில் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில், வாழும் மக்களின், பிறப்பு முதல் இறப்பு வரையிலான பலவாழ்வியற் கூறுகள் அடங்கியுள்ளன. அக்கூறுகளை அம்மக்களோடு குறிப்பிட்ட நாட்கள் அல்லது ஆண்டுகள் தங்கி களஆய்வு முறைகளை மேற்கொண்டு அதன்மூலம் பெறப்படும் முதன்மையான தரவுகளை அடிப்படையாகக் கொண்டு விளக்கமாக எழுதுவதே இனவரைவியல் என்று அழைக்கப்படுகின்றது. இனவரைவியல் நோக்கில் இலக்கியத்தை அணுகும்போது அக்கால மக்களின் வாழ்க்கை முறையைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது.

அவ்வகையில் பண்டையத் தமிழ் மக்கள் மரபு மீறாமலும் மாறாமலும் இனக்குழுக்களாகச் சேர்ந்து வாழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. அதனை இனவரைவியல் நோக்கில் விளக்குவதாக இவ்வியல் அமைகின்றது.

## 1.1 இனவரைவியல் சொல் விளக்கம்

ஒரு சமூகத்தையும் அதன் பண்பாட்டையும் அறிந்து கொள்வதற்கு இனவரைவியல், அடிப்படையான ஒரு பண்பாக அமைகிறது. இத்தகைய இனவரைவியல் என்ற சொல் குறித்து பல்வேறு வரையறைகளை அகராதிகளும் அறிஞர்களும் தருகின்றனர்.

மானிடவியல் கலைச்சொல்லகராதி, இனவரைவியல் என்ற சொல்லுக்கு "மனிதவினப்பரப்பு விளக்கவியல்"[1], என்றும் பிரிட்டானிக்கா தகவல் களஞ்சியம், "குறிப்பிட்ட மானிடச் சமுதாயம் ஒன்றினைப் பற்றிய விரிவான ஆராய்ச்சி விவரிப்பே இனவரைவியலாகும்"[2] என்றும் விளக்கம் அளிக்கின்றன. இதனடிப்படையில் இனக்குழுவியல் என்பது ஒரு பண்பாட்டைப் பற்றி எடுத்தியம்புவது என்பதை அறியமுடிகிறது.

பண்பாட்டு மானிடவியலின் முக்கியமான ஒரு பிரிவில் இனத்தைப் பற்றிய வரையறைகளை தொகுத்து எழுதுவதும் இனவரைவியல் என்பதை அறியலாம்.

இனவரைவியல் என்னும் சொல் Ethnography என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படுகின்றது. "Ethnography என்னும் ஆங்கிலச்சொல் 'Ethnos' 'Graphein' என்னும் கிரேக்கச் சொற்களில் இருந்து தோன்றியது."[3] என பக்தவத்சலபாரதி கூறுகிறார். 'Ethnos' என்பது இனம் என்ற பொருளையும் 'Graphein' என்பது எழுதுதல் அல்லது வரைதல் என்ற பொருளையும் உணர்த்துகின்றன. இதன் மூலம் ஒரு குறிப்பிட்ட மக்கள் இனத்தைப் பற்றி எழுதுவதே இனவரைவியல் என்பது உறுதியாகின்றது.

தமிழில் **'Ethnography'** என்னும் ஆங்கிலச் சொல்லைக் குறிக்க இனவரைவியல், இனக்குழுவியல், இனவரைவு, இனஅமைப்பியல் போன்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட இனத்தைப் பற்றி அறிந்து கொள்வதற்கு இத்தனை சொற்கள் பயன்படுத்தப்பட்டாலும்

இனவரைவியல் என்ற சொல்லே பெரும்பாலும் ஆராய்ச்சியாளர்களாலும், கல்வியாளர்களாலும் பயன்படுத்தப்பட்டு வருவதை அறிய முடிகிறது.

### 1.1.1 இனக்குழு உருவாக்கம்

மனித சமுதாயத்தின் இனக்குழுக்கள் உலகம் தோன்றிய காலத்திலேயே தோன்றிவிடவில்லை. அதற்கு நீண்ட காலம் ஆகியிருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாக அமைந்துள்ளது.

மனிதன் முதலில் நாடோடி வாழ்க்கையையே வாழ்ந்து வந்துள்ளான். கிடைத்ததை உண்டு, ஏதேனும் ஓர் இடத்தில் தங்கியிருந்திருக்கின்றான். நெருப்பைக் கண்டுபிடித்த பின்னர்தான் உணவைச் சமைத்து உண்ணக் கற்றுக்கொண்டான். அதற்குப் பின்பே அவன் ஓரிடத்தில் நிலையாக வாழத் தொடங்கியுள்ளான். படிப்படியாக இயற்கையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு நிலத்தைப் பண்படுத்திப் பயிர்த்தொழில் செய்ய ஆரம்பித்துள்ளான். இவ்வாறாக, வேட்டைச் சமூகத்தில் இருந்து பயிரிடுதல் வரை என்று வளர்ந்துள்ள நிலையை ஆய்வுகளின் வழி அறியமுடிகிறது.

மனிதன் புவியின் சூழல் அமைப்பு போன்றவற்றைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டாலும் இயற்கையின் மிகப்பெரிய தாக்கத்தைப் பாதிப்பைக் கண்டு பயந்துள்ளான். இதன் விளைவாக உலக நிலப்பரப்பில் தனித்தனியாக வாழ்ந்த மனிதன் ஒரு பாதுகாப்பான இடம் நோக்கி நகரத் தொடங்கியுள்ளான். இம்மாற்றமே மனிதர்கள் இனக்குழுக்களாகச் சேர்ந்து வாழ அடிப்படையாக அமைந்திருக்க கூடும் என்பதையும் அறியமுடிகிறது. இதன் மூலம் பண்டமாற்று வாணிப முறையை மேற்கொண்டதையும் அறியமுடிகிறது.

சமூகத்தில் பொருளாதாரம், தொழில்நுட்பம் ஆகியவற்றின் தேவை அதிகரிக்க அதிகரிக்க மனிதர்கள் இயற்கையின் பாதிப்பில் இருந்து விடுபடத் தொடங்கினார்கள். தொடக்க காலத்தில் முற்றிலும் தனித்த இனக்குழுக்களாக வாழ்ந்தவர்கள் பின்னர் பொருளாதாரம் காரணமாக ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு இடம்பெயரத் தொடங்கியுள்ளனர். இடம்பெயர்ந்து வந்து அங்கேயே தங்கி தங்கள் இனத்தை அவ்விடத்திலும் நிலைநாட்டுவதற்கான முயற்சியை மேற்கொண்டிருக்கின்றனர். இதனால் பிற்காலத்தில் கலப்பு இனக்குழு வாழ்க்கை உருவான தன்மையை அறியமுடிகிறது.

இனக்குழுச் சமுதாயம் என்ற ஓர் அமைப்பு உருவாக அடிப்படைக் காரணமாக அமைந்தது உணவுத் தேவையாகும். இவ் இனக்குழுக்கள் சிறுசிறு எண்ணிக்கையில் இணைந்து செயல்பட்ட போது குறிப்பிட்ட குழுவினரைத் தமக்கு அடிமையாக்கும் முறையை மேற்கொண்டன. இந்த அடிமை முறையும், தொழில் மற்றும் பொருளாதாரத்தின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது என்பதை அறிய முடிகிறது.

### 1.1.2 சங்க கால இனக்குழுச் சமூகம்

சங்க காலம் என்பது ஏறக்குறைய 500 ஆண்டுகளை உள்ளடக்கிய காலகட்டமாகும். இக்காலத்தில் தோன்றிய சங்க இலக்கியங்கள் அக்காலக்கட்டத்தில் வாழ்ந்த மக்களின் இனக்குழுச் சமுதாயத்தையும், பேரரசின் உருவாக்கத்தையும் பேசுகின்றன.

சங்க காலத்தில் குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மக்களை அந்த நிலப்பாகுபாட்டின் அடிப்படையிலோ அல்லது அவர்கள் மேற்கொண்ட

தொழிலின் அடிப்படையிலோ அழைக்கும்முறை இருந்துள்ளது. அதன் அடிப்படையில் ஆநிரை மேய்ப்பவர் ஆயர் என்றும், வழிப்பறி செய்பவர் ஆறலைக் கள்வர் என்றும், வேட்டையாடுபவர் வேட்டுவர் என்றும் அழைக்கப் பெற்றுள்ளனர். இவர்கள் தமக்கே உரிய சில ஒழுக்கங்களைக் கொண்டிருந்ததைக் காணமுடிகிறது.

சங்க காலத்தில், "வேட்டுவர், ஆயர், கள்வர் மட்டுமின்றி பரதவர், ஓவியர், வேளிர், மறவர், பூழியர், கோசவர், ஆந்திரர், அருவாளர்"[4] ஆகிய இனக்குழுவினரும் வாழ்ந்ததைத் துரை அரங்கசாமி சுட்டிக்காட்டியுள்ளார். இவர்கள் மட்டுமின்றி சங்ககாலத்தில் வாழ்ந்தோரை, "விவசாயிகள், மேய்ப்பாளர்கள், வேட்டையாடுவோர், மீனவர், பாலை இனமக்கள் என்று நிலத்தின் அடிப்படையில் ஐந்து வகையாக"[5] இருந்ததாக மகாலிங்கம் தம் நூலில் குறிப்பிட்டிருப்பதைக் கார்த்திகேசு சிவதம்பி எடுத்துக் காட்டியுள்ளார்.

சங்க காலத்தில் பல்வேறு இனக்குழுக்கள் காணப்பட்டாலும் பாலைநில மக்களைப் பற்றிய செய்திகளையே சங்க இலக்கியங்கள் அதிகம் பேசுகின்றன.

### 1.1.3 இனவரைவியல் ஆய்வின் தொடக்கம்

ஒரு மக்கள் இனத்தைப் பற்றிய வரைவான, இனவரைவியல் ஆய்வின் தொடக்கம் கிரேக்கப்பயணியும், வரலாற்றியலின் தந்தையுமான 'ஹெரோடாட்டஸ்' அவர்களிடம் இருந்து தொடங்கியது என்று பக்தவத்சலபாரதி அவர்கள் கூறுகிறார்.

ஹெரோடாட்டஸ் வாழ்ந்த காலம் ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும். இவர் எழுதிய ‘பாரசீகப்போர்களின் வரலாறு’ என்பதே முதல் களஆய்வு பற்றிய இனவரைவியல் நூல் என்று கூறப்படுகிறது. இதில் ஹெரோடாட்டஸ் பயணம் செய்த நில அமைப்பு, மக்கள், மொழி சமுதாயம், சட்டம், போர், சமயம் மற்றும் சடங்குமுறைகள் பற்றிக் கூறியுள்ளார். ஐம்பதிற்கும் மேற்பட்ட மக்கள் இனம் பற்றியும் இந்நூலில் கூறியுள்ளார்.

கிறிஸ்துவமதப் போதகர்களும் சமயப் பணியாளர்களும் தாங்கள் சந்தித்த மக்கள் பற்றியும் எழுதியுள்ளனர். இருப்பினும் இனவரைவியலை ஆய்வுநோக்கில் அணுகிய காலம் கி.பி.பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியே ஆகும்.

### 1.1.4 இனவரைவியல் ஆய்வுப்பகுப்பு

இனவரைவியல் ஆய்வானது அன்று முதல் இன்று வரை பல்வேறு வளர்ச்சி நிலைகளை அடைந்துள்ளது. இதனைப் பற்றிக் கூறுவதில் அறிஞர்களிடையே பல்வேறு கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.

இனவரைவியல் ஆய்வினை, வளர்ச்சி நிலைகளுக்கு ஏற்ப ஒவ்வொரு அறிஞரும் ஒவ்வொரு விதமாகப் பகுத்துள்ளனர். இதில் முக்கியமான பகுப்புமுறைகளாகக் கருதப்படுபவை மூன்று. அவை முறையே,

1. பழைய புதிய காலப் பகுப்பு

2. வளர்ச்சி காலப் பகுப்பு

3. திறனாய்வு காலப்பகுப்பு

போன்ற பகுப்பு முறைகளாகும்.

### 1.1.4.1 பழைய புதிய காலப் பகுப்பு

பகுப்பு என்பது கால வரிசைப்படியோ அல்லது, ஒன்றன் எண்ணிக்கை அடிப்படையில் அதனைப் பழையது, புதியது எனப் பகுத்து ஒரு தொகுப்பாக வைப்பதாகும். இதனடிப்படையில் தனஞ்செயன் அவர்கள் இனவரைவியல் ஆய்வின் வளர்ச்சி நிலைகளைக் கால அடிப்படையில் இரண்டாகப் பகுத்துக் கூறுகிறார். அவை முறையே,

1. பழைய அல்லது மரபான இனவரைவியல் காலம்
2. புதிய இனவரைவியல் காலம்

என்பனவாகும்.

#### 1.1.4.1.1 பழைய அல்லது மரபான இனவரைவியல் காலம்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் முதல் உலகப்போர் நடந்த காலம் வரை உள்ள காலப்பகுதி பழைய அல்லது மரபான இனவரைவியல் காலம் ஆகும்.

ஒரு குறிப்பிட்ட பண்பாட்டைச் சார்ந்த மக்கள் குழுவின் வாழ்வியல் நடத்தைகளை இனவரைவியலாளர் எப்படி பார்க்கிறாரோ அந்தப் பார்வைத் தளத்தில் இருந்து அப்பண்பாட்டை நோக்கும் அணுகுமுறையைக் கொண்டதாக இக்கால அணுகுமுறை அமைகிறது.

இனவரைவியலாளர் ஒரு சமூகத்தை எவ்வாறு பார்க்கிறாரோ அதை அப்படியே ஆவணமாகத் தருகிறார். அதாவது அச்சமூகத்தில் நடைபெறும் சடங்கு முறைகள் மற்றும் அம்மக்களின் பழக்கவழக்கங்கள், வாழ்க்கைமுறை, தொழில்முறை ஆகியவற்றைப் பற்றித் தெளிவாக ஆராய்ச்சி செய்யாமல் தன் கண்களால் பார்த்தவற்றை மட்டும் தருகிறார் என்று கூறலாம்.

### 1.1.4.1.2 புதிய இனவரைவியல் காலம்

இரண்டாம் உலகப் போர் நடந்து முடிந்த காலம் முதல் இன்றுவரை உள்ள காலப்பகுதி புதிய இனவரைவியல் காலம் ஆகும். ஒரு குறிப்பிட்ட பண்பாட்டைச் சேர்ந்தவர் தன்னுடைய பண்பாட்டை எப்படிப் பாரக்கிறாரோ அந்தப் பார்வைத்தளத்தில் இருந்து பிற சமுதாயத்தின் பண்பாட்டை நோக்கும் அணுகுமுறை புதிய இனவரைவியல் அணுகுமுறையாகும்.

இனவரைவியலாளர் தான் வாழும் சமூகத்தில் நடைபெறும் சடங்குமுறைகள், பழக்கவழக்கங்கள் மற்றும் மக்களின் பண்பாட்டை எவ்வாறு காரண காரியங்களோடு தொடர்புடையதாகப் பார்க்கிறாரோ, அதைப்போன்று பிற சமூகத்தில் வாழும் மக்களின் பழக்கவழக்கங்கள் மற்றும் பண்பாட்டைப் பார்த்து, அதன் காரணகாரிய உயர்வை எழுதி அளிக்கும் ஆவணத்தைப் புதிய இனவரைவியல் காலம் என்று அறியலாம்.

### 1.1.4.2 வளர்ச்சிக் காலப் பகுப்பு

வளர்ச்சி என்பது முன்னேறிச் செல்வதாகும். ஒவ்வொரு காலக்கட்டத்திலும் மனிதஇனம் புதிய வளர்ச்சியைப் பெறுகிறது.

இதைப்போன்று இனவரைவியலும் மாற்றம் பெறுகிறது எனலாம். இக்காலத்தின் அடிப்படையிலேயே பக்வத்சலபாரதி அவர்களின் இனவரைவியல் ஆய்வின் வளர்ச்சி நிலைகளைக் கால வளாச்சிக்கு ஏற்ப நான்கு படி நிலைகளாகப் பகுக்கிறார். அவை முறையே,

1. மரபான காலம்
2. நவீன காலம்
3. தெளிவற்ற வகைமைகள் காலம்
4. புதிய காலம்

ஆகியவை ஆகும்.

### 1.1.4.2.1 மரபான காலம்

மரபு அல்லது பாரம்பரியம் என்பது பெற்றோர் அல்லது முன்னோர்களிடம் இருந்து அவர்களின் இயல்புகள் சந்ததிகளுக்குக் கடத்தப்படுவது அல்லது அதனைப் பின்வரும் சந்ததியினர் பின்பற்றுவது ஆகும். பழந்தமிழர் தங்களுக்கு என்று சிலமரபுகளைக் கடைபிடித்து வந்துள்ளனர். இன்றளவும் அத்தகைய மரபுப் பழக்கவழக்கங்களைத் தமிழரிடையே காணமுடிகின்றது.

1900 ஆம் ஆண்டுகளில் வெள்ளையர்கள் இந்தியாவை ஆட்சி செய்தனர். அக்காலத்தில் தோன்றியதே இந்தக் கொள்கையாகும். இக்காலத்தில் இனவரைவியலாளர்கள் வெள்ளையர் அல்லாத இந்தியச்சமூகம் எவ்வாறு இருக்கும் என்பதைப் பற்றி விரிவான ஆராய்ச்சி செய்தனர் எனலாம்.

### 1.1.4.2.2 நவீன காலம்

நவீன காலம் என்பது இனவரைவியலில் மக்களின் அணுகுமுறைகள் மற்றும் அவர்களின் வாழ்க்கை முறைகளை உற்றுநோக்கல் முறையில் ஆராயத் தொடங்கிய காலமாகும். இனவரைவியலாளர்கள் ஓர் இனத்தின் நடைமுறைச் செயல்பாடுகளில் அதிக கவனம் செலுத்தி மரபான காலத்தில் இருந்து சற்று விலகி நடைமுறை வாழ்க்கைக்கும் அதன் அணுகுமுறைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்த காலமாகும்.

இரண்டாம் உலகப்போர் முதல் 1960 வரை உள்ள காலப்பகுதி இனவரைவியல் ஆய்வின் நவீனக்காலம் என்று அழைக்கப்படுகிறது. இந்தக் காலக்கட்டத்தில் தான் ஆய்வாளர்கள் தமது ஆய்விற்கானத் தகவல்களைத் திரட்ட களப்பணியில் பல்வேறு உற்றுநோக்குதல் முறைகளைப் பின்பற்றினர்.

மேலும் சமூகத்தை விட்டு விலகல், சமூகத்தைக் கட்டுக்குள் வைத்திருத்தல் ஆகிய சமூகச் செயல்பாடுகள் குறித்தும் ஆய்வுசெய்தனர். ஒரு சமூகத்தில் உள்ள விதிமுறைகளை விட்டு சிலர் விலகியிருந்தனர். அது மட்டுமின்றி அச்சமூகத்தைத் தன் கட்டுக்குள் வைத்திருக்கும் தலைவர் மற்றும் நிலப்பிரபுகள் பற்றியும் தெளிவாக ஆராய்ச்சி செய்தனர்.

### 1.1.4.2.3 தெளிவற்ற வகைமைகள் காலம்

இனவரைவியல் ஆய்வில் ஆய்வாளர்கள் ஒருகுறிப்பிட்ட முறையை பின்பற்றாமல் பல்வேறு வகையான இனவரைவியல் முறைகளைப் பின்பற்றத் தொடங்கிய காலம் தெளிவற்ற வகைமைகள் காலம் எனப்படும்.

இக்காலக்கட்டத்தில் பல்வேறு வகையான இனவரைவியல் ஆய்வுகள் தோற்றம் பெற்றன.

1970 ஆம் ஆண்டு தொடங்கி 1986 ஆம் ஆண்டு வரை உள்ள காலக்கட்டத்தைத் தெளிவற்றவகைமைகள் காலம் என்று கூறலாம். இக்காலக்கட்டத்தில் இனவரைவியல் ஆய்வை மேற்கொண்ட இனவரைவியலாளர்கள் பல்வேறு வகையில் பல்வேறு அணுகுமுறையில் ஆய்வு செய்துள்ளனர். அதாவது இயங்கியல் இனவரைவியல், முழுமை இனவரைவியல், தனித்துவம் சார்ந்த இனவரைவியல், தன்வரைவியல், வரலாற்று இனவரைவியல் எனப் பல அணுகுமுறைகளில் இனவரைவியலை ஆய்வு செய்துள்ளனர்.

1.1.4.2.4 புதிய காலம்

மரபார்ந்த அல்லது பழைய முறையில் இருந்து ஓர் ஆராய்ச்சியை வேறுபடுத்திக் காட்டுவதே புதியது எனப்படும். இப்புதிய காலக்கட்டத்தில் இனவரைவியல் ஆராய்ச்சியில் ஒரு சமூகத்தை அல்லது ஓர் இனத்தை ஒரு நிலையில் தான் பார்க்க வேண்டும் என்ற கண்ணோட்டம் மாறி பல்வேறு நிலைகளில் ஓர் இனக்குழுக்களின் வாழ்க்கைமுறை மற்றும் நடத்தை முறைகளை ஆராய்ச்சி செய்யத் தொடங்கிய காலக்கட்டமே புதிய காலக்கட்டமாகும்.

1980ஆம் ஆண்டு தொடங்கி இன்று வரையுள்ள காலப்பகுதி புதிய காலக்கட்டம் ஆகும். இக்காலக்கட்டத்தில் இனவரைவியல் ஆய்வில் எவற்றை முன்னிறுத்தி, ஆய்வு செய்ய வேண்டும் என்பதில் இனவரைவியலாளர்களிடையே வேறுபட்ட கருத்துக்கள் நிலவின. ஆகவே

இக்காலத்தில் பல்வேறு கலப்புப் பனுவல்கள் தோன்றின. இதன் விளைவால் ஒரு சமூகத்தைப் பல்வேறு முறைகளில் உற்றுநோக்கிய வகையில் ஆய்வுகள் நிகழ்ந்ததை அறியமுடிகிறது.

### 1.1.4.3 திறனாய்வு காலப் பகுப்பு

திறனாய்வு என்பது ஏதேனும் ஒருபொருளைப் பற்றிய அதன் நேர் மற்றும் எதிர்மறைப் பண்புகளைக் கூறுவதாகும். இம்முறையினை அடிப்படையாகக் கொண்டு ஜேமிசன் பகுத்துள்ளார். அவர், "1991ஆம் ஆண்டு எழுதிய 'post modernism or the cultural logic of late capitalism' எனும் ஆய்வின் வளர்ச்சி நிலையை மூன்று காலக்கட்டங்களில் பகுத்துள்ளார். அவைமுறையே

1. எதார்த்த நிலைக்காலம்
2. நவீனத்துவம் அல்லது உயர் நவீனத்துவக்காலம்
3. பின்னை நவீனத்துவம் தொடங்கி இன்று வரையிலான காலம்"[6]

ஆகிய பகுப்புமுறைகள் ஆகும்.

#### 1.1.4.3.1 எதார்த்த நிலைக்காலம்

ஒரு சமூகம் அல்லது ஓர் இனக்குழுவின் உண்மையான வாழ்க்கைப் பண்பை எடுத்துக் கூறுவதே எதார்த்தம் என்று கூறலாம். அதாவது உள்ளதை உள்ளபடியே கூறுவதாகும். ஒரு சமூகத்தில் உள்ள மக்களிடையே உள்ள ஒற்றுமைகள், வேற்றுமைகள், அச்சமூகத்திற்கும் அம்மக்களுக்கும் இடையேயான உறவுமுறை ஆகியவற்றை ஆய்வாளன்

எவ்வாறு உற்றுநோக்கல் மூலம் கண்டறிகிறானோ அதை அவ்வாறே ஆவணமாகத் தருவதே எதார்த்தம் எனப்படும்.

1860 ஆம் ஆண்டு முதல் 1920 ஆம் ஆண்டு வரை உள்ள காலப்பகுதி இனவரைவியல் ஆய்வின் எதார்த்த நிலைக்காலம் ஆகும். இக்காலக்கட்டத்தில் சந்தை வட்டாரம் சார்ந்த, அதாவது விற்பனை முறையிலான நோக்கமுடைய இனவரைவியல் ஆய்வுகள் தோற்றம் பெற்றன என்பதையும் அறிய முடிகிறது.

### 1.1.4.3.2 நவீனத்துவம் அல்லது உயர்நவீனத்துவக்காலம்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவானதே நவீனத்துவம் ஆகும். பள்ளி, பொது ஊடகம், போக்குவரத்து ஆகியவற்றின் மூலம் நவீனத்துவம் ஒரு நிலையான அமைப்பாக உருவானது என்று கூறலாம். ஒரு சமூகம் அல்லது ஓர் இனத்தைப் பற்றிய நிலையான முறையில் ஆராய்ச்சி நடந்தன. அதுவே இனவரைவியலின் நவீனத்துவம் ஆகும். எந்த ஒரு செயலையும் அறிவியல் முறையில் ஆராய்ச்சி செய்வதன் மூலம் அச்செயலை முழுமையாக அறிந்து கொள்ள முடியும் என்ற போக்கே நவீனத்துவம் என்றழைக்கப்படுகிறது.

இனவரைவியல் ஆய்வின் இரண்டாம் காலக் கட்டமான 1920 முதல் 1960 வரை உள்ளதே நவீனத்துவம் அல்லது உயர்நவீனத்துவம் காலம் ஆகும். ஜேமிசன் இக்காலக்கட்டத்தை இனவரைவியல் ஆய்வின் பொற்காலம் எனக் குறிப்பிடுகிறார். இக்காலத்தில் தான் இனவரைவியல் ஆய்விற்கு முறைப்படுத்தப்பட்ட வரையறைகள் தோற்றம் பெற்றன. மேலும் முன்னுரிமை

சார்ந்த உன்னதமான இனவரைவியல் ஆய்வுகள் இக்காலக்கட்டத்தில் தோன்றின எனலாம்.

#### 1.1.4.3.3 பின்னை நவீனத்துவம் தொடங்கி இன்று வரையிலான காலம்

நவீனத்துவத்திற்குப் பின்பு வந்த எல்லாச் சிந்தனைகளும் பின்நவீனத்துவம் என்றழைக்கப்படுகின்றன. ‘‘இன்றைய உலகத்தின் இயல்பு ஒட்டு மொத்தமாக பின்நவீனத்துவ அம்சம் கொண்டது என்று சொல்கிறார்கள்’’[7] என்கிறார் ஜெயமோகன்.

நவீனத்துவம் என்பது ஒரு சமூகத்தில் உள்ள ஆண்,பெண் அவர்களின் குடும்ப அமைப்பு பற்றிப் பேசுவதாக மட்டும் கொண்டால், பின்நவீனத்துவம் என்பது அச்சமூகத்தில் உள்ள விளிம்புநிலை மக்கள், திருநங்கைகள் ஆகியவர்களையும் அச்சமூகத்தில் எவ்வாறு இருக்கின்றனா் என்பதையும் ஆராய்வதாக அமைகிறது எனலாம்.

1960 ஆம் ஆண்டு முதல் இன்று வரையுள்ள காலப்பகுதி இனவரைவியல் ஆய்வின் மூன்றாம் காலக்கட்டமாக அமைகிறது. இக்காலக்கட்டத்தில்தான் இனவரைவியல் ஆய்வில் பல்வேறு வகைமைகள் தோன்றின. இவ்வகைமைகளைத் தெளிவற்ற வகைமைகள் என்று ஜேமிசன் குறிப்பிடுவதன் வழி அறியமுடிகிறது.

### 1.1.5 இனவரைவியல் கூறுகள்

இனவரைவியல் என்பது மக்களின் பண்பாட்டை எழுதுவதாகும். பண்பாடு என்பது பல கூறுகளின் தொகுப்பு ஆகும். ஒரு குறிப்பிட்ட மக்கள் குழுவின் பண்பாட்டை இனவரைவியல் நூலாக எழுத இனவரைவியல்

கூறுகள் பல அவசியமாகின்றன. அவை முறையே 1.புவிச்சூழலியல், 2.சுற்றுச்சூழல், 3.காலநிலை, 4.குடியிருப்புமுறை, 5.பொருள்சார்பண்பாடு, 6.குடும்ப அமைப்பு, 7.உறவுமுறை, 8.திருமணமுறை, 9.வாழ்வியல் சடங்குகள், 10.குழந்தைவளர்ப்பு முறை, 11.பண்பாட்டு வயமாக்குமுறை, 12.மக்களின் உள்ளத்தியல் பாங்குகள், 13.மணக்கொடை, 14.மணவிலக்குமுறை, 15.வாழ்க்கைப்பொருளாதாரம், 16.தொழிற்பகுப்பு, 17.உற்பத்திமுறை 18.நுகர்வுமுறை 19.பங்கீட்டுமுறை, 20.பரிமாற்றுமுறை, 21.கைவினைத்தொழில்கள் 22.அரசியல் முறை, 23.அதிகார உறவுகள், 24.சமூகக் கட்டுப்பாடுகள், 25.மரபுசார் சட்டங்கள், 26.சமயநம்பிக்கைகள் 27.சடங்குகள், 28.வழிபாட்டுமுறைகள் 29.சூனியம், 30.வழக்காறுகள், 31.விழாக்கள், 32.இசை, 33.விளையாட்டுகள், 34.அழகியற் சிந்தனைகள், 35.ஈமச்சடங்குகள் போன்றவை ஆகும் என பக்தவத்சல பாரதி அவர்கள் கூறுகிறார். இலக்கியங்களை முதன்மையாகக் கொண்டு செய்யப்படும் இனவரைவியல் ஆய்வில் மேற்கண்ட கூறுகள் பலவற்றை அறிவது அவசியமானதாக அமைகிறது எனலாம்.

## 1.2 இனவரைவியல் வரையறை

இனவரைவியல் என்பது குறிப்பிட்ட மனிதசமூகம் அல்லது அச்சமூகத்தின் ஒட்டுமொத்த வாழ்வியற்கூறுகளை விரிவாக விளக்குவதாகும். அதாவது ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் வாழும் மக்களின் வாழ்வியற் முறைகளான உணவு, உடை, இருப்பிடம், சடங்குமுறைகள், பழக்கவழக்கங்கள் அவர்களின் தோற்றம் ஆகியவற்றை ஆராய்வதே இனவரைவியலாகும்.

இனவரைவியல் என்பது ஓர் இனத்தைப் பல்வேறு கூறுகளின் வாயிலாக இனங்காணுதல், குறிப்பிட்ட இனத்தின் கலாச்சார பழக்கவழக்கங்களை முன்வைத்தல், அம்மக்களின் தரவுகளைத் துல்லியமாக வெளிக்கொண்டு வருதல், போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டமைகிறது எனலாம். இது பெரும்பாலும் களஆய்வை மையமாகக் கொண்ட ஒன்றாகும். இது பண்பாட்டு மானிடவியலின் முக்கியமான பிரிவாக இயங்கிவருகிறது.

இனவரைவியல் என்பதற்குப் பல வரையறைகள் கூறப்பட்டுள்ளன. இத்தகைய இனவரைவியல் பற்றிய வரையறைகளை இரண்டு வகையாகப் பிரித்து அறியலாம்.அவை,

1. தமிழ் நாட்டு அறிஞர்களின் கருத்து
2. மேலைநாட்டு அறிஞர்களின் கருத்து

போன்றவை ஆகும்.

### 1.2.1 தமிழ்நாட்டு அறிஞர்களின் கருத்து

இனவரைவியல் என்பது குறிப்பிட்ட மக்கள் குழுவின் எல்லாவகையான மரபுகளையும், அவ்வினத்தாரின் உணர்வோடு பதிவு செய்வதே ஆகும். இதனைப் பற்றி மானிடவியல் அறிஞரான பக்தவத்சலபாரதி கீழ்க்கண்டவாறு விளக்குகின்றார்.

“ஒரு தனித்த சமூகத்தின் பண்பாட்டைப் பற்றி மானிடவியலாளர்கள் அச்சமூகத்தாரோடு நீண்ட காலம் ஒன்றி வாழ்ந்து, ஆய்வு செய்து, அதனை எழுத்தில் எழுதியளிக்கும் தனிவரைவு நூலே இனவரைவியல் எனப்படும்.

இத்தகு நீண்டகாலக் களப்பணியில் உற்றுநோக்கிப் பண்பாட்டை விவரிக்கும் தனிவரைவுகளை (Monographs) எழுதும் மானிடவியலாளர்கள் இனவரைவியலர்''[8] (Ethnographer) எனப்படுவர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இதன் மூலம் இனவரைவியல் என்பது களப்பணியை அடிப்படையாகக் கொண்ட கண்ணோட்டம் என்பதை அறியமுடிகிறது. அதாவது மானிடவியலார் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் அல்லது ஏதேனும் ஒரு துணைப்பண்பாட்டைப் பற்றி, அப்பண்பாட்டு மக்களோடு குறிப்பிட்ட காலம் தங்கியிருந்து அவர்களுடைய அன்றாட வாழ்க்கை பற்றி தெரிந்து கொள்வது என்பதை அறிய முடிகிறது.

இதற்கு வலுச்சேர்க்கும் வகையில் தனஞ்செயனும் குறிப்பிட்டுள்ளார். அவர் ''இனவரைவியல் என்பது களப்பணியை அடிப்படையாகக் கொண்டமைகிறது. மானிடவியலார் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் அல்லது ஏதேனும் ஒரு பண்பாட்டைக் கொண்டிருக்கும் மக்களோடு குறிப்பிட்ட காலம் வரை தங்கியிருந்து, அவர்களோடு வாழ்ந்து, அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் பங்கேற்று ஆராய்ந்து வெளிப்படுத்துவது''[9] என்று குறிப்பிட்டுள்ளது ஒப்பு நோக்கத்தக்கதாக அமைகிறது.

இனவரைவியல் என்பது களப்பணியின் மூலம் ஒரு குறிப்பிட்ட மனித சமூகத்தில் மேற்கொள்ளப்படுகின்ற பண்பாட்டு ஆய்வு முறையாகவோ ஆய்வின் வெளிப்பாடாக அமையக்கூடிய பிரதியாகவோ இருக்கலாம். இதன்மூலம் அம்மக்களின் பண்பாடு, சட்டநியதிகள், வழிபாட்டு முறைகள்,

சடங்குகள், பழக்கவழக்கங்கள், சமயச்சிந்தனைகள் போன்றவை வெளியுலகத்திற்குப் புலப்படும் சூழல் ஏற்படுகின்றது எனலாம்.

“ஒரு குறிப்பிட்ட மனித இனம் அல்லது சமூகத்தின் பண்பாட்டை அறிவதற்கு, அப்பண்பாட்டையுடைய மக்களோடு குறுகிய காலமோ அல்லது நீண்டகாலமோ வாழ்ந்து, களஆய்வு முறைகளைப் பயன்படுத்தி, அவர்களின் எல்லாவிதமான மரபுகள் பற்றியும் அறிந்து, அதனை அப்படியே முறைப்படுத்தி எழுத்துப் பூர்வமாக அளிக்கும் ஆவணமே இனவரைவியல்”[10] என்று செள. சுரேஷ்குமார் குறிப்பிடுகிறார்.

ஆகவே இன வரைவியல் என்பது ஓர் இனத்தின் அல்லது ஒரு சமூகத்தின் வாழ்வியல் கூறுகளை விளக்கிக் கூறுவதே என்பதை அறியமுடிகிறது.

### 1.2.2 மேலைநாட்டு அறிஞர்களின் கருத்து

இனவரைவியல் என்பது “ஒரு குறிப்பிட்ட மானிட சமுதாயம் ஒன்றினைப் பற்றி விவரிக்கும் ஆராய்ச்சியாகும்”[11] என்கிறது பிரிட்டானிகா தகவல் களஞ்சியம். எனவே மானிடச் சமுதாயத்தைப் பற்றிய உண்மைகளை விவரித்து எழுதுவதே இனவரைவியல் என்பதை அறியமுடிகிறது.

பிரிட்டானிக்கா அகராதியைத் தொடர்ந்து மேலை நாட்டு அறிஞர்களான,

1. ஹெர்கோவிஸ்

2. புரூன்

3. பெடன் மேன்

4. ஏகார்

5. லன்ச்

6. காதரின் கா.்.ப்

போன்றோர் பல வரையறையைத் தந்துள்ளனர்.

**ஹெர்கோவிஸ் ( Herkovits)**

“ஏதேனும் ஒரு பண்பாட்டைப் பற்றி எழுதப்பட்ட வரைவு அல்லது விளக்கமே இனவரைவியல்”[12] என்று குறிப்பிடுகிறார்.

**புரூன் (Brunvand)**

“ஒரு குறிப்பிட்ட மக்கள் குழு அல்லது வட்டாரத்தில் காணப்படும் அனைத்துவகையான மரபுகள் பற்றி மேற்கொள்ளப்படும் விளக்கமுறை ஆய்வே இனவரைவியல்”[13] என்று மொழிந்துள்ளார்.

**பெடன் மேன் (Feterman)**

“ஒரு குழு அல்லது பண்பாட்டைப் பற்றி விளக்கிக் கூறும் வருணனை, கலை மற்றும் அறிவியல் தான், இனவரைவியல் என்றும், இந்த இனக்குழு விவரிப்பானது எங்கோ ஒரு நாட்டில் உள்ள சிறிய இனக்குழுவைப் பற்றியதாக இருக்கலாம்”[14] என்றும் விளக்கமளித்துள்ளார்.

## ஏகார் (Ager)

“நமக்கு மிகவும் அந்நியமான உலகங்களோடு போராடி அவற்றைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முக்கியத்துவம் அளிக்கக்கூடியச் சமூக ஆய்வு முறையை இனவரைவியல் என்றோ, நாட்டார் பார்வையிலான விவரிப்பு (Folk description) என்றோ அழைக்கின்றனர்”[15] என்று வரையறைப்படுத்தியுள்ளார்.

## லன்ச் (Lunch)

“குறிப்பிட்ட இனத்தைப் பற்றிய நிகழ்கால நிகழ்வுகளையும் எதிர்காலத்தையும் சேர்த்து ஆராய்வது இது கலாச்சாரப் பழக்கவழக்கங்களை முன்வைப்பது, இனவரைவியல்”[16] என்று தமது கருத்தை முன்வைத்துள்ளார்.

## காதரின் கா.ஃ.ப்

இனவரைவியலை உள்ளடக்கிய மானுடவியலை “ஏகாதிபத்தியத்தின் குழந்தை”[17] என்று காதரின் கா.ஃ.ப் கூறுவதாகச் சிவசுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

இக்கருத்துக்களின் அடிப்படையில் இனவரைவியல் என்பது மானுடவியலின் ஒரு முக்கியமான அங்கமாகத் திகழ்கிறது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. எனவே இனவரைவியல் என்பது ஒரு குறிப்பிட்ட இனமக்களைப் பற்றிய உறவுநிலை, பண்பாடு, வாழ்க்கைமுறை, தொழில்முறை போன்றவற்றை வரையறுத்துக் கூறுதல் என்பதே முடிவான கருத்தாக அமைகிறது எனலாம்.

### 1.3 இலக்கியமும் இனவரைவியலும்

காலந்தோறும் தமிழில் இலக்கியங்கள் தோன்றிக் கொண்டுதான் இருக்கின்றன. இத்தகைய இலக்கியங்கள் மனித சமூகத்தின் வெளிப்பாட்டை விளக்குவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளன. இவ்விலக்கியங்களை இனவரைவியல் ஆய்விற்கு உட்படுத்தும்போது அக்காலத்தில் வாழ்ந்த சமூக மக்களைப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. இதன் வழி இனவரைவியலுடன் இலக்கியம் எப்பொழுதும் ஒன்றியே இருக்கும் நிலையைக் காணமுடிகிறது.

இலக்கியம் என்பது காலத்தைக் காட்டும் கண்ணாடி. ஒரு காலத்தில் எழும் இலக்கியம் ஏதேனும் ஒரு கதை மாந்தரை மையமாகக் கொண்டு எழுந்தாலும் அந்தத் தனிமனிதரைப் பற்றி மட்டும் பேசுவதில்லை. அக்காலத்தில் அவனைச் சுற்றி வாழ்ந்த அவனுடைய உறவுமுறைகளைப் பற்றியும், அவன் வாழ்ந்த புவியமைப்பு, அவன் செய்த தொழில் பற்றியும் பேசுகிறது. எனவே, இலக்கியம் என்பது ஒரு காலக்கட்டத்தில் வாழ்ந்த மனித இனம் பற்றிய வாழ்வியல் கூறுகளை அறிந்து கொள்ள அடிப்படையான ஒன்றாக அமைந்துள்ளது எனலாம்.

ஒரு படைப்பாளன் தன்னுடைய படைப்பை உருவாக்கும் போது ஏதேனும் ஒரு கதாபாத்திரத்தை மையமாக வைத்துப் படைத்தாலும், தான் வாழ்ந்த இடம், சுற்றுச்சூழல், பழக்கவழக்கம், வாழ்வியல்முறைகள் போன்ற தன்னைச் சுற்றியுள்ள அனைத்தையும், அந்நூலில் இடம்பெறச் செய்கிறான். எனவே இலக்கியம் என்பது ஒரு காலக்கட்டத்தில் வாழ்ந்த மக்களைப் பற்றிப் பேசும் போது அக்காலக்கட்டத்தைப் பற்றியும், அதில் வாழ்ந்த

மக்கள் வாழ்வியல் பற்றியும் அவர்களின் பழக்கவழக்கங்கள், உணவுமுறைகள் மட்டுமின்றி பிறவற்றையும் அறிந்துக்கொள்ளச் சான்றாதாரமாக அமைகிறது. இதன்காரணமாக இலக்கியம் இனவரைவியலின் ஒரு முக்கிய அங்கமாகத் திகழ்வதை உணரமுடிகிறது.

இலக்கியவாதிகளுக்கும், இனவரைவியலாளர்களுக்கும், ஒரு பண்பாட்டைப் பற்றி ஆராய முற்படும்பொழுது அந்தப் பண்பாட்டைச் சேர்ந்த மக்கள் குழுவினர் பின்பற்றும் உறவுமுறைகள், ஒழுங்கு அமைப்புகள் அவர்களின் உணவுமுறைகள், உணவைச் சமைக்க அவர்கள் கையாளும் முறைகள், வாழக்கையைச் சுற்றி நடக்கும் சடங்கு முறைகள் போன்ற பண்பாட்டுக் கூறுகளை ஆராய்வது எவ்வளவு முக்கியமோ அதே அளவிற்கு அக்காலக்கட்டத்தில் தோன்றிய இலக்கியத்தையும் இனவரைவியல் முறையில் ஆராய்வது அவசியமானதும் முக்கியமானதுமாக அமைகிறது.

உலா என்னும் சிற்றிலக்கியங்களில் முக்கிய கதாபாத்திரமாக அதில் உலாவரும் தலைவனே இருக்கிறான். அவனை மையமாக வைத்துப் பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்ற ஏழு பருவ மகளிரும் காதல் கொள்வதாக அமைக்கப்பட்டுள்ளது. ஆசிரியர் அந்தத் தலைவன் பற்றிக் கூறும்போது அவன் தோன்றிய குடி, அவனுடைய முன்னோர்கள், அவர்களின் சிறப்புகள் பற்றியும் கூறுகிறார். அதைப்போன்று ஏழு பருவ மகளிர் பற்றிக் கூறும் போது அவர்கள் அணிந்திருக்கும் ஆடை, அணிகலன், அவர்கள் நின்று கொண்டிருக்கும் இடம், அவ்விடத்தின் காலநிலை, மரம், செடி, கொடிகள் ஆகியவற்றைப் பற்றியும் கூறியிருக்கிறார்.

இதன்வழி இலக்கியம் என்பது தனிமனிதனைச் சார்ந்தது அல்ல என்பதைத் தெளிவாகஉணரமுடிகிறது.

### 1.3.1 இலக்கியமும் இனவரைவியலும் ஒன்றுபடும் இடங்கள்

இலக்கியமும் இனவரைவியலும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை ஆகும். இரண்டுமே ஒருவர் ஒரு சமூகத்தில் தான் பெற்ற அனுபவங்களை எழுத்து வடிவில் அமைப்பதே ஆகும்.

இலக்கியவாதியும், இனவரைவியலாளரும் தம் முன்னோர்களின் வழியில் செயல்படுகின்றனர் எனலாம். இலக்கியவாதி ஓர் இலக்கியத்தை எழுதும்போது முன்னோர்களைப் பற்றிக் கூறலாம் அல்லது கூறாமலும் இருக்கலாம். ஆனால் இனவரைவியலாளன் தன்னுடைய ஆய்வில் முன்னோர்களைத் தவறாமல் குறிப்பிடுவது அவசியமானதாகும்.

ஆதலால் இலக்கியமும் இனவரைவியலும் ஒரு சில இடங்களில் தங்களுக்குள் ஒன்றுபட்டும், ஒரு சில இடங்களில் தங்களுக்குள் வேறுபட்டும் இருக்கின்ற தன்மையை அறியமுடிகிறது.

ஓர் இனம் குறித்த வேறு ஆவணங்கள் எதுவும் கிடைக்கப்பெறாத நிலையில் கடந்த காலத்தைப் பற்றிய செய்திகளையும் அக்கால கட்டத்தில் வாழ்ந்த மக்களின் சமூகப்பண்பாட்டைப் புரிந்துக் கொள்வதற்கும், ஆராய்வதற்கும் அச்சமூகத்தில் தோன்றும் கலையான இலக்கிய வடிவங்களே முக்கிய ஆதாரமாகப் பயன்படுகின்றன. எனவே இனவரைவியலாளர்கள் இனவரைவியல் ஆய்வை மேற்கொள்ளும்போது அவ்விலக்கியத்தையும் ஆராய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது எனலாம்.

மேற்கூறியவற்றின் மூலம் கடந்த காலத்தைப் பற்றிய இனவரைவியல் பற்றிய செய்திகளின் மூல ஆதாரங்களாக இலக்கியங்கள் அமைந்துள்ளன என்பதைத் தெளிவாக உணரமுடிகிறது.

### 1.3.2 இலக்கியம் விளக்கம்

இலக்கியம் என்பது மக்களின் அனுபவங்களை ஆவணப்படுத்தும் கருவியாகவும், அவர்தம் உணர்வுகளை வெளிப்படுத்தும் கலைகளுள் ஒன்றாகவும் திகழ்வதை அறிய முடிகிறது. காலந்தோறும் சூழலுக்கு ஏற்ப பாடுபொருள் அமைப்பிலும் வடிவ அமைப்பிலும் இலக்கியங்கள் மாறிவருகின்றன. எடுத்துக்காட்டாக முதலில் மரபுக்கவிதைகள் தோன்றின. அவை வசனநடையில் அமைந்திருந்தன. அதன் பின்பு புதுக்கவிதை அமைப்பில் ஹைக்கூ, சென்ட்ரீயூ போன்ற கவிதை வடிவங்கள் தோன்றின. இவ்வாறாக இலக்கியங்கள் காலந்தோறும் மாறுபட்டு வருகின்றன.

இலக்கியம் = இலக்கு+இயம் என்றும் பிரிக்கலாம். அதாவது இலக்கு - நோக்கம், கொள்கை, குறிக்கோள், இலட்சியம் எனும் கருத்துக்களையும் இயம்-இயம்புவது, கூறுவது, வெளிப்படுத்துவது எனும் கருத்துக்களையும், உணர்ந்த உணர்ச்சிகளையும் பிறருக்கு எடுத்துக்கூற உதவுகின்ற ஒரு கருவி மொழியாகும். அம்மொழியைப் பேசுகின்ற மக்களின் உணர்வுகளையும், கொள்கை முதலானவற்றையும் எடுத்துக்கூறுவது இலக்கியமாகும். தமிழில் இலக்கியம் என்று வழங்கப்பெறுவது ஆங்கிலத்தில் ‘Literature’ என்று குறிப்பிடப்படுகிறது.

இலக்கியம் என்னும் கிளவிக்கு, ‘‘சிறந்த கருத்துக்கள் அடங்கிய நூல்’’[18] என்கிறார் எமர்சன் அவர்கள்.

தமிழ் லெக்சிகன் அகராதி, இலக்கியம் என்பதற்கு ‘‘இலக்கணம் அமைந்தது’’[19] என்று பொருள் தருகிறது. மேலும், ‘‘இலக்கணம் அமைந்த நூல் எடுத்துக்காட்டும் பகுதி என்றும், இலக்கணம் அமையப்பெற்ற பொருள்’’[20] என்றும் இலக்கியத்திற்குக் கழகத்தமிழ் அகராதி பொருள் தருகிறது.

இலக்கியம் என்பதற்கு, ‘‘இலக்கண நூற்படி முன்னோர்கள் தந்த செய்யுள் உதாரணக் குறி’’[21] என்று நா. கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழி அகராதி பொருள் தருகிறது. தமிழ் - தமிழ் அகராதி, இலக்கியம் என்ற கிளவிக்கு, ‘‘ஆன்றோர் நூல், இலக்கு, கலையியல் வாய்ந்த எழுத்தாண்மை’’[22] என்று விளக்கம் அளிக்கிறது.

இலக்கியம் எனும் பதத்திற்கு, ‘‘உதாரணம் காட்டுவது’’[23] என்று அகராதி நிகண்டு விளக்கம் தருகிறது.

அந்தந்தக் கால மக்களின் வாழ்க்கைச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அதனைப் பற்றிய பாடுபொருள்களும் வேறுபடுகின்றன. காதல் மற்றும் வீரத்தை அடிப்படையாக வைத்துச் சங்க இலக்கியங்கள் தோன்றின. அதன் பின்பு பக்தியை மையமாகக் கொண்ட பக்தி இலக்கியமும், பின்னர் சாதாரண மக்களைப் பாடுபொருளாகக் கொண்ட சிற்றிலக்கியம் போன்ற பிறவகையான இலக்கியங்களும் தோன்றின. இவ்வாறாக ஒவ்வொரு

காலக்கட்டத்திலும் தோன்றிய இலக்கியங்கள் அந்தந்தக் காலக்கட்டத்தில் வாழ்ந்த மக்களின் பழக்கவழக்கங்கள், பண்பாடு, சடங்குகள் மற்றும் வாழ்க்கை முறையினை வெளிப்படுத்திக்காட்டுவதாக அமைந்துள்ளன.

அறிஞர் பலரின் விளக்கத்தின் வழி இலக்கியம் என்பது ஓர் ஒழுங்குமுறையோடு மக்களின் வாழ்வியல்கூறுகளையும் அம்மக்களின் பண்பாட்டுச் சிறப்புகளையும் அழியாமல் பாதுகாத்து மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தும் கலைகளுள் ஒன்றாகும் என்பதைத் தெளிவாக அறியமுடிகிறது.

### 1.3.2.1 இலக்கியம் பற்றிய தமிழறிஞர்கள் கருத்து

இயற்கையின் ஓர் அங்கமாகவே படைக்கப்பட்ட மனித இனம் சமூகத்தேவையின் அடிப்படையில், தோன்றிய மொழியாலும், அதன் சிந்தனைத் திறனாலும் உருவாக்கிக் கொண்ட கலையே இலக்கியம் என்று கூறலாம்.

முதன்முதலில் எழுந்த இலக்கண நூலான தொல்காப்பியத்திலோ, சங்க இலக்கியங்களிலோ ‘இலக்கியம்’ என்ற சொல் பயின்று வரவில்லை. பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த நன்னூல் என்னும் இலக்கண நூல், இலக்கியம் என்பதற்கு விளக்கம் அளிக்கிறது.

‘பல்வகை தாதுவினுயிர்க் குடல் போற்பல
சொல்லாற் பொருட் கிடனாக வுணர்வின்
வல்லோரணி பெறச் செய்வன செய்யுள்’ (நன்.பெயர்-10)

என்று நன்னூல் ஆசிரியர் பலவகைத் தாதுவினால் ஆன உடலுக்கு உயிர் இருப்பது போன்று, பல்வேறு வகையான சொற்பொருள்கள் உணர்வுக்கு இடமாக அமைந்து வருவது செய்யுள் ஆகும் என்று கூறுகிறார். இதைப்போன்று, இதற்கு முன்பு எழுந்த இலக்கண நூலான தொல்காப்பியத்தில், **"எல்லே இலக்கம்"**[24] என்ற சொல் பயின்று வந்துள்ளது. இதற்கு உயர்ந்த குறிக்கோளை உள்ளடக்கி வாழ்க்கைக்கு விளக்கம் தருவது இலக்கியம் என்றும் கூற வாய்ப்புள்ளது என்று உரையாசிரியர் விளக்கம் தந்துள்ளார்.

### ஞா. தேவநேயப்பாவாணர்

''இலக்கு - இலக்கியம், இலக்கு - இலக்கணம், இலக்கு - குறி, குறிக்கோள் சிறந்த வாழ்க்கைக் குறிக்கோளான அறத்தை எடுத்துக்காட்டுவது இலக்கியம்''[25] என்று குறிப்பிட்டுள்ளார்.

### கா. சுப்பிரமணிய பிள்ளை

''இலக்கியம் என்பது மக்களுடைய விழுமிய கருத்துக்களைச் செவ்விய சொற்களால் விளக்கும் கருவியாகும்.''[26] என்று குறிப்பிட்டுள்ளார்.

### வையாப்புரிப்பிள்ளை

இலக்கியம் என்பது, ''நுண்கலைகளில் ஒன்று. அறிவும் மனோபாவமும் கலந்து தொழிற்பட்டு மக்களுக்கு இன்பத்தை விளைவிக்கும், சிறந்த கலைகள் நுண்கலைகள் எனப்படும். அதில் இலக்கியம் என்பது அழகு உணர்ச்சி ததும்ப எழுதியனவற்றையே குறிக்கும்''[27] என்று கூறியுள்ளார்.

### 1.3.2.2 மேலைநாட்டு அறிஞர்களின் கருத்து

மேலைநாட்டு அறிஞர்கள் தமிழ் இலக்கியம் மீது கொண்ட ஆர்வம் காரணமாகப் பல தமிழ் இலக்கியங்களைத் தங்கள் மொழிகளில் மொழி பெயர்த்துள்ளனர். அது மட்டுமின்றி இலக்கியம் என்ற சொல்லிற்கு பல அறிஞர்கள் விளக்கங்களையும் அளித்துள்ளனர்.

சி.டி வின் செஸ்டர்

“அழகு, கவிதை, கற்பனை, குறிக்கோளியல் முதலியவற்றை எங்ஙனம் துல்லியமாக விளக்க இயலாதோ, அவ்வாறே இலக்கியத்தையும் விளக்க இயலாது”[28] என்று விளக்கம் அளித்துள்ளார்.

ஆகவே இலக்கியம் என்பது நாட்டுக்கு நாடு மொழிக்குமொழி வேறுபடுகிறது என்பதை அறிந்துகொள்ள முடிகிறது.

இதன்வழி ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சார்ந்த மக்களின் வாழ்க்கைமுறையையும் அவர்களின் உளச்சிந்தனையையும் நம் கண்முன்னே நிறுத்துவதே இலக்கியம் என்பதைத் தெளிவாக அறியமுடிகிறது.

### 1.3.3 காலந்தோறும் இலக்கியமும் இனவரைவியலும்

காலந்தோறும் வாழும் மக்களின் மனவேறுபாடு மற்றும் சூழ்நிலைகளுக்கு ஏற்ப, இலக்கியங்களும் அதன் கதைக்களங்களும் வேறுபடுகின்றன. இவ்வாறான வேறுபாடே ஓர் இலக்கியத்தை மற்றொரு இலக்கியத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டக் காரணமாக அமைந்துள்ளது எனலாம்.

தொடக்ககாலம் முதல் இக்காலம் வரை தமிழில் எண்ணிக்கையில் அடங்காத இலக்கியங்கள் பல தோன்றியுள்ளன. அவற்றின் முக்கியத்துவம், கால மாற்றத்திற்கும் சூழலுக்கும் ஏற்ப மாறுபடும் தன்மை உடையனவாக உள்ளன. இத்தகைய மாறுபாடுடைய இலக்கிய வகைகளை,

1. சங்க இலக்கியம்
2. அற இலக்கியம்
3. காப்பிய இலக்கியம்
4. சிற்றிலக்கியம்
5. தற்கால இலக்கியம்

என வகைப்படுத்தி அறியலாம்.

### 1.3.3.1 சங்க இலக்கியம்

சங்க காலத்தில் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்று இருபெரும் நூல் தொகுதிகள் தோன்றின. அவை சங்ககாலத்தில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் கூறுகளைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன.

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையில் அன்பின் ஐந்திணை என்று கூறப்படும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளின் அடிப்படையில் ஐந்து நிலமக்களின் வாழ்க்கைமுறை, தொழில்முறைகள் கூறப்பட்டுள்ளன. பத்துப்பாட்டில் பாணர், பொருநர், கூத்தர், விறலியர் ஆகிய இனமக்களின் வாழ்க்கைமுறை தெளிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இவ்விரு பாட்டு, தொகை நூல்களே சங்ககால மக்களின் உணவுமுறை, பழக்கவழக்கம், அவர்களின் அறிவுத்திறன்,

புவிச்சூழ்நிலை, நம்பிக்கை ஆகியவற்றை எடுத்துரைப்பதில் முக்கியப் பங்காற்றுகின்றன எனலாம்.

சங்க நூல்களில் புறநானூறு, பதிற்றுப்பத்து போன்ற புற இலக்கியங்கள் மூலம், அக்காலத்தில் ஆட்சி செய்த மன்னர்களின் ஆட்சிமுறை, போர்முறை மற்றும் அவர்களின் கொடைத்தன்மை, வீரம் ஆகியவற்றை அறிய முடிகிறது.

### 1.3.3.2 அற இலக்கியம்

சங்க இலக்கியத்திற்குப் பின்னர் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் அறஇலக்கியங்கள் என்றழைக்கப்படுகின்றன. இவை அறநெறிகளையே முதன்மை நோக்கமாகக் கொண்டு, சங்ககாலத்தில் நிலவிய களவு, கள் போன்றவற்றைப் பெருங்குற்றம் என்று கூறுகின்றன.

அறநூல்களில் திருக்குறளும் நாலடியாரும் பெரிதும் போற்றப்படுபவையாகும். இதனை,

**'ஆலும் வேலும் பல்லுக்குறுதி**
**நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி'**

என்னும் பழமொழி தெளிவுப்படுத்துகிறது.

திருக்குறள் உலகப்பொதுமறை என்னும் சிறப்புப் பெயர் பெற்றது. இது பல உலகமொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்ட ஒன்று. இந்நூல் மக்களுக்குச் சிறந்த அறக்கருத்துக்களை எடுத்துரைக்கின்றது. உதாரணமாக,

‘எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை

செய்ந்நன்றி கொன்ற மகற்கு’ (குறள்: 110)

என்னும் குறள் எத்தகைய செயலைச் செய்தவருக்கும் இவ்வுலகில் மன்னிப்பு உண்டு. ஆனால் ஒருவர் செய்த நன்றியை மறந்தவருக்கு மன்னிப்பு இல்லை என்று கூறுகிறது.

இதே காலத்தில் எழுந்த கபிலரின் இன்னாநாற்பது என்னும் நூல், மனித வாழ்க்கைக்குத் துன்பம் தருபவை எவை என்பதைக் கூறுகிறது.

‘ஆற்றல் இலாதான் பிடித்த படை இன்னா

நாற்றம் இலாத மலரின் அழகு இன்னா’ (பா.7) என்கிறது.

இதற்கு எதிர்மாறாக எழுந்த பூதஞ்சேந்தனாரின் இனியவை நாற்பது என்னும் நூல். இதில் மனிதவாழ்க்கைக்கு இனிமை பயக்குப்பவை எவை என்பதை

‘குழவி தளர்நடை காண்டல் இனிதே

அவர் மழலை கேட்டல் அமிழ்தின் இனிதே’ (பா: 14)

என்னும் செய்யுள் அடிகள் மூலம் காணமுடிகிறது.

### 1.3.3.3 காப்பிய இலக்கியம்

அற இலக்கியத்திற்குப் பின்பு தோன்றிய காப்பிய இலக்கியமான ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான, சிலப்பதிகாரத்தில் கண்ணகி, கோவலன், மாதவி போன்றோர் முக்கிய கதாபாத்திரங்களாகக் குறிக்கப்பட்டுள்ளனர். எனினும் கண்ணகி மற்றும் கோவலனை அறிமுகப்படுத்தும்போது வணிகர் குல மக்களின் வாழ்க்கைமுறை பற்றிக் கூறிய பின்பே கோவலன் மற்றும்

கண்ணகியை அறிமுகம் செய்கிறார் ஆசிரியர். அதுமட்டுமின்றி காப்பியத்தில் கணிகையர் குலம், ஆயர்இனமக்கள், துறவிகள், குறவர் போன்ற இனமக்களின் இனவரைவியல் முறையையும், பிறகுடியினரின் இனவரைவியல் முறைகளையும் காணமுடிகிறது. மணிமேகலையில் அக்காலப் பௌத்தத் துறவிகளின் வாழ்க்கை முறையைத் தெளிவாக அறியமுடிகிறது.

### 1.3.3.4 சிற்றிலக்கியம்

சிற்றிலக்கிய வகைகள் தொண்ணூற்றாறு எனச் சதுரகராதி எடுத்துரைக்கிறது. சிற்றிலக்கிய நூல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு இனமக்களைப் பற்றி விவரிப்பதாக அமைகிறது.

சிற்றிலக்கியங்களுள் ஒன்றான முக்கூடற்பள்ளு என்னும் பள்ளுஇலக்கியம் உழவுத்தொழில் சிறப்பையும், அதனை மேற்கொள்ளும் பள்ளர்களின் வாழ்வையும், நிலப்பிரபுத்துவ அமைப்பையும் வெளிப்படுத்துவதாக அமைக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

குற்றாலக்குறவஞ்சி என்னும் இலக்கியம் குறவர் இனமக்களின் வாழ்க்கை முறைகளையும் அவர்களின் தொழில் முறையான குறிசொல்லுதல், தேன்எடுத்தல் போன்றவற்றைப் பற்றியும், மலையின் இயற்கைவளம் மற்றும் அங்குவாழும் உயிரினங்கள் பற்றியும் எடுத்துக் கூறுவதாக அமைந்துள்ளது.

பரணி என்னும் இலக்கியத்தில் மன்னனின் வீரம், வெற்றி மற்றும் அவனுடைய போர்க்களம் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன. பிள்ளைத்தமிழ் என்ற இலக்கியத்தில் குழந்தையின் மூன்றாம் மாதம் தொடங்கி இருபத்தியோறாம் மாதம் வரை நிகழும் செய்திகள்

இடம்பெற்றுள்ளன. இதில் பாட்டுடைத் தலைமக்களின் தந்தை, தாய், பாட்டன், பாட்டி ஆகிய சுற்றத்தாரைப் பற்றிப் பாடிய பின்பே குழந்தை பற்றிப் பாடுவதை உணரமுடிகிறது.

### 1.3.3.5 தற்கால இலக்கியங்கள்

காலந்தோறும் படைக்கப்பெறும் இலக்கியங்களில் ஒரு குறிப்பிட்ட பண்பாட்டை உடைய சமூகத்தைப் பற்றிய இனவரைவியல் செய்திகள் இடம்பெறுதல் என்பது ஒரு முக்கிய அங்கமாகவே இருந்து வந்துள்ளன.

தற்காலத்தில் வரும் நாவல்கள், சிறுகதைகள் போன்றவை, ஒரு சமூகத்தில் வாழும் மக்களின் வாழ்வியல் கூறுகளை எடுத்துக் கூறுவதில் முக்கியப் பங்காற்றுகின்றன. தோட்டியின் மகன் என்னும் நாவலானது துப்புரவுத்தொழில் செய்யும் விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் முறைகளைப் பற்றிப் பேசுகிறது.

சல்மாவின் இஸ்லாமிய நாவலான இரண்டாம் ஜாமங்களின் கதை என்ற நாவல் இஸ்லாமிய வாழ்க்கை முறைப்பற்றிக் கூறுகிறது. இச்சமூகத்தில் இருக்கும் கட்டுப்பாடுகள் போன்றவற்றைப் பற்றியும் பேசுகிறது.

வ.வே.சு ஐயரின், ‘குளத்தங்கரை அரசமரம் சொன்ன கதை’ என்னும் சிறுகதையானது பிராமணர்களின் வாழ்க்கை மற்றும் திருமணமுறை போன்றவற்றினைப்பற்றிப் பேசுகிறது.

இதன்படி, இலக்கியம் என்பது ஒரு காலத்தில் நடைபெறும் நிகழ்வுகளின் அடிப்படையில் அக்காலக் கட்டத்தைப் பற்றிய கருத்துகளைத்

தன்னகத்தே பதிவு செய்துள்ளது எனலாம். இவ்வகையில் இனவரைவியல் ஆய்வுகளும் ஒரு காலக்கட்டத்தில் நடைபெற்ற நிகழ்வுகளைப் பதிவு செய்கின்றன. எனவே இலக்கியம் என்பது இனவரைவியலைப் பற்றிய ஒரு முன்னோடி என்றே கூறலாம்.

### 1.3.4 இலக்கியமும் இனவரைவியலும் வேறுபடும் இடங்கள்

இலக்கியங்களில் ஓர் இனத்தின் இனவரைவியல் பற்றிய செய்திகள் ஏராளமாகக் காணப்பட்டாலும் ஒரு சில இடங்களில் இனவரைவியலில் இருந்து இலக்கியம் வேறுபட்டு நிற்பதையும் காணமுடிகிறது.

இலக்கியவாதி ஓர் இலக்கியத்தைப் படைக்கும் போது தான் கண்ட காட்சிகளுடன் சில புனைவுகளையும் கவிஞனின் கற்பனையில் தோன்றிய காட்சிகளையும் இலக்கியத்தில் பதிவு செய்கிறான். ஆகவே இலக்கியங்களில் கற்பனைக்கு இடம் இருப்பதை அறிய முடிகிறது.

ஆனால் இனவரைவியல் ஆய்வில் ஆய்வாளர் கற்பனையை எழுத இயலாது. அவர் எந்த இனக்குழுவைப் பற்றிய ஆய்வை மேற்கொள்கிறாரோ அந்த இனத்தைப்பற்றிய செய்திகளை உண்மைத்தன்மையுடன் அவ்வாறே எழுத வேண்டும் என்பது நியதியாக உள்ளது.

சில இலக்கியங்களை இலக்கியவாதி, தான் கேட்பவை மற்றும் பார்ப்பவற்றைக்கொண்டு கற்பனையிலேயே உருவாக்கி விட முடியும் ஆனால் இனவரைவியல் ஆய்வாளர் பார்ப்பது மற்றும் தான் கேட்ட சில செய்திகளை வைத்து எழுதமுடியாது. அவர் ஆய்வு மேற்கொள்ளும் அந்த இனத்தைப் பற்றிய நிலைத்த உண்மைத்தரவுகளைச் சேகரிக்க வேண்டியது அவசியமான

ஒன்றாகும். ஆனால் இலக்கியம் எழுதுவதற்கு இத்தகைய தரவுகள் தேவைப்படாத ஒன்றாக அமைகிறது.

தரவுகளைச் சேகரிக்க இனவரைவியல் ஆய்வாளர் தான் எந்த மக்களின் பண்பாட்டைப் பற்றி ஆய்வு செய்கிறாரோ அந்த மக்களுடன் அவன் தங்கியிருந்து அச்சமூகத்தில் தானும் ஓர் உறுப்பினராக மாறி பின்பு அவர்களைப் பற்றி முழுமையும் அறிந்து கொண்டு இனவரைவியல் ஆய்வை தயாரிக்க வேண்டிய நிலை இருப்பதைக் காணமுடிகிறது.

## 1.4 பாலை நிலம்

தமிழ் இலக்கியங்களின் ஐந்திணைப் பாகுபாடு என்பதை புவியியல் அடிப்படையில் தமிழகத்தின் நிலவெளியைப் பகுக்கின்ற முறையாகும். அவ்வகையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து வகையாக இலக்கியங்களில் பாகுபடுத்தப்படுகின்றன. இதில் பாலை என்பது தனி நிலமாக இல்லாமல் குறிஞ்சி மற்றும் முல்லை நிலங்களின் திரிந்த வடிவமாகக் கூறப்படுகிறது.

### 1.4.1 பாலைநில அமைப்பு

பாலைநிலம் எது என்பதைப் பற்றித் தெளிவான கருத்து இன்னும் உருவாகவில்லை. எனினும் பாலை நிலம் எது என்பதற்குச் சிலப்பதிகாரம் காடுகாண் காதை விளக்கம் தருகிறது. ஆனால் அதற்கு முன்பு எழுந்த இலக்கண நூலான தொல்காப்பியம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு வகையான நில அமைப்புகளைப் பற்றி மட்டுமே பேசுகிறது.

பின்னர் வந்த சங்க இலக்கியங்களில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து வகையான நிலத்திணையமைப்பைப் பற்றியும் அங்கு வாழ்ந்த மக்களைப் பற்றியும், நில அமைப்பு, தொழில்முறை, உணவுப் பழக்கவழக்கம், விருந்தோம்பல் முறைகள் ஆகியவற்றைப் பற்றியும் பேசுகின்றன.

பாலை நிலம் என்று தனி ஒரு நிலம் நிரந்தரமாக இல்லையென்றாலும் அகச்செய்திகளான தலைவன், தலைவி உடன்போக்கு, பொருள் தேடச் செல்லுதல் போன்ற அகத்திணைக்கு உரிய நிகழ்வுகளும் புறத்திணைக்கு உரிய போர் மேற்செல்லுதல் போன்ற நிகழ்வுகளையும் சங்க இலக்கியங்கள் பாலைத்திணைக்கு உரியதாகக் கூறுகின்றன. பாலைத் திணைப் பாடல்களில் அந்நிலம் பாழ்நிலம் என்றும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

### 1.4.2 பாலை நில உருவமாற்றம்

குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் மழையின்றி வேனிற்காலங்களில் வறட்சி அடைவதால் அதன் செழிப்புத் தன்மையில் இருந்து மாறி பாலை நிலமாக மாறுகிறது என்று சிலம்பு கூறுகிறது.

குறிஞ்சி, முல்லை ஆகிய இரண்டு நிலங்களும் முழுமையாக மழையை மட்டுமே நம்பியிருக்கக் கூடியவை ஆகும். மருத நிலம் போன்று குளங்களோ, ஏரிகளோ, கிணறுகளோ, மலைகளிலும் காடுகளிலும் அமைப்பது கடினம். ஆகவே குறிஞ்சி, முல்லை ஆகிய இரு நிலங்களும் மழையின்றி வறட்சிக் காலங்களில் அதன் தன்மையில் இருந்து முற்றிலும் மாறி வறண்ட பூமியான பாலை நிலமாக மாறியிருக்கக் கூடும் என்பதை அதன் கருப்பொருள் கொண்டு அறிய முடிகிறது.

### 1.4.3 பாலை நில மக்கள்

பாலை நில மக்களை எயினர், எயிற்றியர், மறவன், மறத்தி என்றும் விடலை, காளை என்றும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இதனை,

**'அரிதே விடலை இவள் ஆய்நுதற்கவினே'** (ஐங்.310)

**'வஞ்சினக் காளை'** (ஐங்.372)

**'கொடுவிற் எயினர்'** (அகம்.79)

**'துவர்செய் ஆடை செந்தொடை மறவர்'** (நற்.33)

என்னும் பாடல் அடிகள் மூலம் காணமுடிகிறது. மேலும் மறவர் என்ற சொல் நற்றிணையில் (பா.எ.48,86,148) ஆகிய பாடல்களிலும், ஐங்குறுநூற்றில் (பா.எ.352) பாடலிலும் காணக்கிடைக்கின்றன. இதைத் தவிர அகநானூறு போன்ற சங்க இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

வேட்டையாடுதலும் வழிப்பறி செய்தலும் இவர்களுடைய முக்கியத் தொழிலாகும். பாலைநிலமக்கள் வறுமையில் வாழ்ந்தாலும் பண்பில் சிறந்தவர்களாவே விளங்கியுள்ளனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது. இம்மக்களை,

1. பாலை நிலத் தலைமக்கள்
2. பிற மாந்தர்கள்

என்று பிரித்து ஆராயலாம்.

#### 1.4.3.1 பாலை நிலத் தலைமக்கள்

ஒரு நிலத்தின் தலைமக்களாகக் கருதப்படுவர்கள் தலைவன், தலைவி ஆகிய இருவருமே ஆவர். ஆனால் சங்க இலக்கியப் பாடல்களைக் கொண்டு

குறிஞ்சி நிலச் சமூகம், மருத நிலச்சமூகம், முல்லை நிலச் சமூகம், நெய்தல் நிலச் சமூகம் என்று தெளிவாக அடையாளப்படுத்திக் காட்டுவதைப் போன்று பாலை நிலத்தைத் தெளிவாக அடையாளப்படுத்திக் காட்டமுடியவில்லை. எனவே பாலை நிலம் நிரந்தரமற்ற நில அமைப்பை உடையது என்பதை அறிய முடிகிறது.

பெரும்பாலும் பாலைத்திணைப் பாடல்கள் குறிஞ்சி மற்றும் முல்லைத் திணை மாந்தர்களையே தலைவன் தலைவியாகக் கொண்டமைகின்றன எனலாம்.

### 1.4.3.1.1 தலைவன்

சங்க இலக்கியப் பாலைத்திணை பாடல்களில் சில பாடல்கள் குறிஞ்சி நிலத்தலைவர்களையே தலைமக்களாகக் கொண்டுள்ளன. அதற்கான ஒரு சான்றுப்பாடல்,

**'என் கைக் கொண்டு தன் கண்ஒற்றியும்**
**தன் கைக் கொண்டு என் நன்னுதல் நீவியும்**
**அன்னைப் போல இனிய கூறியும்**
**கள்வர் போலக் கொடியன்மாதே**
**மணியென விழிதரு மருவிப் பொன்னென**
**வேங்கை தாய ஓங்குமலை அடுக்கத்து'** (நற்.28)

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் நீலமணி போன்று ஓடிவரும் அருவியையும், பொன் போன்று உதிர்ந்து கிடக்கும் வேங்கை மலரையும் மேகத்தைத் தொடும் அளவிற்கு உயர்ந்திருக்கும் மூங்கிலையும் உடைய மலைநாட்டுத் தலைவன் நம்மைத் தலையளி செய்த நாளில் அதாவது முகம் மலர்ந்து

என் கைகளைத் தானே எடுத்துத் தன் கண்ணில் ஒற்றிக் கொண்டான். தன் கையால் என் நெற்றியைத் தடவிவிட்டும் அன்பு காட்டியவன் இன்று கள்வன் போல் கொடுமை செய்பவனாக உள்ளான் தோழி எனத் தலைவனின் பொருள்வயிற் பிரிவு பற்றிக் குறிப்பிடுகிறது. இப்பாடலின் வழி குறிஞ்சி நிலத் தலைவனே பாலைநிலத் தலைவனாக சுட்டப்படுவதைக் காணமுடிகிறது.

பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலை நிலத்தின் உரிப்பொருளாகும். மருதம், நெய்தல் ஆகிய இரண்டு நில மக்களும் தலைவன் தலைவியை விட்டுப் பொருள்வயின் பிரிந்து சென்ற செய்திகள் இல்லை. ஏனெனில் இந்த நிலப்பரப்புகள் செழுமைத் தன்மை வாய்ந்தவை. ஆகவே இங்குள்ள மக்கள் அந்தந்த நிலத்தில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டே வாழ்ந்து வந்துள்ளனர்.

பாலை நிலம் அவ்வாறு இல்லாமல் மிகவும் வறட்சியான பகுதியாகும். அங்குள்ள மக்களில் சிலர் களவுத்தொழிலான ஆறலைத்து அதாவது பாலைநிலம் வழிச் செல்வோரிடமிருந்து வழிப்பறி செய்து வாழ்ந்து வந்தாலும் இதற்குப் பயம் கொண்டவர்கள் பொருள் தேடச் செல்வதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றிருக்கக்கூடும் என்பதை அறிய முடிகிறது.

மேலும் மலைநாடனே நீ பாலை வழியில் பிரிந்து சென்றால் தலைவி வருந்துவாள் எனத் தோழி, தலைவனிடம் குறிப்பிடுவதை,

> **'அருஞ்சுரம் செல்வோர் சென்னிக் கூட்டும்**
> **அவ்வரையிறங் குவையாயின்**
> **மைவரை நாட வருந்துவள் பெரிதே'** (ஐங்.301)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

இவை மட்டுமின்றி வேறு சில பாலைத் திணைப் பாடல்களிலும் தலைவனை இறுவரைநாடன் (ஐங்.309) என்றும் நல்வரைநாடன் (ஐங்.392) என்றும் குறிப்பிட்டிருப்பது கவனத்தில் கொள்ளத்தக்கதாகும். இவ்வாறாக தலைவர்கள் மலைநாட்டவர்களாகக் காட்டப் பெற்றிருப்பதைப் போன்றே தலைவியரும் மலைநாட்டவர்களாகவே காட்டப் பெற்றுள்ளனர் என்பதன் மூலம் குறிஞ்சி நிலமே வேனிற்காலத்தில் பாலை நிலமாக மாறியிருக்கக் கூடும் என்பதை அறிய முடிகிறது.

1.4.3.1.2 தலைவி

பெண் இன்றி இவ்வுலகம் இல்லை. பெண் இல்லையேல் இவ்வுலகில் உயிர்கள் பிறப்பெடுப்பது இல்லை. இத்தகைய பெருமைக்கு உரியவள் பெண். அகவாழ்வில் ஆண், பெண் இருவர் சேர்ந்து வாழ்வதாலே வாழ்க்கை முழுமையடைகிறது எனலாம். சங்க இலக்கியங்களும் தலைவன், தலைவி, இருவரும் சேர்ந்து வாழ்ந்த அகவாழ்க்கை பற்றிக் கூறுகின்றன. இதில் பாலை நிலத்தில் வரும் தலைவியைப் பற்றிக் கூறும் போது அவளுக்கு உவமையாகக் கூறப்படுவன குறிஞ்சி நிலத்தில் உள்ளவையும் முல்லை நிலத்தில் உள்ள கருப்பொருள்களுமே ஆகும். இதனைப் பின்வரும் பாடல் மூலம் அறிய முடிகிறது.

**‘எரி கவர்ந்த உண்ட என்றூழ் நீள் இடைச்**
**சிறிது கண்படுப்பினும் காண்குவென் மன்ற**
**நள்ளென் கங்குல் நளிமனை நெடு நகர்**
**வேங்கை வென்ற கணங்கின்**
**தேம்பாய் கூந்தல் மா அயோளே’** (ஐங்.324)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல்வரிகளின் ஆசிரியரான ஓதலாந்தையார் காட்டுத்தீ கவர்ந்து உண்ட வெயில் மிகுந்த நீண்டவழியில், உள்ளார் இடத்தில் தலைவன் உடல் களைப்பின் காரணமாகச் சிறிது நேரம் தங்கியிருந்த பொழுதிலும் அவன் வேங்கைப் பூவை வென்ற கவர்ச்சியான தேமலை உடைய, தேன் சொட்டும் பூக்களைத் தன்தலையில் சூடிய என் காதலியை என் மனையில் இருப்பது போல் கண்டேன் என்று கூறுவதாகக் காட்டுகிறார்.

மேற்கூறிய பாடலில் தலைவியின் உடம்பில் உள்ள தேமலுக்கு உவமையாகக் கூறப்பட்டிருக்கும் வேங்கைப் பூவானது குறிஞ்சி நிலத்திற்கு உரிய கருப்பொருளாகும். மேலும் குறுந்தொகையில் உள்ள பாலைத் திணைப் பாடலில் தலைவியைப் பற்றித் தோழி கூறும் போது மலையின் இரண்டு பக்கங்களும் அழகான வெண்கடம்ப மலர்களுடன் வேனிற் காலத்தில் காட்சி தருகின்றன. அத்தகைய மலரைப் போன்று நறுமணம் உடைய நெற்றியை உடையாய் என்று கூறுகிறாள். இதனை,

**‘நீர் வார் கண்ணை நீயவண் ஒழிய**
**யாரோ பிரகிறபவரே சாரற்**
**சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து**
**வேனில் அஞ்சினை கமழும்**
**தேஎூர் ஒண்ணுதல் நின்னொடுஞ் செலவே’** (குறுந்.22)

என்ற சேரமானெந்தை ஆசிரியரின் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது. மேலும் குறுந்தொகையில் வரும் 356வது பாடலில் செவிலி கூற்றாக அமையும் பாலைத்திணைப் பாடலில் செவிலித்தாய் தன் மகளுக்குப் பாலுடன் கலந்த உணவை ஊட்டிய செய்தியைக் கயமனார் கூறுகிறார்.

பால், முல்லை நிலத்தில் கிடைக்கக் கூடிய உணவுப் பொருள் என்பதைச் சங்க இலக்கியங்கள் பலவும் எடுத்துரைக்கின்றன.

ஆகவே பாலை நில மக்களாகச் சங்க இலக்கியத்தில் காட்டப் பெறுபவர்கள் குறிஞ்சி மற்றும் முல்லைத் திணைப் பகுதியைச் சார்ந்த மக்களே ஆவார்கள் என்பதையும் மழையில்லாத காரணத்தால் பாலை நிலமாக இவை இரண்டும் உருமாறியிருக்கக்கூடும் என்பதையும் அறிய முடிகிறது.

### 1.4.3.2 பாலைநில பிற மாந்தர்கள்

பாலை நிலத்தில் ஆறலைக் கள்வர்கள் இருந்துள்ளனர். இவர்கள் வழிச் செல்வோரைக் கொன்று அவர்களது உடைமைகளைக் கொள்ளை அடித்து அதனால் கிடைக்கும் பொருளைக் கொண்டு தங்கள் வாழ்கையை வாழ்ந்து வந்துள்ளனர். ஆனால் இவ்வாறு வழிப்பறி செய்தல் பாலை நில மக்களின் நிரந்தரமான தொழிலாக இருந்திருக்க முடியாது என்பதை அறிய முடிகிறது. பாலை நிலம் என்பது மணலும் மணல் சார்ந்த இடமும் ஆகும். மழையின்றி விவசாயம் செய்வது என்பது முடியாத ஒன்றாகும். ஆகவே இங்குள்ள மக்கள் வறுமையின் காரணமாகவே களவுத்தொழிலில் ஈடுபட்டனர் என்பதை மேற்கூறிய தலைமக்கள் கூற்று மூலம் அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் அக இலக்கியங்கள் மட்டுமே பாலை நில மக்களை ஆறலைத்தல் தொழில் செய்யும் அதாவது வழிப்பறி செய்யும் கள்வர்களாகக் காட்டுகின்றன. ஆனால் புறத்திணை இலக்கியங்கள் இம்மக்களைப் போர் மறவர்களாகவே காட்டுகின்றன. ஆனால் இரண்டிலுமே

இம்மக்கள் கொள்ளையடித்தலை மேற்கொண்டுள்ளனர் என்பதையே சுட்டிக் காட்டுகின்றன.

வழிப்பறி செய்து வாழ்க்கை நடத்துபவர்களாக அகத்திணை இலக்கியங்களும், போரிட்டு பகைநாட்டை வெற்றி கொண்டு அந்த நாட்டைச் சூறையாடி, அதில் கிடைக்கும் பொருளைத் தன் நாட்டிற்குக் கொண்டு வந்தனர் என்பதைப் புறத்திணை இலக்கியங்களும் எடுத்துக்காட்டுகின்றன.

ஆநிரை கவர்தல், வெட்சி என்னும் போர் மரபாகக் காட்டப்பட்டுள்ளது. கவர்ந்த ஆநிரைகளை மீட்டுவருதல் கரந்தையாகும். வெட்சி அகத்திணையில் குறிஞ்சிக்குப் புறம்பாகவும் காட்டப்பட்டுள்ளது. பாலை நிலம் இவ்விரு நிலமும் அதன் இயல்பில் இருந்து மாறுவதால் உருவானது. ஆகவே போர் செய்தவர்கள் பாலை நில மக்களே என்பதை அறியமுடிகிறது.

பாலை நில மக்கள் வழிப்பறி செய்யும் போதும் போர் மேற்செல்லும் போதும் பயன்படுத்திய ஆயுதங்களான வாள், வேல், வில் போன்றவை இரண்டு தொழில்களிலும் ஒன்றாகவே இருந்துள்ளன. இதனைப் பற்றிய விரிவான செய்திகள் பின்வரும் இயல்களில் கூறப்பட்டுள்ளன.

### 1.4.4 குறிஞ்சி முல்லைதான் பாலை நிலமா?

போர்க் காலங்களில் பகைவர் நாட்டில் உள்ள ஆநிரைகளைக் கவர்ந்தோராகக் கள்வர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளனர். இவர்களால் கவரப்பட்ட ஆநிரைகள் முல்லை நிலத்திற்கு உரியதாகவே இருந்திருக்க வேண்டும். சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ள திணை அமைப்புப்படி பசுக்கூட்டம் முல்லை நிலத்திற்கு உரிய விலங்காகவே கூறப் பெற்றுள்ள

வழி இதனை அறிய முடிகிறது. அதனைக் கவர்ந்து சென்றவர்கள் கானவர்களான குறிஞ்சி நில மக்களாகவே இருந்திருக்க வேண்டும். ஏனெனில் மழையின்றி முதலில் வறட்சி அடைவது குறிஞ்சி நிலமே, அதுமட்டுமின்றி முதலில் குறிஞ்சி நில மக்களே இனக்குழுக்களாகச் சேர்ந்து வாழ்திருக்க வேண்டும் என்பதையும் அறிய முடிகிறது.

வேட்டையாடி பகிர்ந்து உண்ணும் முறை குறிஞ்சி நில மக்களிடமே காணப்பட்டிருக்கிறது. இதைப் போன்றுதான், ஆறலைக் கள்வர்களான பாலை நில மக்களும் வழிப்பறி செய்து அதன்மூலம் கிடைத்த பொருள்களைத் தன் சுற்றத்தாருடன் பகிர்ந்து உண்டதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. குறிஞ்சி நில வேட்டுவர்கள் குறிபார்த்து அம்பு எய்யும் திறமையுடையவர்களைப் போன்று ஆறலைக் கள்வர்களான பாலைநில மக்களும் அத்திறமை உடையவர்களாவே விளங்கியமையைச் சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது.

குறிஞ்சி நில மக்கள் பரண் அமைத்துத் தங்கள் தினைபுனத்தினைப் பாதுகாத்த செய்தியைச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. பாலை நில மக்களான ஆறலைக் கள்வரும் பரண் அமைத்து, அதன் மீது அமர்ந்திருந்து வழிப்போக்கருக்காகக் காத்திருந்த செய்தியையும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

தொடக்கத்தில் முல்லை நிலத்தவருக்கும் குறிஞ்சி நில மக்களுக்கும் இடையே நடைபெற்ற ஆநிரைக் கவர்தல் தான் பிற்காலத்தில் இரு குழுவினருக்கும் இடையே போர் நடைபெறக் காரணமாக இருந்திருக்கக் கூடும். இலக்கண நூல்களும் ஆநிரை கவர்தலை வெட்சி என்னும் போர்

மரபாகவே கருதுகின்றன. ஆகவே பாலைத்திணைப் பாடல்களில் ஆறலைக் கள்வர்களாகக் காட்டப்பட்டுள்ள மறவர்கள் குறிஞ்சி நிலக் கானவர்களே என்பதையும் முல்லை நிலத்து ஆநிரைகளைக் கவர்ந்து சென்றவர்களும் இவர்களே என்பதையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

### 1.4.5 பாலை நில மக்களின் இனக்குழு வாழ்க்கைமுறை

பாலை நிலத்தில் மட்டுமே வழிப்பறி செய்து வாழ்க்கை நடத்தும் ஆறலைக் கள்வர்கள் பேசப்பட்டுள்ளனர். பாலை வழியே செல்லும் வணிகர்களையும் பொருள் தேடச் செல்பவர்களையும் வழிமறித்து அவர்தம் பொருள்களைக் களவாடுதலே அவர்களின் தொழிலாகும். வழிப்பறி செய்தல் என்பதைத் தனி ஒருவராகச் செய்ய இயலாத காரணத்தினாலும் அதற்கு முறையான திட்டமிடுதல் அவசியம் என்பதாலும் பாலைநிலத்தில் உள்ளவர்கள் இனக்குழுக்களாக வாழ்ந்துள்ளனர் என்பதைப் பண்டைய தமிழ் இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

ஆநிரை கவர்தலாகிய கொள்ளையடிப்பதில் தான் புறத்திணையாகிய வெட்சித்திணை பகுக்கப்படுகின்றது. சங்கப்பாடல்களில் ஆநிரைகளைக் கவர்ந்தவர்களாக ஆறலைக் கள்வர்களே இடம்பெறுகின்றனர். போரின் தொடக்கமாக அமையும் ஆநிரை கவர்தலே அதன்பின்பு வந்த நிலக் கொள்ளைக்கும் அடிப்படையாக இருந்துள்ளது என்பதனைத் தெளிவாகக் காண முடிகிறது.

ஆநிரைகளைக் கவர்ந்து வருதலே இவர்களின் இன்றியமையாத பணி. இரவு நேரங்களில் ஊர்களை அழித்து ஆநிரைகளைக் கவர்ந்து வருவர். அத்தகைய கால்நடைகளைச் சொத்து மிகுந்தவர், இல்லாதவர் என்ற

பாகுபாடு இன்றி, தம் மக்கள் அனைவருக்கும் பிரித்துக் கொடுத்தனர் என்பதை இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது. ஆகவே பாலை நில மக்களாகிய இவர்கள் இனக்குழு வாழ்க்கையையே வாழ்ந்தனர் என்பதைத் தெளிவாக அறிய முடிகிறது.

சங்க புறத்திணை இலக்கியங்கள் இவர்களைப் போர்ப்படை வீரர்களாகக் காட்டுகின்றன. பண்டைத் தமிழகத்தில் மன்னர்கள் காலாட்படை, குதிரைப் படை, தேர்ப்படை, யானைப்படை ஆகிய நான்கு வகைப் படைகளை வைத்திருந்த செய்தியை இலக்கியங்கள் கூறுகின்றன. போர் என்பதைத் தனி ஒருவரால் செய்ய முடியாது. போர் மேற்கொள்ளும் போது போர்ப்படையை நடத்திச் செல்ல ஒரு தலைவன் தேவை. போரில் பணி செய்வதற்கும் ஆட்கள் தேவை. அதனைப் பாலை நிலமக்களே செய்துள்ளனர். எனவே இவர்கள் இதன் காரணமாக இனக்குழு வாழ்க்கை முறையை வாழ்ந்து வந்துள்ளனர் என்பதைத் தெளிவாக உணர முடிகிறது.

### 1.4.6 தெய்வம்

பாலை நில மக்களின் தன்னிகரற்ற சக்தியாக தெய்வம் விளங்குகிறது. அத்தெய்வம் கொற்றவை என்பதைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது. பண்டைய இலக்கியங்கள் கூறும் ஒரே பெண் தெய்வம் கொற்றவையே ஆகும். இதன் மற்றொரு பெயர் ‘காடுகிழாள்’ என்பதாகும்.

காடுகிழாள் என்ற கொற்றவையைப் பற்றி நா.வானமாமலை அவர்கள் கூறும் போது, ‘‘குறிஞ்சி நில மக்கள் வேட்டைத் தொழிலிருந்து புராதனப்

பயிர்த் தொழிலிலுக்குத் திரும்பிய காலத்தில் புன்புலப் பயிர் செய்யத் தொடங்கினர். அக்காலத்தில் பெண்கள் ஆதிக்கம் பெறத் தொடங்கினார்கள். ஆகவே காட்டில் பெண்கள் பயிர் செய்யத் தொடங்கிய காலத்தில் காடுகிழாள் தோன்றினாள்"[29] எனக் கொற்றவையின் பழமையை எடுத்துக் காட்டியுள்ளார்.

தொல்காப்பியரும் குறிஞ்சியின் புறத்திணை தெய்வமாகக் கொற்றவையைக் குறிப்பிடுகிறார். இதனை,

> **'மறங்கடை கூட்டியகுடிநிலை சிறந்த**
>
> **கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே'** (புறத்தி.4)

என்ற நூற்பா வரிகள் விளக்குகின்றன. போர் மேற்சென்று முடித்தலை உடைய குடியினது நிலைமையைக் கூறுதலும் போர் தெய்வமான சிறந்த கொற்றவையின் நிலைமையைக் கூறுதலும் குறிஞ்சித் திணைக்குப் புறனாகிய வெட்சித்திணையாகும் என்று கூறுகின்றன. இதன்மூலம் முருகன் மட்டுமின்றி கொற்றவையும் குறிஞ்சி நிலத்தில் தெய்வமாக இருந்துள்ளதைக் காணமுடிகிறது. சேரர் பற்றிப் பேசும் பதிற்றுப்பத்தில், கூறப்படும் அயிரை என்ற தெய்வமும் கொற்றவையாகவே இருக்கலாம். அதைப் போன்று குறிஞ்சி நில மக்கள் கூறும் அணங்கு என்பதும் கொற்றவையாகவே இருக்கலாம். இதனைப் பற்றிய விரிவான செய்தி பின்வரும் இயல்களில் கூறப்பட்டுள்ளன.

### 1.4.7 பாலை நில மக்களின் தொழில்கள்

பாலை நில மக்களான எயினர்கள் வீரக்குடி மக்களாய் விளங்கியுள்ளனர். மறவர்களும், எயினரும், மழவரும், ஒரு குடியினராய்

வாழ்ந்து வந்துள்ளனர். இவர்கள் பாலை நிலத்தின் வழிச் செல்லும் வழிப்போக்கர்களான வணிகர்களிடமும், உமணர்களிடமும் கொள்ளை அடித்து உள்ளனர். அதற்கு நேர்மாறாக, மறவர்கள் செங்கோல் உடையவராய் நாட்டு மக்களுக்காக ஆநிரைகவரவும் அவற்றை மீட்கும் நிலையில் போரிட்டும் இருக்கின்றனர். இதனை,

'ஏறுடையினரை பெயரப் பெயராது
நெறிசுரை வெள்வேல் மழவர் தாங்கிய' (அகம்.269)

எனும் அகநானூற்றுப் பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

உயர்ந்த இடத்தின் மேலேறி வழிப்போக்கர்களாய் வரும் புதியவர் தொலையும்படி எதிர்நின்று அவர்தம் பொருளைக் கொள்ளையடித்துக் கூட்டாகப் பகிர்ந்து உண்ணும் வாழ்க்கை உடையவர்கள் பாலை நில மக்கள் என்பதை, கீழ்வரும் குறுந்தொகைப் பாடல் வரிகள் இயம்புகின்றன.

'நெடுங்கழை திரங்கிய நீர் இல் ஆடை
ஆறு செல் வம்பலர் தொலைய மாறுநின்று
கொடுஞ்சிலை மறவர் கடறு கூட்டுண்ணும்
கடுங்கண் யானைக் கானம் நீந்தி
இறப்பர் கொல் வாழி தோழி' (குறுந்.33)

மேற்கூறிய ஆநிரை கவர்தல் மற்றும் வழிப்பறி செய்தல், கொள்ளையடித்தல் போன்றவற்றைப் பாலை மறவரும், எயினரும், மழவரும் மேற்கொண்டனர். அதைப் போல் பாலை நில எயிற்றியரும் எறும்புகள் தங்கள் கூடுகளில் சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசியைத் தங்கள் கைகளில் உள்ள

கடப்பாரைகளைக் கொண்டு மேலும் கீழும் நிலத்தைக்குத்தி, கொள்ளையாகக் கொண்டனர் என்பதையும் அறியமுடிகிறது.

இதன் மூலம் கொள்ளையடித்தலாகிய வன்மையானத் தொழிலை எயினரும், உணவு தேடுதலாகிய மென்மையானத் தொழிலை எயிற்றியரும் மேற்கொண்டனர் என்பதைப் பண்டை இலக்கியம் வழிக் காணமுடிகிறது. இவை மட்டுமின்றி பாலை நிலத்தில் அவ்வப்போது வரும் விலங்குகளை எயினர்கள் வேட்டையாடியுள்ளனர். அந்த விலங்குகளின் நிணமுடைய ஊனை எயிற்றியர் பகற்பொழுதில் பறவைகள் உண்ணாதவாறு ஓட்டி வெயிலில் காய வைத்துப் பாதுகாத்தனர் என்பதையும் காணமுடிகிறது.

### 1.4.8 பாலை நில மக்களின் உணவு

பாலை நில மக்களின் உணவு மற்ற நில மக்களின் உணவுமுறைகளைப் போன்று இருந்தாலும் சில உணவுகளில் மாற்றம் காணப்படுகிறது. ஓய்மானாட்டுப் பாலைநில மக்களான வேட்டுவர் இனிய புளிங்கறி எனப்பட்ட சோற்றையும் ஆமாவின் சூட்டிறைச்சியையும் உண்டதை அறியமுடிகிறது.

தொண்டை நாட்டுப் பாலை நில மக்கள், எறும்புகள் தங்கள் புற்றுகளில் சேர்த்து வைத்திருந்த புல்லரிசியை எடுத்து வந்து சேர்த்து நில உரலில் குற்றி, சமைத்து, அவ்வுணவை உப்புக்கண்டத்துடன் சேர்த்து உண்டனர். அதனைத் தங்களை நாடிவரும் விருந்தினருக்குத் தேக்கு இலையில் படைத்தார்கள் (சிறுபாண்.175-177) என்பதை அறிய முடிகிறது.

### 1.4.9 பாலை நில மக்களின் இயல்புகள்

பாலை நில மக்களாகிய ஆறலைக்கள்வர்கள் அந்நிலத்தில் உள்ள பாறைகளில் தம் அம்புகளைத் தீட்டி நகத்தால் சோதித்துப் பார்த்து அதன் வலிமையை உணர்ந்திருக்கின்றனர். கையில் பொருள் இல்லாதவர் எவரையேனும் கொன்று விட்டால் தன் செயல் வீணாகி விட்டதாகக் கைகளை நொடித்துச் சென்றிருக்கின்றனர். ஏனெனில் அம்புகள் செலவானதற்காக வருத்தப்படக் கூடியவர்களாக இருந்திருக்கின்றனர் என்பதனை,

'பொறை மலி கழுதை நெடுநிரை தழீஇய

திருந்துவாள் வாய அருந்தலை துமித்த' (அகம்.89)

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

தான் கொன்ற வழிப்போக்கரின் பிணங்களைத் தழைகளாலும், கற்களாலும் மூடிவைத்தனர். இவை பதுக்கை என்று அழைக்கப்பட்டன. இதனைப் பற்றிய விரிவான செய்திகள் பின்வரும் இயல்களில் கூறப்பட்டுள்ளன.

### 1.4.10 பாலை நில மக்களின் வாழ்க்கை முறை

முல்லையும் குறிஞ்சியும் வளம் குன்றிய நிலையில் பாலையாயிற்று. இந்நில மக்களான எயினரும் எயிற்றியரும் பொலிவற்ற தோற்றத்தினையும், வன்கண்மையையும் உடையவர்கள். இவர்களின் தொழில், வழிச்செல்வாரைத் தாக்கி அவர்களது பொருளைக் கவர்வதாகும். இவர்களின் குடில்கள் ஈந்தின் இலையாலும், குழையாலும் வேயப்பட்டிருந்தன. இவர்கள் மற்றவர்களை

வருத்தும் தொழில் செய்தாலும் இவர்களிடம் விருந்தோம்பல் பண்பு நிறைந்திருந்தது. தனக்குக் கிடைக்கும் மிகச்சிறிய உணவையும் வழிப்போக்கருக்குக் கொடுத்து மகிழ்ந்துள்ளனர்.

### 1.4.11 பாலைநிலமும் வாகைத்திணையும்

தொல்காப்பியர் ஒவ்வொரு அகத்திணைகளுக்கும் நிகராகப் புறத்திணைகளையும் வகுத்துள்ளார். அவ்வகையில் பாலையின் புறத்திணையாக வாகைத் திணையை வகுத்துள்ளார்.

பாலைக்கென்று தனிநிலம் இல்லை. குறிஞ்சி மற்றும் முல்லை நிலத்தில் வறட்சிக்காலம் ஏற்படும் போது அது பாலையாகத் தோன்றும். அதுபோல் வாகை என்பது ஒரு குறிப்பிட்ட நிலத்திற்கு மட்டும் உரியதன்று. ஏனெனில் வாகை என்பதன் பொருள் வெற்றி பெறுதல் என்பதாகும். இருநாட்டவர்களுக்கு இடையே போர் நடைபெறும் போது இருவரில் யார் வேண்டுமென்றாலும் வெற்றியடையலாம்.

போரின் காரணமாகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கிறான். அதுபோலத் தன்னோடு ஒத்தாரைப் போர்க் களத்திலும் பிரிய நேரிடுகிறது. பகைவரையும் அழிக்கிறான். அதாவது தன் வீரத்திற்குச் சமமாக உள்ள எதிர்நாட்டு வீரனின் உயிரை அவன் உடலில் இருந்து பிரித்துப் புகழ் பெறுதலை வாகைத் திணையில் காண முடிகின்றது. மேலும் வாகை பற்றிக் கூறும்போது உயிர் வாழும் வாழ்க்கையை இவ்வுலகில் பெருமிதமாகக் கருதாது வல்லாண்மை பெற்ற ஆண்மகன் தன் நாட்டு மக்களுக்காகப் போர் புரிந்து சிறப்புறுதலையே இத்திணை குறிப்பிடுகிறது எனலாம்.

போரின் போது ஏற்படும் உயிரிழப்பால் தலைவன் தலைவியை விட்டும் அவனுடைய உறவுகளை விட்டும் இவ்வுலக வாழ்க்கையை விட்டும் நிரந்தரமாகப் பிரிகிறான். ஆகவே வாகைத் திணைக்குப் புறம்பாக அகத்திணையான பாலைத்திணை கூறப்படுகிறது என்பதை இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

### 1.4.12 பாலைத்திணையின் இயல்புகள்

பாலைநிலத்து மக்களின் ஒழுக்கம், பண்பு ஆகியவற்றைப் பார்க்கும் போது சில இயல்புகளை உடையவர்களாகவே இலக்கியங்கள் காட்டுகின்றன. அவற்றை இரண்டு வகையாகப் பகுக்கலாம். அவை முறையே,

1. அகத்திணை வாழ்க்கைக்கு உரிய இயல்புகள்
2. புறத்திணை வாழ்க்கைக்கு உரிய இயல்புகள்

ஆகியவை ஆகும். இவை பற்றிய விரிவான விளக்கங்களும் கருத்துகளும் பின்வரும் இயல்களில் கூறப்பட்டுள்ளன.

### 1.4.13 பாலை நில மக்கள் பயன்படுத்திய கருவிகள்

பாலை நில மக்களான எயினரும், மறவரும் தங்கள் தொழிலுக்காகச் சில கருவிகளைப் பயன்படுத்தி உள்ளனர். அவற்றை,

1. எயினரும், மறவரும் பயன்படுத்திய கருவிகள்
2. எயிற்றியரும் மறத்தியும் பயன்படுத்திய கருவிகள் என இருவகைப்படுத்தலாம்.

எயினரும், மறவரும், வேல், வாள், வில், அம்பு ஆகிய கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கருவிகளே புறத்திணை இலக்கியங்களில் போர்க்கருவிகளாகக் காட்டப் பெற்றுள்ளன.

உலக்கை, கடப்பாரை ஆகிய கருவிகளை எயிற்றியரும், மறத்தியரும் பயன்படுத்தியுள்ளனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் வழித் தெளிவாகக் காணமுடிகிறது.

மேற்கூறியவற்றின் மூலம் பாலை நில வல்லாண்மை மிக்க மறவர்களே போர்ப்படைவீரர்களாக விளங்கியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. இத்தகைய கருவிகள் பற்றிய பயன்பாடும், விளக்கமும், சான்றுகளும் பின்வரும் இயல்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

### 1.4.14 பாலை நில மக்களின் பழக்கவழக்கங்கள்

பாலை நில மக்களாகிய ஆறலைக் கள்வர்களிடமே இறந்தவர்களைக் கற்களைக் கொண்டும், இலைக்குவியல்களைக் கொண்டும் புதைத்து வைக்கும் பழக்கத்தைக் காண முடிகின்றது. அதுமட்டுமின்றி தாம் அடித்த கொள்ளைப் பொருட்களைத் தான் மட்டுமே வைத்துக் கொள்ளாமல் தம் சுற்றத்தாருடன் பங்கிட்டுக் கொண்டமையையும் இலக்கியங்கள் மூலம் அறிய முடிகின்றது.

மேலும் பாலை நில மறவர்களே போர்வீரர்களாகச் செயல்பட்டுள்ளனர். இவர்கள் மிகவும் வீரம் மிகுந்தவர்கள் என்பதை மற்றவர்களுக்குக் காண்பிக்கத் தான் நோய் வாய்ப்பட்டு இறந்தாலும், ஆண் குழந்தைகள் இறந்து பிறந்தாலும் அவர்களின் மார்பில் வாளால் கீறி புண்படச் செய்தே

புதைத்தனர். இதனை அவர்கள் தம் குடியின் பெருமையாகவே கருதினர். இவை மட்டுமின்றி மேலும் சில பழக்கவழக்கங்களை உடையவர்களாகவே பாலை நில மக்கள் இருந்துள்ளனர் என்பதைப் பண்டைத் தமிழ் இலக்கியம் மூலம் அறிய முடிகிறது. இதனைப் பற்றிய விரிவான செய்திகள் பின்வரும் இயல்களில் கூறப்பட்டுள்ளன.

## 1.5 தொகுப்புரை

இனவரைவியல் என்பது குறிப்பிட்ட மனித சமூகம் அல்லது அச்சமூகத்தின் ஒட்டுமொத்த வாழ்வியற் கூறுகளை விரிவாக விளக்குவதாகும்.

மனித சமுதாயத்தின் இனக்குழுக்கள் இவ்வுலகம் தோன்றிய காலத்திலேயே தோன்றிவிடவில்லை. அதற்கு நீண்ட காலம் ஆகியிருக்க வேண்டும் என்பது ஆராய்ச்சியாளர்களின் கருத்தாக அமைந்துள்ளதை அறிய முடிகிறது.

சங்கம் வைத்து தமிழ் வளர்த்த காலம் சங்ககாலம். இக்காலத்தில் எழுந்தவை சங்க இலக்கியங்கள் ஆகும். இம்மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை வாழ்ந்து வந்துள்ளனர். நில அடிப்படையில் ஒவ்வொரு இனக்குழுக்களாக இம்மக்கள் வாழ்ந்து வந்துள்ளமையைக் காண முடிகிறது.

இத்தகைய இனக்குழுக்கள் உருவாகப் பல்வேறு ஆண்டுகள் ஆகியிருக்கக்கூடும். இவர்களைப் பற்றி இலக்கியங்கள் மூலம் மட்டுமே அறிந்து கொள்ள முடிகிறது.

ஒரு காலத்தில் வாழ்ந்த மக்களின் பண்பாட்டையும் பழக்கவழக்கங்களையும் அறிந்து கொள்வதற்கு இனவரைவியல் அடிப்படையாக உள்ளது. இனவரைவியல் என்பது ஓர் இனத்தைப் பற்றி நன்கு அறிந்து, எழுத்துப் பூர்வமாக அளிக்கும் ஆவணம் ஆகும். இதில் கள ஆய்வே பெரிதும் பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது.

இலக்கியம் என்பது மக்களின் அனுபவங்களை ஆவணப்படுத்தும் கருவியாகவும், அவர்தம் உணர்வுகளை வெளிப்படுத்தும் கலைகளுள் ஒன்றாகவும் திகழ்வதை அறியமுடிகிறது.

இயற்கையின் ஓர் அங்கமாகப் படைக்கப்பட்ட மனித இனம் சமூகத்தேவையின் அடிப்படையில், தோன்றிய மொழியாலும் அதன் சிந்தனைத் திறனாலும் உருவாக்கிக் கொண்ட கலையே இலக்கியம் என்பதையும் அந்தந்தக்கால மக்களின் வாழ்க்கைச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப இலக்கியங்களில் பாடுபொருள் வேறுபடுகின்ற முறையையும் அறிய முடிகிறது.

முன்னர் வாழ்ந்த மக்களைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு அக்காலத்தில் எழுந்த இலக்கியங்களே ஆதாரங்களாக உள்ளன. ஏனெனில் ஓர் இலக்கியம் படைக்கப்படும் போது எழுத்தாளன் அவ்விலக்கியம் எழுந்த சூழல், புவியமைப்பு, கதைமாந்தர்கள், அவர்களின் பழக்கவழக்கங்கள், பண்பாடு போன்ற வாழ்வியற் கூறுகளையும் சேர்த்தே இலக்கியத்தைப் படைக்கிறான். ஆகவே இலக்கியங்கள் இனவரைவியலின் முன்னோடிகளாகத் திகழ்கின்றன என்பதை உணர முடிகிறது.

இலக்கியங்கள் காலத்தைக் காட்டும் கண்ணாடியாக உள்ளன. இலக்கியங்கள் இல்லையேல் முன்பு வாழ்ந்த மக்களாகிய முன்னோர்களையும் அவர்களின் வாழ்க்கை முறையையும் அறிந்திருக்க முடியாது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன.

சங்க இலக்கியங்கள் காட்டும் ஐந்திணைகளுள் பாலை நிலமும் ஒன்றாகும். ஆனால் இது நிரந்தரமான நிலமன்று. குறிஞ்சியும் முல்லையும்

வறட்சி அடையும் போது இந்நிலம் உருவாகிறது. இங்கு வாழ்ந்த மக்கள் ஆறலைத்தல் அதாவது வழிப்பறி செய்யும் எயினரும், மறவரும் ஆவார்கள் என்பதைக் காண முடிகிறது.

மழையின்றி வறட்சி அடைவதால் இம்மக்கள் வழிப்பறி செய்தனரே தவிர, நிரந்தரமாக இத்தொழிலில் ஈடுபடவில்லை. பாலை நிலமக்கள் பெண் தெய்வமான கொற்றவையை வணங்கி உள்ள நிலையை அறிய முடிகிறது.

பாலை நில மக்கள் வலிமையும் வீரமும் உடையவர்களாக இருந்துள்ளனர். பார்ப்பவர்கள் பயப்படும் வண்ணம் வன்கண்மை உடையவர்களாக இருந்துள்ள பாங்கினை உணர முடிகிறது.

பாலை நில மக்கள் வழிப்பறி செய்யும் போது பயன்படுத்திய வாள், வேல், வில் போன்ற கருவிகளும் போர்ப்படை வீரர்கள் பயன்படுத்திய ஆயுதங்களும் ஒன்றாகவே உள்ள தன்மையை அறிய முடிகிறது.

வழிப்பறி செய்து வாழ்க்கை நடத்துபவர்களாக அகத்திணை இலக்கியங்களும், போரிட்டு பகைநாட்டை வெற்றி கொண்டு அந்நாட்டைச் சூறையாடி அதனால் கிடைக்கும் பொருளைத் தன் நாட்டிற்குக் கொண்டு வந்ததைப் புறத்திணை இலக்கியங்களும் எடுத்துக்காட்டுகின்றதை அறிய முடிகிறது.

குறிஞ்சி மற்றும் முல்லை நிலத்தின் சாயலான பரண் அமைத்தல், வேட்டையாடுதல், பகிர்ந்து உண்ணுதல் போன்ற அமைப்புகள் பாலை நிலத்திலும் காணக்கிடைக்கின்றன.

பாலை நில மக்களான மறவரும், எயினரும் வீரக்குடி மக்களாய் விளங்கினர். இவர்கள் தனி ஒரு குடியினராய் வாழ்ந்து வந்துள்ளனர்.

பாலை நில மக்களிடயே இறந்தவர்களைக் கற்களைக் கொண்டும் இலைதழைகளைக் கொண்டும் மூடிவைக்கும் பழக்கம் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் மூலம் காணமுடிகிறது.

தொல்காப்பியர் ஒவ்வொரு அகத்திணைகளுக்கும் நிகராகப் புறத்திணைகளையும் வகுத்துள்ளனர். அவ்வகையில் பாலையின் புறத்திணையாக வாகைத்திணையை வகுத்துள்ளார்.

இலக்கியங்களில் ஓர் இனத்தின் இனவரைவியல் பற்றிய செய்திகள் ஏராளமாகக் காணப்பட்டாலும் ஒரு சில இடங்களில் இனவரைவியலில் இருந்து இலக்கியம் வேறுபட்டே நிற்பதையும் காணமுடிகிறது.

# குறிப்புகள்

1. சக்திவேல்.சு, மானிடவியல் கலைச்சொல்லகராதி, ப.25
2. அன்பரசன், பெரும்பாணாற்றுப்படையில் இனவரைவியல், ப.15
3. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.117
4. துரை.அரங்கசாமி, சங்ககாலச் சிறப்புப்பெயர்கள், ப.202
5. சிவத்தம்பி.கா தமிழில் இலக்கிய வரலாறு, ப.115
6. சிவசுப்பிரமணியன்.ஆ, இனவரைவியலும் தமிழ் நாவலும், ப.11
7. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், பக்.118-119
8. மேலது, ப.387
9. தனஞ்செயன்.ஆ, விளிம்பு நிலை மக்கள் வழக்காறுகள் இனவரைவியல் ஆய்வு, ப.2
10. சுரேஷ்குமார், சௌ., உங்கள் நூலகம், இணையம்
11. புஷ்பா.கி, இனவரைவியல் நோக்கில் அகநானூறு, ப.18
12. தனஞ்செயன்.ஆ, விளிம்பு நிலை மக்கள் வழக்காறுகள் இனவரைவியல் ஆய்வு, ப.3
13. மேலது., ப.3
14. மேலது., ப.3
15. மேலது., ப.3
16. மேலது., ப.32
17. மேலது., ப.33
18. புஷ்பா.கி., இனவரைவியல் நோக்கில் அகநானூறு, ப.7
19. தமிழ் லெக்சிகன் அகராதி, ப.339

20. கழகத் தமிழ் அகராதி, ப.127

21. கதிரைவேற்பிள்ளை.நா, தமிழ்மொழி அகராதி. ப.243

22. சண்முகம்பிள்ளை.மு, தமிழ் தமிழ் அகராதி, ப.150

23. இரவண சித்தர், அகராதி நிகண்டு, ப.18

24. தொல்காப்பியம், இடையியல், நூ.எ.21

25. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, ப.5

26. மேலது., ப.4

27. மேலது., ப.6

28. பாலுச்சாமி, வாழ்வியற் களஞ்சியம் தொகுதி-4, ப.264

29. வானமாமலை.நா, இலக்கியத்தில் உள்ளடக்கமும் உருவமும், ப.76

இயல் - 2

# திணைக் கோட்பாடும் ஐவகை நில மக்களின் வாழ்க்கை நிலையும்

2.5.2 முல்லை நில மக்களின் தொழில்

2.5.2.1 தயிர் கடைதல்

2.5.2.2 ஆயர் ஆநிரை ஓட்டிச் செல்லல்

2.6 மருத நிலம்

2.6.1 மருத நில மக்களின் வாழ்க்கைமுறை

2.6.2 மருத நில மக்களின் தொழில்

2.6.2.1 உழுதல்

2.6.2.2 களை எடுத்தல்

2.6.2.3 நெல் அரிதல்

2.6.2.4 நெல்லையும் பதரையும் பிரித்தல்

2.7 நெய்தல் நிலம்

2.7.1 நெய்தல் நில மக்களின் வாழ்க்கைமுறை

2.7.2 நெய்தல் நில மக்களின் தொழில்

2.7.2.1 முத்துக்குளித்தல்

2.7.2.2 மீன் பிடித்தல்

2.7.2.3 மீன் விற்றல்

2.7.2.4 உப்பு விளைவித்தல்

2.7.2.5 உப்பு விற்றல்

2.7.2.6 மகளிர் மீன் காய வைத்தல்

2.8 பாலை நில மக்களின் வாழ்க்கைமுறை

2.8.1 பாலை நிலத்தொழில்

2.8.1.1 ஆறலைத்தல்

2.9 தொகுப்புரை

இயல்-2

# திணைக் கோட்பாடும் ஐவகை நில மக்களின் வாழ்க்கை நிலையும்

## 2.0 முன்னுரை

மனிதப் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளும் இடம், காலம், சூழல் ஆகியவற்றைக் கொண்டே அமைகின்றன. அதிலும் மனிதனுக்கு, வாழும் இடமே முக்கியமாக இருக்கிறது என்பதைச் சங்க இலக்கியத் திணை அமைப்பு மூலம் காணமுடிகின்றது. சங்க இலக்கியங்கள் தோன்றிய காலக்கட்டத்தில் மக்கள், நிலஅமைப்பைக் கொண்டே இயங்கி வந்த தன்மையைக் காணமுடிகின்றது.

திணைக்குடி மக்களின் வாழ்விற்கு இடம் முக்கியமான ஒன்றாக இருப்பினும் அவை சமூகக்குழுக்களோடும், சுற்றுச்சூழலோடும் இணைந்தே காணப்பட்டன என்பதையும் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

இவை மட்டுமின்றி மனிதனின் தேவைகள், விருப்பங்கள், வேலை, தொழில் மற்றும் இயற்கை வளங்கள் என அனைத்துச் செயல்பாடுகளும் திணை அமைப்பிற்கு முக்கியக் காரணமாக அமைகின்றன எனலாம்.

சங்கப்பாடல்கள் நிலத்தோடு மட்டுமின்றி முதல், கரு, உரிப்பொருள் கொண்டும் மக்களின் வாழ்வியலை வெளிப்படுத்துகின்றன. இவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து நிலங்களுக்கும் ஒன்றுபோல்

இல்லாமல் வெவ்வேறாகவே அமைந்துள்ளன. இத்தகைய ஐந்திணை அமைப்பு பற்றிப் பேசுவதாக இவ்வியல் அமைகிறது.

## 2.1 திணையும் விளக்கமும்

பண்டைய மக்களின் ஒழுக்கமான, வாழ்க்கை முறைக்கு உதாரணமாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. ஒவ்வொரு நிலப்பகுதியையும் ஒரு குறிப்பிட்ட ஒழுங்குமுறையுடன் தொடர்புபடுத்தும் மரபு சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இவை திணை என்று அழைக்கப்படுகின்றன.

தமிழில் திணை என்ற சொல் பண்டைத் தமிழ் மக்களின் வாழ்வோடு பின்னிப்பிணைந்திருந்த ஒன்றாகும். ஏனெனில் பழந்தமிழர்கள் பண்பட்ட தம் வாழ்க்கையை அகம், புறம் என்று இருபெரும் பிரிவுகளாகப் பிரித்திருந்தனர். இதுவே அகத்திணை, புறத்திணை என்று அழைக்கப்பட்டன.

அகவாழ்க்கை என்னும் அகத்திணையைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்று ஏழு வகையாகவும், புறம் என்னும் புறத்திணையை வெட்சி, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண் என்று ஏழாகவும் பாகுபடுத்தித் தங்களது வாழ்க்கையைச் சிறப்புற வாழ்ந்து வந்துள்ளமையைக் காணமுடிகிறது.

அகத்திணை ஏழில், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்தும் அன்பின் ஐந்திணை என்று அழைக்கப்பட்டதை அறிய முடிகிறது.

திணை என்ற சொல்லிற்கு அகராதிகளும், நிகண்டுகளும், அறிஞர்களும் பல்வேறு கருத்துக்களைத் தருகின்றனர்.

திணை என்ற சொல்லைத் திண்+ஐ என்று பிரிப்பர். ‘திண்’ என்றால் திண்மை என்றும் ‘ஐ’ என்றால் உடையது என்றும் பொருள் தரும்.

அதாவது திணை என்ற சொல்லிற்கு, ‘‘திண்மையை உடையது திணை, உறுதியை உடையது திணை’’[1] என்று பொருள் தருகிறது தொல்காப்பிய உரைவளக் கோவை. இது மட்டுமின்றி திணை என்ற சொல்லுக்கு, ‘‘நிலம், குலம், இடம், வீடு, ஒழுக்கம், உயர்திணை, அஃறிணை’’[2] என்றும் பொருள் தருகிறது.

சைவசித்தாந்த அகராதி, திணை என்ற கிளவிக்கு, ‘‘நிலம், குலம், இடம், வீடு, ஒழுக்கம், பூமி, பொருள், குடி’’[3] என்று பொருள் தருகிறது.

க்ரியாவின் தற்காலத்தமிழ் அகராதி திணை என்ற பதத்திற்கு, ‘‘மனிதர்களையும், விலங்குகளையும், பொருளையும், பிரிக்கும் பகுப்பு, சங்க இலக்கியத்தில் அகம்,புறம் என்னும் பிரிவுகளுக்காகச் சொல்லப்பட்ட ஒழுக்கம்’’[4] என்று விளக்கம் அளிக்கிறது.

அபிதான சிந்தாமணி திணை என்ற சொல்லிற்கு, ‘‘உயர்திணை, அஃறிணை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை இவை முறையே மலை, காடு, ஊர், கடல், மணல் சார்ந்த நிலங்கள், அகத்திணை, புறத்திணை’’[5] என்று பொருள் தருகிறது.

திணை என்ற கிளவிக்கு, ‘‘பூமி, இடம், குடி, பொருள், ஒழுக்கம், குலம், ஐந்திணை’’[6] என்று விளக்கம் தருகின்றன பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதியும் நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ் அகராதியும்.

மேலும், குறுந்தொகை ஒரு நுண்ணாய்வு என்னும் நூலில், ‘‘திணை என்ற சொல் மக்கள் வாழ்வியல் குடி, குலம், நிலம், திண்ணை என்னும் நான்கு பொருட்களில் வழங்கப்பட்டதைச் சங்கச் செய்யுட்கள் மூலம் உணரலாம்’’[7] என திணை என்றசொல்லிற்கு விளக்கம் அளிக்கின்றது.

### 2.1.1 திணைக் கோட்பாடு

பண்டைத் தமிழர் இலக்கியமான சங்க இலக்கியத்தின் உயிர் நாடியாகத் திகழ்வது திணைக்கோட்பாடே ஆகும். இது தமிழருக்கு மட்டுமே உரியது ஆகும். இதனை உறுதிப்படுத்தும் வகையில், ‘‘திணை என்ற கோட்பாடு தமிழுக்கு மட்டுமே உரியது’’[8] என்கிறார் அறிஞர் ச.வே.சுப்பிரமணியன்.

பண்டைய கால தமிழ் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை வாழ்ந்தனர். இத்தகைய சங்ககால மக்களின் வாழ்வில் முக்கிய இடம் வகிப்பது திணைக்கோட்பாடே ஆகும். இத்தகைய திணைக் கோட்பாட்டிற்குப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைத் தருகின்றனர். பெ.மாதையன், ‘‘திணைக் கோட்பாட்டில் நிலம் தான் முக்கிய இடம் பெறுகிறது’’[9] என்று குறிப்பிடுகிறார். மேலும் ‘‘உரிப்பொருள்

அடிப்படையிலேயே திணையை வகுக்க வேண்டும்”[10] என்றும் விளக்கம் தருகிறார்.

திணைக்கு நிலமே அடிப்படையானது என்றும், அதில் நிகழும் ஒழுகலாறுகள் முதன்மை பெறுகின்றன என்பதையும் இதன் மூலம் அறிய முடிகிறது. சங்கப்பாடல்களில் திணைத்துறை அமைப்பு பாடல்கள் யார் மீது பாடப்பட்டுள்ளது, எதைப்பற்றிப் பாடப்பட்டுள்ளது என்பதை அறிந்து கொள்ள உதவிபுரிகின்றன எனலாம்.

குளோரியா சுந்திரமதி திணைக் கோட்பாடு பற்றிப் பின்வருமாறு கூறுகிறார். “திணைத்துறை அமைப்பு சங்கப் பாடல்களில் உருவாக்கத்தில் இன்றியமையாததாகப் பொருந்துவது கவிதையில் கூறியுள்ள பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள உதவும்”[11] என்று கூறுகிறார்.

திணை என்று குறிப்பிடும் போது ஒவ்வொரு திணைக்கும் முக்கியமானதாகக் கருதப்படுவது உரிப்பொருளே ஆகும். உரிப்பொருள் அத்திணை சார்ந்த மக்களின் ஒழுகலாறுகளைக் கூறுகிறது. ஆனால் உரிப்பொருளும் கருப்பொருளும் சில இடங்களில் மாற்றம் பெற்று வருவதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

ஒரு திணை சார்ந்த நிலத்தை, மற்றொரு திணை சார்ந்த நிலத்திற்குக் கூறமுடியாது. ஆனால் உரிப்பொருளும் கருப்பொருளும் அவ்வாறு இன்றி மாற்றம் பெறவும் கூடும். எனவே நில அமைப்பு திணைக்கோட்பாட்டிற்கு இன்றியமையாததாக உள்ளது என்பதை அறியமுடிகிறது.

பெரும்பாலும் அகராதிகளும், நிகண்டுகளும் திணை என்ற சொல்லிற்குக் குடி, குலம், நிலம், திண்ணை ஆகிய நான்கு பொருட்களைத் தருகின்றன. இதில் காணப்படும் திண்ணை என்பது வழிப்போக்கர்கள் அமர்ந்து இளைப்பாறிச் செல்வதற்கு வீட்டின் வெளிப்புறம் அமைக்கப்படும் ஓர் அமைப்பாகும். தற்காலத்திலும் கிராமங்களில் மக்கள் தங்கள் வீடுகளின் வெளியில், வழிச்செல்வோர் அமர்ந்து இளைப்பாறிச் செல்வதற்குத் திண்ணை அமைத்திருப்பதைக் காணலாம். எனவே திண்ணை என்பது மக்கள் வாழுகின்ற இடத்தின் அடிப்படையில் அமைந்துள்ளதைக் குறிப்பிடுகிறது. ஆகவே 'திண்ணை' என்ற சொல் நிலத்தை அடிப்படையாக வைத்து அமைந்த பொருளைக் குறிப்பிடுகிறது எனலாம்.

சங்க இலக்கியங்கள் அகம், புறம் என இரு திணைகளாகப் பகுக்கப்படுகின்றன. இதில் அகம் என்பது தலைவன், தலைவி காதல் வாழ்க்கை பற்றிக் கூறுவதாகும். எனவே அகத்திணை என்பது காதல் ஒழுக்கம் பற்றிக் கூறுகிறது என்பதை அறிய முடிகிறது.

ஐவகை நிலத்தின் அடிப்படையிலேயே தலைவன், தலைவியின் காதல் வாழ்வும் திருமண வாழ்வும் அமைகிறது. எனவே திணைத்துறை அமைப்பில் நிலமே முக்கியப்பங்கு வகிக்கிறது எனலாம். இதற்கு மாற்றாக ஆ.சிவலிங்கனார், "திணைத்துறை வகுக்க உரிப்பொருள் ஒன்றே சிறந்ததாகும்"[12] எனக் குறிப்பிடுகிறார்.

சங்கப்பாடல்கள் திணைப்பாகுபாட்டுடன் இருந்தது என்பதற்கு இலக்கிய ஒப்பாய்வு என்ற நூலில் கிளவி கூற்று அடிப்படையில் திணைகள் பிரித்துக்காட்டப்பட்டிருப்பதைச் சான்றாகக் கூறலாம். அதனை,




← கிளவிக் கூற்றுகள் →[13]

என்ற விளக்கப்படம் காட்டுகிறது. இதன்வழி திணைப்பாகுபாட்டிற்குக் கிளவிக்கூற்றும் காரணமாக அமைகிறது என்பதை அறிய முடிகிறது.

திணைக்குத் திணை கிளவிக் கூற்று, உரிப்பொருள் கூட மயக்கம் பெற்று வரலாம். ஆனால் திணைக்குரிய நில அமைப்பு மயக்கம் பெற்று வராது. ஆகவே திணைக் கோட்பாட்டிற்கு நில அமைப்பே முக்கியமானதாக விளங்குகிறது என்பதைத் தெளிவாக அறிய முடிகிறது. நில அமைப்பு முற்றிலும் மயங்கி வராது என்பதைத் தொல்காப்பியரும்,

**‘திணை மயக் குறுதலுங் கடிநிலை இலவே**
**நிலனொருங்கு மயங்குதல் இன்றென மொழிப**
**புலனன் குணர்ந்த புலமையோரே’ (தொல்.அகத்.,நூற்.958)**

என்கிறார். திணையில் உள்ள பொருளும் பொழுதும் வேண்டுமென்றால் மயங்கி வரலாம். ஆனால் நிலம் மயங்கி வராது. ஆகவே ஒருதிணையில் மற்றொருதிணை மயக்கம் பெறாது. ஏனென்றால் நிலம் என்பது மலை, காடு, கடல் போன்று ஓர் இடத்தை அதாவது நிலவியலின் ஒரு பகுதியைக்

குறிக்கும் சொல்லாகும். ஆகவே நிலம் ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்குப் புலம்பெயர்வது கிடையாது. திணையில் நிலஅமைப்பு மயக்கம் பெறாது. ஆகவே திணைக்கோட்பாட்டிற்கு நிலமே முக்கியம் என்பதைத் தெளிவாக அறியமுடிகிறது.

திணைத்துறை அமைப்பு பற்றிக் குளோரியா சுந்திரமதி, ‘‘திணைத்துறை அமைப்பு சங்கப் பாடல்களின் உருவாக்கத்தில் இன்றியமையாததாகப் பொருந்துவது. கவிதையில் கூறியுள்ள பொருளைத் தெளிவாக உணர்ந்து கொள்ள உதவுவது’’[14] என்று குறிப்பிடுகிறார்.

மேலும் கடிகாசலம் கூறும் போது, ‘‘கவிதையின் அமைப்புத்தளத்தை விளக்கியுள்ள முறையைப் பெரிதும் பின்பற்றியே திணைத்துறை வரையறை அமைகின்றது’’[15] என்கிறார்.

திணை என்ற சொல் நிலத்தைக் குறிக்கின்றதா? அல்லது அங்கு நடைபெறும் ஒழுக்கப் பண்பைக் குறிக்கின்றதா? மனிதன் தங்கியிருக்கும் குடிகளைக் குறிக்கின்றதா? அல்லது சங்கப் பாடல்களின் அமைப்புத்தளத்தைக் குறிக்கின்றதா? என்பதைப் பற்றித் தெளிவான கருத்தினை அறியமுடியவில்லை. ஆனால் சங்க இலக்கியங்களில் பதினைந்திற்கும் மேற்பட்ட இடங்களில் திணை என்ற சொல் வந்துள்ளது. திணை என்ற சொல் தொன்மையான குழுக்களையும் அல்லது குடியிருப்பையும் குறிப்பதாக உள்ளது. எனவே திணை என்பது குடிகளையும் அவர்களின் ஒழுகலாறுகளையும் குறிப்பிடுவது என்பதை அறிய முடிகிறது.

### 2.1.2 ஐந்திணை விளக்கம்

திணை என்பது ஒழுக்கம் எனப் பொருள்படும் வகையில் இலக்கண நூல்கள் விளக்கம் தருகின்றன. பண்டையத் தமிழர்கள் வாழ்வியல் முறை பற்றி அறிய வேண்டுமெனில் இத்திணைப்பகுப்பு முறையைப் பற்றி அறிய வேண்டியது அவசியமானதாகும்.

முதலில் இலக்கண நூலான தொல்காப்பியத்தில்,

> ‘கைக்கிளை முதலாய் பெருந்திணை இறுவாய்
> முற்படக் கிளந்த எழுதிணை என்ப’
>
> (தொல்.பொருள்.அகத்.,நூ.எ.947)

என்று கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதியாகக் கூறப்படும் கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை எனத் திணை ஏழு வகைப்படும் என்று கூறி இவற்றுள்,

> ‘நடுவணைந்திணை நடுவண தொழியப்
> படுதிரை வையம் பாத்தியப் பண்பே’ (பொருள்.அகத்.,நூ.எ.2)

என அடுத்த நூற்பாவில் கூறப்படுகிறது. மேற்சொல்லப்பட்ட ஏழு திணைகளுள் நடுவில் கூறப்பட்ட குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்தும் அன்பின் ஐந்திணைகள் ஆகும் என்று கூறுகிறது தொல்காப்பியம்.

சங்ககால மக்கள் அறம், பொருள், இன்பம் எனும் கொள்கைப்படி வாழ்ந்தவர்கள். இதில் இல்லற வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைவது இன்பம் ஆகும். இதையே பழந்தமிழர்கள் அகத்திணை என்று கூறிச்

சிறப்பித்துள்ளனர். இவ்அகவாழ்க்கை முறையும் அவர்களின் நில அமைப்பிற்கு ஏற்பவே அமைந்துள்ளன. இத்தகைய திணையை நம்பியகப்பொருள்,

> ‘மலர்தலை உலகத்துப் புலவோர் ஆய்ந்த
> அருந்தமிழ் அகப்பொருள் கைக்கிளை ஐந்திணை
> பெருந்திணை என எழு பெற்றித்து ஆகும்’ (நம்பி.1)

என்று கூறுகிறது.

மலர்ந்த தமிழ்நாட்டை உடைய தமிழ்ப் புலவர்கள் ஆய்ந்த திணை அமைப்பு கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்று ஏழு வகைப்படும் என்று கூறி, ஐந்திணை என்ன என்பதற்கான விளக்கத்தை,

> ‘குறிஞ்சி பாலை முல்லை மருதம்
> நெய்தல் ஐந்திணைக்கு எய்திய பெயரே’ (நம்பி.6)

என்று குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய இவ்ஐந்துமே ஐந்திணைக்குரிய பெயர்கள் என்று விளக்கம் தருகிறது.

## 2.2 ஐந்திணை நில அமைப்பு

சங்க இலக்கியங்கள் அன்பின் ஐந்திணை என்று குறிப்படும் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து திணைகளும் நிலங்களின் தன்மையோடு பொருந்தி வருபவையாகும்.

ஒவ்வொரு திணைக்கும் முதற்பொருளாக அமைவது நிலமும், பொழுதும் ஆகும். அந்தந்த நிலத்தில் உள்ள கருப்பொருள் மற்றும் உரிப்பொருள் கூட மயக்கம் பெற்று வரலாம். ஆனால் முதற்பொருளான நில

அமைப்பு அந்தந்தத் திணைகளுக்கு உரியதாகவே இருக்கும் தன்மையைக் காண முடிகிறது. இத்தகைய நில அமைப்பைத் தொல்காப்பிய நூற்பா வரிகள்,

**‘மாயோன் மேய காடுறையுலகமுஞ்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் பெறுமே’**

**(தொல்.பொருள்.அகத்.,நூ.எ.5)**

என்று எடுத்துக் காட்டுகிறது.

மாயோனுக்குக் காடும், முருகனுக்கு மலையும், வேந்தனுக்கு வயலும், வருணனுக்குக் கடலும் உரியதாகக் கூறுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு வகை நில அமைப்புகளைப் பற்றி மட்டுமே தொல்காப்பியம் கூறுகிறது. பாலை என்ற நிலம் பற்றிக் கூறவில்லை தொல்காப்பியத்தைப் பின்பற்றி மு.அருணாச்சலம் பிள்ளை அவர்களும்,

**“கடல் வண்ணன் காதலித்த காடுறை உலகமும்**
**செங்கேழ் முருகன் காதலித்த வான் தாங்கிய வரை**
**சூழுலகமும் இந்திரன் காதலித்த தண்புனல் நாடும்**
**கருங் கடவுள் நெடுங்கோட்டெக்கர் நிலமும்”**[16]

என்று திருமாலுக்குக் காடாகிய முல்லை நிலமும், முருகனுக்கு வான்வரை உயர்ந்து நிற்கும் மலையாகிய குறிஞ்சி நிலமும், இந்திரனுக்கு எப்பொழுதும்

குளிர்ச்சியாக இருக்கும் வயல்வெளிகளையுடைய மருத நிலமும், கருமேகக் கடவுளான வருணனுக்கு இவ்வுலகில் நான்கில் மூன்று பங்காக இவ்வுலகம் எங்கும் பரவியுள்ள கடலான நெய்தல் நிலத்தையும் கூறுகிறார். ஆனால் பாலை நிலம் பற்றி இவரும் கூறவில்லை.

ஐந்திணைக்குரிய நிலப்பாகுபாடு பற்றி நம்பியகப் பொருள்,

**'வரையே சுரமே புறவே பழனம்**
**திரையே அவைஅவை சேர்தரும் இடனே**
**எனாஅர் ஐவகைத்து அனையியல் நிலமே'** (நம்பி.அகம்.,நூற்.9)

என்கிறது.

தொல்காப்பியர் பாலை நிலம் தவிர்த்த நான்கு வகை நில அமைப்பு பற்றிக் கூற, அதற்குப்பின்பு எழுந்த பொருள் இலக்கண நூலான நம்பியகப் பொருள் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து வகையான நில அமைப்பு பற்றியும் கூறுகிறது. அதுமட்டுமின்றி அந்தந்த நிலங்களைச் சார்ந்த பகுதிகளும் அந்த நில அமைப்புடனே சாரும் என்கிறது. இதனை,

1. காடும் காடு சார்ந்த இடமும்
2. மலையும் மலை சார்ந்த இடமும்
3. வயலும் வயல் சார்ந்த இடமும்
4. கடலும் கடல் சார்ந்த இடமும்
5. மணலும் மணல் சார்ந்த இடமும்

என்று விளக்கம் தருகிறது.

மேலும் ஆ.தனஞ்செயன், “முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பனஅந்தந்த வட்டாரம் தழுவிய மலர்களின்பெயர்களின் அமைந்த நிலப் பரப்புகள்”[17] என்று கூறுகிறார். இவரும் தொல்காப்பியர் போன்றே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணைகள் பற்றி மட்டுமே பேசுகிறார். பாலைத் திணை பற்றிப் பேசவில்லை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்று அழைக்கப்படும் திணைப்பெயர்கள் நான்கும் அந்தந்த நிலத்தில் கிடைக்கப்பெறும் பூக்களின் பெயரால் வந்தவை என்று கூறுகிறார். எடுத்துக்காட்டாக,

**‘நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர் அளவு இன்றே – சாரல்**
**கருங்கோல் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே’** (குறுந்.3)

என்னும் குறுந்தொகைப் பாடலில் மலைநாட்டுத் தலைவன் பற்றிப் பேசும் போது, மலையில் பூக்கும் குறிஞ்சிப்பூ பற்றியும் தலைவி கூறுகிறாள். எனவே மலரின் அடிப்படையில் நிலத்திற்குப் பெயர் வந்ததை அறியமுடிகின்றது.

**‘அவரோ வாரார் முல்லையும் பூத்தன**
**பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய**
**பாலொடு வந்து கூழொடு பெயரும்**
**ஆடுடை இடைமகன் சென்னிச்**
**சூடிய எல்லாம் சிறு பசு முகையே’** (குறுந்.221)

என்னும் பாடலில் தலைவி தோழியிடம் கார்காலம் பற்றிக் கூறும் போது முல்லைப் பூக்கள் பூத்துவிட்டன. ஆயர்கள் ஆடுகள் உள்ள மந்தையில்

இருந்து பாலைக் கொண்டு வந்து தன் இல்லத்தில் கொடுத்துவிட்டு உணவான கூழைப்பெற்று, மீண்டும் செல்கிறான் என்று கூறுகிறாள். தலைவி, தலைவன் கார்காலத்தில் இன்னும் வரவில்லை என்று கூறும் போது முல்லை மலர் பற்றியும் கூறுகிறாள். ஆகவே அந்நிலப்பரப்பில் எந்த மலர் அதிகமாக காணப்படுகிறதோ அல்லது அரிதாகக் காணப்படுகிறதோ, அந்த மலரின் பெயரை அந்த நிலப்பகுதிகளுக்கு வைத்துள்ளனர் என்பதைக் காணமுடிகிறது.

### 2.2.2 திணை மயக்கம்

பண்டைத் தமிழரின் திணை வரலாறு என்பது ஒரே காலக்கட்டத்தில் தோன்றியவை அல்ல. அவை தோன்ற பல ஆண்டுகள் ஆகியிருக்கக் கூடும். முதலில் நாடோடியாக வாழ்ந்த மனிதன் குறிப்பிட்ட காலக்கட்டத்திற்குப் பின் இனக்குழுக்களாகச் சேர்ந்து வாழத் தொடங்கி, பின்னர் தங்களது உணவுத் தேவைக்காக விலங்குகளை வேட்டையாடி பகிர்ந்து உண்டதை அறிய முடிகிறது. காட்டில் அலைந்து வேட்டையாடி சிரமப்பட்ட அவன் ஆடு, மாடு போன்ற விலங்குகளைத் தன் தேவைக்காக வீட்டிலேயே பழக்கினான். இந்நிலையில் மாற்றம் வர ஓரிடத்தில் நிலையாகத் தங்கியிருந்து பயிரிட ஆரம்பித்தான். காலப்போக்கில் தன் இடத்தில் கிடைத்த பொருட்களை மற்ற இடத்தில் கிடைக்கும் பொருட்களுடன் பண்டமாற்று முறை செய்தான். இதனால் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்து திணைகளுக்குள் மயக்கம் ஏற்படக் காரணமானது.

திணை மயக்கம் என்பது ஒருதிணைக்குரிய கருப்பொருளும் முதல் பொருளுக்குரிய பொழுதும் பிற திணைகளில் மயங்கி வருவதே ஆகும்.

திணை மயக்கம் என்பது இரண்டு பொருளடிப்படையில் வகைப்படுத்தப்படுகிறது. அவை

1. கால மயக்கம்
2. கருப்பொருள் மயக்கம்

என்பனவாகும்.

### 2.2.2.1 காலமயக்கம்

திணையில் நிலமும் பொழுதும் முதற்பொருள் என்றழைக்கப்படுகின்றன. இதில் நிலம் அந்தந்தத் திணைக்கு உரியதாக மட்டுமே இருக்கும். ஆனால் ஒரு சில நேரங்களில் ஒருதிணைக்குரிய பொழுது மற்றொரு திணையில் மயங்கி வரும். இதுவே காலமயக்கம் எனப்படும்.

**'பரியுடை நன்மான் பொங்குளை அன்ன**
**ஆடைகரை வேழம்வெண்பூப்பகரும்**
**தண்டுறை ஊரன் பெண்டிர்**
**துஞ்சூர் யாமத்தும் துயிலறியரே'** (ஐங்.13)

என்னும் ஐங்குறுநூற்று மருதத்திணைப் பாடலில் குறிஞ்சி நிலத்திற்கு உரிய சிறுபொழுதான 'யாமம்' மருத நிலத்திற்கு வந்துள்ளது என்பதும் ஒப்பு நோக்கத்தக்கதாக அமைகிறது.

### 2.2.2.2. கருப்பொருள் மயக்கம்

ஒரு நிலத்தில் கிடைக்கக்கூடிய மற்றும் வளரக்கூடிய மரம், செடி, கொடிகள் போன்ற அந்நிலத்திற்கே உரியவை கருப்பொருள்கள் எனப்படும்.

அவை தெய்வம், மக்கள், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, யாழ், மக்கள், பண், தொழில், நீர், பூ என்று பதினான்கு பிரிவில் அடங்குகின்றன.

'பல்லிருங் கூந்தல் மெல்லியலோள்வயின்
பிரியாய் ஆயினும் நன்றே, விரியினர்க்
காலெறுழ் ஒள்வீதாஅய
முருகமர் மாமலை பிரிந்தெனப்பிரிமே' (ஐங்.308)

என்னும் பாலைத்திணைக்குரிய ஐங்குறுநூற்றுப் பாடலில் குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமான முருகன், பாலைத்திணையில் மயங்கி வந்துள்ளது. மேலும் ஒரு திணையில் முதற்பொருளான 'மாமலை' என்னும் குறிஞ்சி நிலம், பாலைத்திணையில் மயக்கம் பெற்று வந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

'கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய
ஆன் நீர்ப்பத்தல் யானை வௌவும்
குல் அதர்க்கவலை செல்லின் மெல்லியல்
புயல் நெடும் கூந்தல் புலம்பும்
வயமான் தோன்றல் வல்லாதீமே' (ஐங்.304)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாலைத் திணைப்பாடலில் முல்லை நில மக்களான கோவலர் பாலைத் திணையில் மயங்கி வந்துள்ளது. கருப்பொருளில் தெய்வத்திற்கு அடுத்த நிலையில் உள்ளது நில மக்களே ஆவார்கள். அவர்கள் பொருளாதாரத்தின் காரணமாக ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்குச் சென்றுள்ளனர் என்பதையும் அறிய முடிகின்றது. இதுவே கருப்பொருள் வழிவந்த திணை மயக்கம் ஆகும்.

## 2.3 ஐவகை நில அமைப்பு

மிகப்பழமையான இனம் தமிழ் இனம், மிகப்பழமையான மொழி தமிழ் மொழி, படிப்படியாக தமிழ் இனம் நாகரீக வளர்ச்சி அடைந்தது என்பதை இலக்கியங்கள் காட்டும் ஐவகை நில அமைப்பு மூலமும் அங்கு வாழ்ந்த மக்கள் மூலமும் அறிய முடிகிறது.

### 2.3.1 ஐவகை நிலம்

உலகில் உள்ள நிலப்பரப்பில் இயற்கையாகவே மலை, காடு, வயல், கடல், பாலைவனப்பகுதி என்னும் ஐந்து வகையான நில அமைப்புகள் உள்ளன. உலகிற்கே உரிய இந்த நில அமைப்பிற்கு அந்தந்த நிலங்களில் வளரும் மரம், செடி, கொடி, மலர்களால் குறிஞ்சி, முல்லை மருதம், நெய்தல், பாலை என்று பெயர் வைத்தவர்கள் பண்டைத் தமிழர்கள் ஆவர். இதனை அந்நிலத்திற்குரிய தெய்வம், உணவு, விலங்கு, மரம், புள், பறவை, தொழில், யாழ் முதலியன அவ்வத்திணைக்குரிய பாடல்களில் கூறப்படுகின்ற தன்மை வழி அறியமுடிகிறது.

## 2.4 குறிஞ்சி நிலம்

தொன்மைக்கால மனிதன் கட்டிட வளர்ச்சிக்கு முன்னர், பாதுகாப்பிற்காக அடைக்கலமான இடம் மலைக்குகைகளேயாகும். அவனே முதல் மனித சமுதாயமாகவும், வேட்டைச் சமூகமாவும் இருந்தான். முதலில் மனிதன் தங்கிய மலைகளே குறிஞ்சி என்றழைக்கப்படுகிறது. குறிஞ்சி என்பது மலையும் மலைச்சார்ந்த நிலமாகும். இதன் தெய்வம் முருகனாவான். இதனைத் தொல்காப்பியர், 'சேயோன் மேய மைவரை உலகம்' என்கிறார்.

குறிஞ்சித்திணைக்குரிய பெரும்பொழுது குளிர்காலமும், முன்பனிக்காலமும் ஆகும்.

ஐப்பசி மாதத்தில் முன்பனிக்காலம் தொடங்கி தை, மாசி மாதங்களில் குளிர் அதிகமாக இருக்கும். இத்தகைய குளிர் காலம் குறிஞ்சிக்குரியது என்பதை,

'குன்று குளிப்பன்ன கூதிர்ப்பானாள்' (நெடுநல்.12)

என்று நெடுநல்வாடை பாடல் வரி விளங்குகிறது.

குறிஞ்சி நில மக்கள் வில், அம்பு போன்ற கருவிகளைப் பயன்படுத்தினர். அவை இரும்பினால் அமைந்தவை அன்று. ஊகம் புல்லின் ஈர்க்கின் நுனியில் வளாரை நாரை வில்லைப் போல் வளைத்துக்கட்டி, உடை மரத்தின் முள்ளை அம்பைப் போல் செலுத்தினர் வேடவர்கள் என்பதை,

'வெள்வாய் வேட்டுவர் வீழ்துணை மகாஅர்
சிறியிலை உடையின் சுரையுடைவால்முள்
ஊக நுண் கோல் செறிந்த அம்பின்' (புறம்.334)

என்ற புறநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறிமுடிகிறது. மேலும் வேடர்கள் பறவையின் இறகுகளை அம்பில் செருகி அம்புகளை விரைவாகச் செலுத்துவற்குப் பயன்படுத்தினர் என்பதை,

'இறகு புடைத்து இறற்பறைப்புள்தூவி
செங்கணைச் செறித்த வண்கண் ஆடவர்' (நற்.329)

என்னும் நற்றிணைப் பாடல்வரிகள் விளக்குகின்றன. ஆகவே குறிஞ்சி நில மக்கள் வில், அம்பு போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளதை இதன்வழி அறியமுடிகிறது.

### 2.4.1 குறிஞ்சி நில மக்களின் வாழ்க்கை முறை

மலைகள், குன்றுகள் அவற்றைச் சார்ந்த இடங்களே குறிஞ்சி நிலம் என்பர். குறவர், குன்றவர் என்று இந்நிலமக்கள் அழைக்கப்பட்டனர். இவர்கள் வாழ்ந்த பகுதியைச் சிறுகுடி, குறுவர்பாக்கம் என்று கூறினர். கானவர், வேட்டுவர் ஆகியோரும் குறிஞ்சி நில மக்களே ஆவார்கள்.

கானவர் போன்று புனவரும் குறிஞ்சி நிலத்தில் வாழும் ஓரின மக்களாவார்கள். ஏனெனில் மலையில் வீடு மற்றும் பயிரிடுவதற்கு ஏற்ற நிலஅமைப்பு கிடையாது. அத்தகைய வேலைகளை இந்தப் புனவர்களே செய்தனர் என்பதைக் குறுந்தொகை,

‘மரம் கொல் கானவன் புனம்துளர்த்து வித்திய
பிறங்குகுரல் இறடி காக்கும் புறம்தாழ்
அம்சில் ஓதி அசை இயல் கொடிச்சி’ (குறுந்.214)

என்கிறது.

காட்டில் ஏற்படும் தீயினால் அழிந்த பகுதிகளில் உள்ள கருகிய மரங்களை வெட்டி நிலத்தைப் பண்படுத்தினரே தவிர, காடுகளை அழிக்கவில்லை என்பதையும் மேற்கூறிய பாடல் வரிகள் மூலம் தெளிய முடிகின்றது.

குறிஞ்சி நில மக்களின் குடில் தாழ்வான குடில் அமைப்பினைக் கொண்டது. இத்தகைய குடில்களின் மேல் தினைத்தாளையும், ஐவன நெல்லின் தாளையும், புற்களையும் கூரையாக வேய்ந்துள்ளனா் என்பதனை,

**‘இருவிவேய்ந்த குறுங்காற்குரம்பை**

**பிணையோ் நோக்கின் மனையோள் மடுப்பத்**

**தேம்பிழி தேறல் மாந்தி மகிழ் சிறந்து’** (குறிஞ்சி -153-155)

என்ற குறிஞ்சிப்பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. குறுகிய கால்களை உடையனவாகக் குறவா் குடில்கள் இருந்தன என்பதையும், தினைத்தாளைக் கூரையாக வேய்ந்தனா் என்பதையும், தினை, குறிஞ்சி நில மக்களின் உணவாக இருந்துள்ளது என்பதையும் அறியமுடிகிறது.

சிவந்த குருதியின் நிறம் போன்ற காந்தள் பூ, குறிஞ்சிப் பூ, குவளை ஆகிய மலா்கள் குறிஞ்சி நிலத்திற்கு உரியனவாக இருந்தன என்பதை,

‘குருதிப் பூவின் குலைக் காந்தட்டே’ (குறுந்.1)

**‘காந்தள் குருதி ஒண்பூ’** (நற்.34)

என்ற பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

**‘கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே’** (குறுந்.3)

என்ற குறுந்தொகைப் பாடல் வரிகள் குறிஞ்சிப் பூ பற்றிக் கூறுகின்றன. இப்பூ பன்னிரெண்டு ஆண்டுக்கு ஒருமுறை மலா்வதாகும். அரிதாகவே இப்பூ பூக்கும் என்பதையும் அறிய முடிகின்றது.

குறிஞ்சி நிலத்தில் உள்ள சுனைகளில் குவளை மலர்கள் பூத்திருந்தன என்பதனை,

**‘குறுஞ்சுனைக் குவளை வண்டு படச் சூடிக்**

**கான நாடன் வரூஉம்’** (அகம். 128)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள், கானவன் ஒருவன் குறுகிய சுனையில் பூத்த குவளை மலரைச் சூடிவந்த செய்தியைக் கூறுகிறது. இதில் கூறப்படும் சுனை என்பது மலைப்பகுதிகளிலும் அதன் குகைப்பகுதிகளிலும் காணப்படும் நீரூற்றாகும்.

குறிஞ்சி நிலத்தில் அகில், வேங்கை, தேக்கு, சந்தனம் போன்ற மரங்கள் இருந்துள்ளன என்பதை,

**‘கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது**

**நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்’** (அகம்.2)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் மிளகுக்கொடி சந்தன மரத்தில் படர்ந்துள்ளதை அறியமுடிகிறது. கொல்லனின் உலைக்களத்தில் அடிக்கும் இரும்பின் பொறி சிதறுவது போலச் சிறிய பல காய்களை உடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிரும் என்பதை,

**‘------- -------------------- கொல்லன்**

**எறிபொன் பிதிரின் சிறுபல் தாஅய்**

**வேங்கை வீ உகும் ஓங்கு மலைக்காட்சி’** (நற்.13)

என்ற கபிலரின் பாடல் வரிகள் மூலம் காணமுடிகிறது.

குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்கு புலி, குரங்கு, களிறு ஆகியவையாகும். கிளி, மயில், பருந்து, குருவி, குயில் போன்றவை இந்நிலப் பறவைகள் ஆகும்.

கிளியைக் 'கிள்ளை' என அழைப்பர் கிள்ளைக் கூட்டங்கள் தலைவியின் இனிய குரலைக் கேட்டு தினைக்கொல்லையை விட்டு நீங்காமல் உள்ளன என்பதை,

**'கொடிச்சியின குரல் கிளி செத்தடுக்கத்துப்**

**பைங்குரலேனற் படர் தருங் கிளியென'** (ஐங்.289)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

மேலும் மயிலை 'மஞ்ஞை' என்று அழைத்துள்ளனர் என்பதனை,

**'ஆடுசீர் மஞ்ஞை அரிகுரல் தோன்ற'** (பரி.பா.17)

என்ற பாடல்வரி எடுத்துரைக்கிறது. அதே போன்று பருந்து சிவந்த காந்தள் மலரை இறைச்சி என்று கருதி மலரின் இதழ்களைச் சிதைக்கும் நிகழ்வை,

**'தீயினன்ன ஒண் செங்காந்தள்**

**தூவற் கலித்த புதுமுகை ஊன்செத்து**

**அறியா தெடுத்த புன்புறச் சேவல்'** (மலை.145-147)

என்ற மலைபடுகடாம் பாடல் வரிகள் காட்டுகின்றன. இதில் 'புன்புறச் சேவல்' என்பது பருந்தாகும். மேலும் தினையரிந்த தாளின் பொருந்தியிருந்த தழைத்த கதிர்களையும், புழுப்பூச்சிகளையும், குருவிகள் விரும்பியுண்ணும்

என்பதனை ‘இருவியிருந்த குருவிகள்’ என்று அகநானூறு (பாடல் எண்.388) கூறுவதிலிருந்து காணலாம்.

குயில்கள் மலைப்பகுதிகளில் உள்ள மாமரங்களின் பூக்களைக் கொத்தி உண்ணும். வயிறு நிறைந்த மகிழ்ச்சியால் பாடும். இதனை,

**‘மாநனை கொழுதி மகிழ்குயிலாலும்**
**நறுத்தண் பொழில் கானங்’** (நற்.9)

என்ற நற்றிணைப் பாடல்வழி அறியலாம். இவை மட்டுமின்றி புலிகள் தங்கள் குட்டியுடன் மலைக்குகைகளில் படுத்திருந்ததையும், மகளிர் காய வைத்த தினையைக், குரங்குகள் உண்பதையும், களிற்றைக் கானவர்கள் வேட்டையாடியதையும், புலியும் யானையும் தம்முள் அடிக்கடி போர் செய்வது பற்றிய குறிப்புகள், சங்க இலக்கியங்களில் குறிஞ்சித் திணைப் பாடல்வரிகளில் இடம் பெற்றுள்ளதன் மூலம் அறியலாம். உதாரணமாக யானையுடன் புலி போர் செய்த செய்தியை,

**‘மாசில வெண்கோட்டு அண்ணல யானை**
**வாயுள் தப்பிய வருங்கேழ் வயப்புலி**
**மாநிலம் நெளியக் குத்தி’** (அகம்.251)

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகின்றது.

### 2.4.2 குறிஞ்சி நில மக்களின் தொழில்

மனிதன் தன் வாழ்வில் முன்னேற்றம் அடையவும் தன் தேவைகளைப் பூர்த்தி செய்யவும் பொருளாதாரம் தேவையான ஒன்றாக உள்ளது. அதற்காக மனிதர்கள் தற்போது பல தொழில்களை மேற்கொள்கின்றனர். ஆனால்

பண்டைக் கால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே வாழ்ந்தனர். ஆகவே அவர்கள் வாழும் நில அமைப்புப் படியும் அதன் சூழல் தன்மைக்கு ஏற்றவாறு தொழில் செய்தும் வந்துள்ளனர் என்பதைச் சங்கப் பாடல்கள் மூலம் காணமுடிகின்றது.

குறிஞ்சி நில மக்கள் தினை விதைத்தல், கொல்லையமைத்தல், தினையைப் போர் அடித்தல், தேன் எடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளதை அறிய முடிகிறது.

### 2.4.2.1 தினை விதைத்தல்

தினை என்பது ஒரு சிறுதானிய வகையைச் சார்ந்ததாகும். குறவர்கள் கார்காலத்தில் மழைபெய்த உடன் நிலத்தை உழுது, பண்படுத்தி தினை விதைத்துள்ளனர். இதனை,

> 'கார்ப்பெயற் கலித்த பெரும்பாட் பீரத்துப்
> பூழி மயங்கப் பலவுழுது வித்தி' (புறம்.120)

என்ற கபிலரின் புறநானூற்றுப் பாடல் வரிகள் விளக்குகின்றன.

### 2.4.2.2 கொல்லையமைத்தல்

குறவர் மலைப்பக்கத்தில் கொஞ்சம் சமமான இடத்தைக் கண்டுபிடித்து அதனைச் சுற்றி மரங்களை வெட்டி நிலத்தைப் பண்படுத்தி புதுக்கொல்லையை அமைத்துள்ளனர். இது இன்றைய வேளாண் முறையுடன் தொடர்புடையதாக அமைவதைக் காணமுடிகிறது.

2.4.2.3 தினையைப் போர் அடித்தல்

தினைக் கதிர்களை அறுவடை செய்த பின்னர் சமமான இடத்தில் பரப்பி வைத்து அதன் மீது யானை போன்ற விலங்கினைக் கொண்டு மிதிக்கச் செய்தால் கதிரில் உள்ள தானியம் கீழே உதிரும். இதுவே போர் அடித்தல் எனப்படும்.

குறவர்கள் தினைக்கதிர்களைக் கொய்து, அங்குள்ள பாறைகளின் மேல்போட்டுக் களிற்று யானைகளைக் கொண்டு காலில் மிதிக்கச் செய்வர். இதனை,

**'….. …….. அகன்ற கட்பாறை**
**மென்றினை நெடும்போர் புரிமார்**
**உறங்கு களி நெடுப்பும்'** (நற்.125)

என்று போர் அடித்தல் பற்றி இப்பாடலின் ஆசிரியரான கச்சிப் போட்டுக் கதக்கண்ணனார் நற்றிணையில் கூறுகிறார்.

2.4.2.4 வேட்டையாடுதல்

மக்கள் விலங்குகளிடம் இருந்து தங்களைக் காத்துக் கொள்ள முதலில் வேட்டையாடத் தொடங்கினர். பின்பு அதனையே தனக்குரிய தொழிலாக மாற்றிக் கொண்டனர்.

கூட்டம் கூட்டமாகக் கானவர்கள் செயல்படுவது அவர்கள் வேட்டையாடும் முறைகளில் ஒன்றாகும். பாறைகள் செறிந்த குன்றுகளில் குகைகளைக் கண்டு அவற்றின் வாயிலில் கற்பலகையால் கதவமைத்துள்ளனர். அதன் உள்ளே ஆடுகளைக்கட்டிப் புலிகளை

அதனுட்புகுவிக்க வைத்து அவை ஆட்களைத் தாக்க வரும் போது ஆட்டிற்கும் புலிக்கும் இடையில் உள்ள கதவும் மூடிக்கொள்ளுமாறும், வாயிற்கதவாகிய கற்பலகையும் மூடிக்கொள்ளுமாறும் பொறியமைத்துள்ளனர். இதற்குக் 'கல்லடார்' என்று பெயர். இந்த வேட்டை முறையை,

**'இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய**

**பெருங் கல்லடார்'** (புறம்.19)

என்று குடபுலவியனார் குறிப்பிடுவதன் மூலம் அறிய முடிகிறது. இதுமட்டுமின்றி கானவர்கள் அகன்ற நிலப்பிளவின் வாயிலில் வார்களால் பின்னப்பட்ட கண்ணியமைத்தும் விலங்குகளை வேட்டையாடியுள்ளனர் என்பதையும், அதில் மாட்டும் விலங்குகளைத் தங்களுடைய சிறுகுடிக்குக் கொண்டு வந்து உண்டதையும் காணமுடிகிறது.

மலைநாட்டில் வாழும் குறிஞ்சி நில மக்களாகிய கானவர்கள் தேன், கிழங்கு, ஊன் நிறைந்த பன்றியின் தசை போன்றவற்றால் சமைத்த உணவுகளை, பனையோலையால் செய்யப்பட்ட பெட்டிகளில் வைத்து உண்டதோடு அதை விருந்தினருக்கும் கொடுத்தனர் என்பதை,

**'வேட்டுவன் மான்தசைசொரிந்த வட்டியும்'** (புறம்.33)

என்ற புறநானூற்றுப் பாடல்வரிகள் காட்டுகின்றன. இதுமட்டுமின்றி நெய்யில் பொரித்த, வெந்த, பருத்த தசையை அழகிய தினையரிசிச் சோற்றுடன் வழங்கியதையும் இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

கானவர்கள் நாய்களுடன் வேட்டைக்குச் சென்றதை,

‘கான் உறை வாழ்க்கை கதநாய்

வேட்டுவன்’ (புறம்.33)

என்ற புறநானூற்றுப் பாடல்வரிகள் எடுத்துரைக்கின்றன.

### 2.4.2.5 தேன் எடுத்தல்

குறவர் ஏறமுடியாத மலை உச்சியின் மேல் தேனீக்கள் சேர்த்து வைத்திருக்கும் தேனைக் கண்ணேணியை வைத்து ஏறித் தேனை எடுப்பர். கண்ணேணி என்பது கணுக்களில் அடி வைத்து ஏறியிறக்கும்படி அமைந்துள்ள மூங்கிலாகும். குறவர்கள் மலைகளில் உள்ள பாறைகளின் உச்சியில் அமைந்துள்ள தேனை அறுத்தெடுக்க முயல்வதை,

‘அறையுறு தீந்தேன் குறவர் அறுப்ப’ (அகம்.322)

என்று பரணர் கூறுவதில் இருந்து அறியமுடிகின்றது.

## 2.5 முல்லை நிலம்

குறிஞ்சி நிலத்தை அடுத்து மக்கள் விலங்குகளைத் தன் தேவைக்காகப் பயன்படுத்தி வாழ்ந்த இடம் முல்லை நிலமாகும். காடும் காடு சார்ந்த இடமும் முல்லை நிலமாகும். இவர்கள் திருமாலைத் தெய்வமாகத் தொழுதனர். இதனைத் தொல்காப்பியர் ‘மாயோன் மேய காடுறை உலகமும்’ (நூா.எ.951) என்று கூறுவதன் மூலம் அறியலாம். முல்லைத் திணைக்குரிய காலம் கார்காலம் ஆகும்.

கார்காலம் என்பது மழைக்காலம் ஆகும். இது ஆவணி, புரட்டாசி மாதங்களில் நிகழும். இந்நிலத்திற்குரிய உரிப்பொருள் ‘இருத்தலும்

இருத்தல் நிமித்தமும்' ஆகும். முல்லை நிலத்தின் கார்காலத்தையும் தலைவியின் நிலையையும் முல்லைப்பாட்டு கூறுவதில் இருந்து காணமுடிகின்றது.

### 2.5.1 முல்லை நில மக்களின் வாழ்க்கை முறை

முல்லை நிலம் மலைகளின் அடிவாரத்தில் அமைந்த சிறுகுன்றுகளும், காடுகளும் அமைந்த பகுதியாகும். இங்கு வாழ்ந்த மக்கள் கோவலர், ஆயர், இடையர் என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டனர். இதனை,

**'கோவலர் பெருதண் நிலைய பாக்கம்'** (ஐங்.439)

என்று ஐங்குறுநூற்றுப்பாடல் குறிப்பிடுகின்றது. இவர்கள் வாழ்ந்த ஊர்கள் சிறுசிறு பகுதிகளாக இருந்துள்ளன. இவை பாடி, சேரி என்றழைக்கப்பட்டுள்ளன.

கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் மகிழ மேகக் கூட்டங்கள் கார் காலத்தில் மழை பெய்வதால் அக்காலத்தில் முல்லை மலர்கள் பெரிய அரும்புகளுடன் கொடி முழுவதும் பரப்பி நின்றன. இத்தகைய நிலத்தில் புள்ளிமான் கூட்டம் ஆட்டுக் கூட்டத்தோடு விளையாடும். இத்தகைய இயற்கைச் சூழல் நிறைந்த பகுதி முல்லை நிலமாகும்.

முல்லை நில மக்கள் தங்கள் வீடுகளைக் குறுகிய கால்களைக் கொண்ட குடில்களாக அமைத்து, அக்குடில்களின் மேல் கேழ்வரகுத்தாள், வரகுத்தாள் கொண்டு வேய்ந்தமையை,

'பருவ வானத்துப் பாமழைக் கடுப்பக்

கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர்' (பெரும் 190-191)

என்னும் சங்க இலக்கியப் பாடல்வரிகள் மூலம் அறிய முடிகிறது.

முல்லை, கொன்றை மலர்கள், பீர்க்கம் பூ, கருவிளை போன்றவை முல்லை நிலத்திற்குரிய பூக்களாக இலக்கியங்கள் காட்டுகின்றன. பொன்நிறக் கொன்றைப் பூக்கள் மழை பெய்த செந்நிலப் பெருவழியில் விழுந்து கிடக்கும். இது செல்வந்தர்கள் திறந்து வைத்திருக்கும் பொன் நிறைந்த பெட்டி போன்று காட்சியளிக்கும் தன்மையது என்பதை,

'ஆடுகளப் பறையின் வரிநுணல் கறங்க

ஆய்பொன் அவிரிழை தூக்கியன்ன

நீடிணர்க் கொன்றை கவின் பெறக்காடுடன்' (அகம்.364)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. மழைக்காலத்தில் பூக்கும் பீர்க்கம் பூவானது தலைவியின் பசலை நோய்க்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. அதேபோன்று வெண்மையான முல்லைப் பூவானது காட்டுப்பூனையின் பற்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனை,

'நீர் வார் பைம்புதற் கலித்த

மாரிப் பீரத்து அலர்சில கொண்டே' (குறுந்.98)

'இருவி சேர் மருங்கில் பூத்த முல்லை

வெருகு சிரித்தன்ன பசுவீ' (குறுந்.220)

என்ற குறுந்தொகைப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

முல்லை நிலத்தில் கொன்றை, காயா போன்ற மரங்களும் இருந்தன. இந்நிலத்தில் முயல், மான் போன்ற விலங்குகளும் கான வாரணம்,

கருங்காக்கை போன்ற பறவைகளும் இருந்துள்ளன என்பதை முல்லைத் திணைப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

நெல்லிக்காயைப் போன்ற சிறிய உருண்டை விழிகளையும் கூர்மையான முடியையும், வளைந்த செவிகளையும் உடையவனாக முயல்கள் இருந்தன என்பதை,

**'சிறியிலை நெல்லிக்காய்கண் டன்ன**
**குறு விழிக்கண்ண கூரலங் குறுமுயல்**
**முடந்தை வரகின் வீங்குபுள் அருந்துபு**
**குடந்தையஞ் செவிய கோட்பவர் ஒடுங்கி'** (அகம்.284)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள் கூறுகின்றன. மேலும் இம்முயல்கள் வரகின் குருத்தினைத் தின்று காய்களைக் கொண்ட கொடிகளுக்குள் புகுந்து கிடந்தன. ஆயர் வீட்டின் முற்றத்து நீரைப்பருகி வாழ்ந்தன என்பதையும் காண முடிகிறது. இதே போன்று ஆழ உழுது பண்படுத்தி விதைத் தானியமான வரகின் சுவை மிகுந்த கதிர்களை மான்கள் உண்டன என்பதை,

**'இரலை நன்மான் இளம் பரந்தலை போல்**
--------- ------------- -------------- ------------- -----------
--------- ------------- -------------- ------------- -----------
**களை கால் கழீஅய பெரும்புன வரகின்**
**கவைக் கதிர் இரும்புறங்கதூஉ உண்ட'** (அகம்194)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் காண முடிகின்றது.

கானவாரணம் என்பது காட்டுக் கோழியாகும். தலைவன், தலைவியைக் கார்காலத்தில் காண வரும் போது, இந்தக் காட்டுச் சேவல் ஈரமணலைக்

கொத்திக் கிளறி அதில் கிடைக்கும் புழுவைத் தம் அலகினால் எடுத்துத் தம் பெட்டைக்கு ஊட்டும் நிகழ்வைத் தலைவன் காண்கிறான். இதனை,

‘ஊருக்குறு நறுநெய் பால்விதிர் தன்ன
வரிக்குரல் மிடந்த அந்நுண்பல் பொறிக்
காமரு தகைய கான வாரணம்’ (நற்.21)

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் மூலம் உணரமுடிகிறது. இதே போன்று ஆய மகளிர் காக்கைக்குப் பாற்சோறு படைத்த செய்தியையும்

‘விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே’ (குறுந்.210)

என்னும் குறுந்தொகைப் பாடல் வரி மூலம் செவிலித்தாய் ஒருத்தி, காக்கையிடம், உடன்போக்குச்சென்ற என் மகள், அவள் தலைவனுடன் என் இல்லத்திற்கு திரும்பி விருந்திற்கு வருவதாகக் கரைந்தால் பாலுடன் சோறும் காக்கைக்குக் கொடுப்பதாகக் கூறுகிறாள்.

### 2.5.2 முல்லை நில மக்களின் தொழில்

முல்லை நிலம் காடு சார்ந்த பகுதியாகும். அந்நில மக்கள் பெரிதும் ஆநிரைகளையே வளர்த்தனர் என்பதாலும் அந்நிலத்தோடும், ஆநிரைகளோடும் தொடர்புடைய தொழில்களையே செய்து வந்துள்ளனர் என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் தெளிவாகக் காணமுடிகின்றது.

தயிர் கடைதல், வெண்ணெய் எடுத்தல், பால்கறத்தல் போன்ற பல தொழில்களில் ஈடுபட்டனர். இதுமட்டுமின்றி முல்லை நிலமக்கள் செந்நிலம்

புழுதியாகும் படி உழுதனர். முல்லைக்காடுகளை அழித்து பலமுறை உழுது தொடிப்புழுதி தரிசாக ஆகும் அளவிற்கு உழுதனர் என்பதை,

> **‘விதையர் கொன்ற முதையல் பூழி**
> **இடுமுறை நிரப்பிய ஈர்இலை வரகின்**
> **கவைக்கதிர் கறித்த காமர் மடப்பினை’** (நற்.121)

என்பதனை ஒருசிறைப் பெரியனார் கூறுவதன் மூலம் அறிய முடிகிறது.

### 2.5.2.1 தயிர் கடைதல்

வைகறைப் பொழுதில் ஆய்ச்சியர் மிகவும் சுறுசுறுப்பாகத் தயிர் கடைந்தனர் என்பதை முல்லைத்திணைப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. இரவு இருள் புலர்ந்து கெடும் விடியற்காலையில் ஆயர் மகளிர் விளாம்பழத்தின் மணம் நாறும் பானையின் கண் நெய்பெறும் பொருட்டு மத்தினால் தயிர் கடைந்தனர் என்பதை,

> **‘விளாம் பழம் கமழும் கமஞ்சூற் குழிசிப்**
> **பாசந்தின்ற தேய்கால் மத்தம்**
> **நெய் தெரியிக்கம் வெளில் முதல்முழங்கும்**
> **வைகுபுலர் விடியல்’** (நற்.12)

என்ற கயமனாரின் நற்றிணைப் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது. இது மட்டுமின்றி ஆயர் மகளிர் காலையில் தலையின் மேல் உள்ள மெல்லிய துணியால் செய்யப்பட்ட சுமட்டின்கண் மோர்ப் பானையை வைத்துக் கொண்டு, மோர் விற்று அதற்கு ஈடாக நெல் முதலியவற்றையும், நெய் விற்பதற்கு ஈடாக எருமையும் நல்ல ஆக்களையும் அவற்றின் கன்றுகளையும்

கொள்வர் என்பதைப் பெரும்பாணாற்றுபடை பாடல்வரிகள் (163-166) மூலம் காணமுடிகிறது.

### 2.5.2.2 ஆயர் ஆநிரை ஓட்டிச் செல்லல்

ஆயர்கள் காலையில் வீடுகள்தோறும் உள்ள மாடுகளை மேய்ப்பதற்கு ஓட்டிச் சென்றுள்ளனர். அவ்வாறு செல்லும் போது தமக்குரிய உணவினை எருதின் கழுத்தில் மூங்கிற் குழாயில் அடைத்துப் பூட்டி எடுத்துச் சென்றுள்ளனர். இதனை அகநானூறு,

**'................ ...... கோவலர்**

**மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி'** (அகம்.311)

என்கின்றது. நக்கீரரும் (அகம்.253) இதனைக் கூறுகிறார். கோவலர்கள் வாள் என்ற கருவியைப் பயன்படுத்தியதை,

**'பூவாட் கோவலர் பூவுடன் உதிர'** (புறம்.224)

என்று கருங்குழல் ஆதனார் கூறுவதன் மூலம் அறிய முடிகிறது. இதுமட்டுமின்றி காட்டு விலங்குகளிடம் இருந்து தங்களையும், தங்கள் ஆநிரைகளையும் பாதுகாத்துக் கொள்ள வளைந்த கோலினைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை முல்லைப்பாட்டு கொடுங்கோல் (பா.வரி.15) என்று கூறுகிறது.

முல்லை நில மக்கள் ஏறுதழுவுதல் போன்ற வீரவிளையாட்டுகளில் ஈடுபட்டுள்ளனர். ஆயர்கள் ஏற்றை அடக்குபவனுக்கே தங்கள் பெண்களைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர் (கலி.105). இதனையே இக்காலத்தில் ஜல்லிக்கட்டு என்கிறோம்.

## 2.6 மருத நிலம்

ஆற்றின் கரையோரப் பகுதிகளான வண்டல் பகுதிகளில் வயல்வெளிகளை அமைத்தனர் பண்டைத் தமிழர்கள். இத்தகைய வயலும் வயல் சார்ந்த இடமும் மருத நிலமாகும். இதனை, 'வேந்தன் மேய தீம்புனல் உலகமும்' (நூ.எ.951) எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். மருதத் திணைக்குரிய பெரும்பொழுது கார், குளிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் ஆகிய ஆறும் ஆகும். இந்நிலத்தின் உரிப்பொருள், 'ஊடலும் ஊடல் நிமித்தமும்' ஆகும். ஏனெனில் தலைவன் பரத்தையை நாடிச் செல்வதை மருத நிலத்தில் காணமுடிகிறது.

### 2.6.1 மருத நில மக்களின் வாழ்க்கை முறை

மருதப் பகுதிகளில் ஏரி பரந்த வயல்களையும், நீர் பரந்த நிலங்களையும் நெல் மலிந்த வீடுகளையும், நெல்விற்றுப் பொன் நிறைந்து இருக்கும் மதகுகளையும் காண முடிகிறது. இதனைப் புறநானூற்றுப்பாடல் (பா.எ.338) வரிகள் மூலம் அறிய முடிகிறது.

ஏரிகள் அல்லது ஆறுகள், குளங்கள் சார்ந்த நிலவளமும், நீர் வளமும் கொண்டது மருதத்திணையாகும். இங்கு மக்கள் சேர்ந்து வாழும் இருப்பிடங்கள் ஊர் என்றழைக்கப்பட்டன. அவ்வூரின் சிறுமை பெருமை கருதிச் சிற்றூர், பேரூர் என வழங்கினர் என்பதனை,

**'பேர் ஊரும் சி(ற்)று ஊரும் கௌவை எடுப்பவர் போல்'**

(கலி.109)

என்ற கலித்தொகைப் பாடல் வரி மூலம் அறியலாம். மேலும் இம்மருத நிலத்தே வாழும் மக்கள் களமர் எனப்பட்டனர்.இதனை,

**‘அறைக் கரும்பின் அரி நெல்லின்**

**இனக்களமர் இசை பெருக’** (பொருநர் 193-194)

என்ற பொருநராற்றுப்படை பாடல் வரிகள் மூலம் காணலாம். மருத நில மக்கள் உழவர், உழத்தியர் மற்றும் ஊரன் என்றும் அழைக்கப்பட்டதை அறிய முடிகிறது.

நெல்வளம் நிறைந்திருக்கும் மருத நிலத்தில் உழவர்கள் சேறு நிரம்பிக் கிடக்கும் வயல்களில் நாற்று முடிகளை நடுவார்கள். இத்தகைய உழவர்கள் தங்கள் வீடுகளின் மேல் கூரைகளைப் புதிய வைக்கோல், தென்னங்கீற்று போன்ற பொருட்களால் வேய்ந்திருப்பர். இத்தகைய வீடுகளின் முற்றத்தே அவல் இடிப்பர். அதன் ஓசையைக் கேட்டு கிளிகள் அஞ்சி பறந்து ஓடும். இத்தகைய தன்மை உடையதாக மருதநிலம் உள்ளது என்பதனை,

**‘.......... .......... கறைஅடிக்**

**குன்று உறழ் யானை மருங்குல் ஏய்க்கும்**

**வண் தோட்டுத் தெங்கின்வாடுமல் வேய்ந்த**

**மஞ்சல் முன்றில்’** (பெரும்.351-354)

என்னும் பாடல் வரிகள் மூலம் காய்ந்த தென்னையின் மடலால் கூரைகள் வேயப்பட்டிருந்ததைக் காணமுடிகிறது. இத்தகைய வீடுகள் உரல் போன்ற அடியினையும் மலையைப் போன்ற தோற்றத்தினையும் உடைய யானையின் உடம்பு போன்று இருந்தன என்பதைச் சங்கப்பாடல் வரிகள் மூலம் அறிய

முடிகிறது. அது மட்டுமின்றி வீட்டின் முற்றத்தில் மஞ்சள் செடி இருந்ததையும் காண முடிகிறது.

மருத நிலத்தில் குவளை, தாமரை, ஆம்பல் போன்ற மலர்களும் காஞ்சி, மருதம், வஞ்சி போன்ற மரங்களும் இருந்துள்ளன.

வயல்வளம் நிறைந்த மருத நில ஊர்களில் பண்ணைகளை அடுத்த பொய்கைகளில் குவளை மலரும், நெய்தல் மலரும் கலந்து பூத்திருந்தன என்பதை,

**'மாயிதழ் குவளையொடு நெய்தலும் மயங்கிக்**
**குரா அங்கலித்த கண்ணகன் பொய்கை'** (பட்டி.241-242)

என்று பட்டினப்பாலையின் ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவதில் இருந்து அறியமுடிகிறது.

தாமரை மலர்களும் அதன் இலைகளும் பொய்கைக்கு அழகு செய்வனவாகும், அழகும் மென்மையும் உடைய சிறுவர்களின் கண்களும், இளமகளிர் கண்களும் கால்களும் தாமரை மலர் போன்ற மென்மைச் சிறப்புடையதாக இருந்தன என்பதை,

**'நாயுடைய முதுநீர்க் கலித்த தாமரைத்**
**தாதின் அல்லி அயலிதழ் புரையும்**
**மாசில்அங்கை மணி மருள் அவ்வாய்**
**நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்**
**யாருவரும் விழையும் பொலந் தொடிப் புதல்வன்'** (அகம்.16)

எனும் அகநானூற்றுப் பாடல் வரிகள் இயம்புகின்றன. மருதநில மக்கள் ஆம்பல் மலரையும் செங்கழுநீர் மலர்களையும் இதழ் ஒடியாமல் பசுந்தழையுடன் சேர்த்துக்கட்டி உடை போல் அணிந்து கொண்ட செய்தியை,

'அரிமலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ
விழவொடு மகளிரொடு தழூஉ அணிப்பொலிந்து' (அகம்.176)

எனும் அகநானூற்றுப் பாடல் வரிகள் காட்டுகின்றன.

மருதமரத்தின் உயர்ந்த கிளைகளிலே ஏறி ஆம்பலும் குவளையும் சேர்த்துத் தழையுடையணிந்த இயவர் வயலில் அமரும் புள்ளினங்களை ஓட்ட இசைப்பர். அதற்கேற்ப மயிலினங்கள் ஆடும் காட்சியினை,

'துறை நனி மருதம் ஏறி தெருமார்
எல்வளை மகளிர் தெளிவிளி இசைப்பின்
பழனக் காவின் பசுமயில் ஆலும்' (பதிற்.27)

எனும் பதிற்றுப்பத்து பாடல் அடிகள் இயம்புகின்றன.

செந்நெல்லும், வெண்நெல்லும் நிரம்பிய வயல்களை உடைய மருத நிலத்தில் எருமை, நீர்நாய் போன்ற விலங்கினங்களும் நாரை, அன்னம், குருகு, மகன்றில், நீர்க்கோழி போன்ற பறவை இனங்களும் இருந்துள்ளன என்பதை மருதத்திணைப் பாடல்கள் சுட்டுகின்றன. மருதநில மக்கள் எருமைக்கன்றுகளைத் தங்கள் வீடுகளில் உள்ள தூண்களில் கட்டி வைத்திருந்தார்கள் என்பதை,

'தட மருப்பு எருமை மடநடைக் குழவி
தூண் தொரும் யாத்த காண்தரு நல்லில்' (நற்.120)

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் காட்டுகின்றன.

பல நிறங்களை உடைய மலர்கள் நிறைந்த நீர் நிலையின்கண் ஆண் அன்னத்துடன் பெண் அன்னம் விளையாடும் காட்சியினை,

**‘மணிநிற மலர்ப் பொய்கை மகிழ்ந்து ஆடும் அன்னம்தன்**
**அணிமிகு சேவல் அகல் அடை’** (கலித்.70)

என்னும் கலித்தொகை அடிகள் மூலம் காணமுடிகின்றது.

மருதநில மக்கள் தங்கள் வீடுகளில் கோழிகளை வளர்த்துள்ள செய்தியும் இலக்கியங்களில் உள்ளன. கரிய தளிர்களை உடைய யாமரங்கள் பற்றி விளக்கும் போது அவற்றின் கரிய தளிர்களைப் போன்று தொங்கும் தாடிகளைக் கொண்ட மனையுறைக் கோழிகள் இருந்ததை அகநானூற்றுப் பாடல் வழி அறியமுடிகிறது.

**‘கல் சேர்பு இருந்த சில்குடிப் பாக்கத்து**
**எவ்விருந்து அயர ஏமத்து அல்கி**
**மனையுறை கோழி அணல் தாழ்பு அன்ன**
**கவையொண் தளிர கருங்கால் யாஅத்து’** (அகம்.187)

என்று பாடலின் ஆசிரியர் கூறுவதன் மூலம் அறிய முடிகிறது.

மருதநில மகளிர் தங்கள் வீடுகளின் முற்றத்தில் காயவைத்த நெல்லைக் கவர வரும் கோழிகளை விரட்டிய செய்தியையும் சங்கப் பாடல்கள் மூலம் காணமுடிகிறது.

### 2.6.2 மருதநிலத் தொழில்கள்

மருதநிலம் வயல்களை மிகுதியாக உடைய பகுதி. ஆகவே அங்குள்ள மக்கள் வேளாண்மைத் தொழிலையே செய்தனர். வேளாண்மை சார்ந்த ஏர் உழுதல், நாற்று நடுதல், நீர் பாய்ச்சுதல், நெல் அரிதல், பதரையும் நெல்லையும் பிரித்தல் போன்றவை மருத நில மக்களின் முக்கியத் தொழில்களாக அறியப்படுகின்றன.

#### 2.6.2.1 உழுதல்

வேளாண்மையின் முக்கியமான செயல் நிலத்தை நன்கு ஆழ உழுதலாகும். நிலத்தை நன்கு ஆழமாக உழுதால்தான் விதைகள் நன்கு செழித்து வளரும். உழவர், பெரிய மழைபெய்த இருள் புலர்ந்த காலைப்பொழுதில் ஏர்களால் இடமுண்டாக நிலத்தைக் கீழ் மேலாகப் புழுதி புரளும்படி உழுவர். அதற்காக நன்கு நடைபயின்ற எருதுகளை வீட்டின் வாயிலிலேயே நுகத்தில் பூட்டிக் கொண்டு செல்வர். அவ்வாறு உழும்பொழுது உழவர்கள் மங்களப் பாட்டுப் பாடுவர். இதனை,

**'வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ**
**செங்கண் எருமை இனம் பிரி ஒருத்தல்'** (பெரும்.472-473)
**'எருது எறிகளமர் ஓதையொடு நல்யாழ்**
**மருதம் பண்ணி அசையினர் கழிமின்'** (பெரும்.469-470)

என்னும் பெரும்பாணாற்றுப்படை பாடல் அடிகள் மூலம் காண முடிகிறது. மேலும் உழவர்கள் ஈரம் புலராத நன்செய் நிலத்தில் விதைப்பதற்குக் கூடையில் விதைகளைக் கொண்டு சென்றனர். இதனை,

'அரிகால் மாறிய அங்கண் அகன்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவயின்
வித்தொடு சென்ற வட்டி' (நற்.210)

என இப்பாடலின் ஆசிரியர் மிளைகிழான் நல் வேட்டனார் கூறுவதில் இருந்து அறிய முடிகிறது. இது மட்டுமின்றி உழவர்கள் வயலில் நெல்லை விதைப்பதற்குக் கூலித் தொழிலாளர்களைப் பயன்படுத்தியதையும் அதற்குக் கூலியாக நெல்லைப் பெற்றதனையும் ஓரம் போகியார் கூறுகிறார். இதனை,

'வித்திய உழவர் நெல்லொடு பெயரும்' (ஐங்.3)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

உழவர்கள் நுண்ணிய சேற்றில் வீசிய நாற்றை நடுவர். நடவு வேலையின் காரணமாக விடியற்காலையில் எழுந்து வரால் மீனுடன் அரிசிச் சோற்றை வாய்கொள்ள உண்பர். நீர் நிரம்பிய வயலின்கண் நாற்று முடிகளை அவிழ்த்து நாற்று நடுபவர்களோடு செல்வர் என்பதனைக் கீழ்க்காணும் நற்றிணைப்பாடல் வரிகள் மூலம் தெளியலாம்.

'………….. தண் புலர் விடியல்
கருங்கண் வராஅற் பெருந்தடிமிளிர்வையொரு
புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு
கவர்படு கையை கழும மாந்தி
நீருறு செறுவின் நாறுமுடி அழுத்த நின்
நடுநரோடு சேறி' (நற்.60)

என்பர் தூங்கல் ஓரியார்.

### 2.6.2.2 களை எடுத்தல்

களை என்பது பயிர்களின் ஊடே வளரும் தேவையில்லாத செடி கொடிகளாகும். இவற்றை அகற்றாவிட்டால் பயிர்கள் நன்றாக விளைச்சலைத் தராது. ஆகவே நாற்றுநட்ட வயலில் பயிர்செழித்து வளரும் பொழுது,களையும் வளரும். அக்களையைக் கையால் பறித்து நீக்குவர். பயிர்கள் நன்கு விளையும் படி பயிர்களை ஒதுக்கி களை பறிப்பர், மருத நில உழவர்கள், என்பதனையும் சங்க இலக்கிய மருதத் திணைப் பாடல்கள் மூலம் அறிய முடிகின்றது.

### 2.6.2.3 நெல் அரிதல்

மருத நில உழவர்கள் நெற்பயிர்கள் நன்கு முற்றிய பிறகு, கூரிய வாயையுடைய அரிவாளால் நெல்லினை அரிவர். அறுவடை செய்த இந்த நெற்கட்டுகளைக் களங்களுக்குக் கொண்டுவருவர். நெல் அறுத்த களமர் அசையும் பக்கங்களையுடைய பெரிய நெற் கட்டுகளைக் களங்களுக்குத் தூக்கிச் செல்வர். இதனை,

**‘அரிஞர் யாத்த அலங்குதலைப் பெருஞ்சூடு**
**கள்ளார் வினைஞர் களத்தொறும் மறுகும்’** (அகம்.84)

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் மூலம் காணமுடிகிறது. இவ்வாறு களத்திற்குக் கொண்டு வந்த நெற்கட்டுகளைத் தரையில் அடித்து நெல்மணிகளை உதிரச் செய்வர். அதில் முழுவதும் உதிராத மீதம் இருக்கக்கூடிய நெல்மணிகளை உதிரச் செய்வதற்கு நான்கைந்து மாடுகளை ஒன்றாகப் பிணைத்துக் கதிர் அடித்த தாள்களின் மீது சுற்றி வரச் செய்வர்.

இதனைக் கடாவிடுதல் என்று புறுநானூறு கூறுகிறது.

**‘நாட் கடா வழித்த நனந்தலைக் குப்பை’** (புறம்.353)

என்று காவிரிப் பூம்பட்டினத்துக் காரி கண்ணனார் பாடல் வரி மூலம் அறியமுடிகிறது.

2.6.2.4 நெல்லையும் பதரையும் பிரித்தல்

களத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு அடிக்கப்பட்ட நெற்கதிர்களில் இருந்து பதரையும் நெல்லையும் மருதநில உழவர்கள் பிரித்தெடுத்த செய்தியை,

**‘பைதற விளைந்த பெருஞ்செந்நெல்லின்**
**தூம்புடைத் திரடாள் துமித்த வினைஞர்’** (பெரும்.230-231)

எனப் பெரும்பாணாற்றுப்படையின் ஆசிரியர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுவதன் மூலம் காண முடிகிறது. இவ்வாறு பிரித்த நெல்லை உழத்தியர் களத்தில் உள்ள நெல்மணிகளை அளப்பதற்காக மரக்கால்களைச் சொருகி வைத்திருப்பர். இம்மரக்கால்களை “அம்பண அளவை”[18] என்று சு.இராசாராம் கூறுகிறார். நாள்தோறும் நெற்கள் பெருகக்கூடிய வயல்களில் ஆம்பலையும், நெய்தலையும் நெற்கதிர்களுடன் அறுத்து குவிக்கப்பட்ட நெற்குவியல் மேல் மரக்கால்களை அளத்தற்காகக் சொருகி வைத்திருப்பார்கள் என்பதனை,

**‘பரூஉப் பக(டு) உதிர்ந்த மென் செந்நெல்லின்**
**அம்பண அளவை உறை குவித்தாங்கு’** (பதிற்.7)

என்னும் பதிற்றுப்பத்துப் பாடல் வரிகள் மூலம் தெளியலாம்.

## 2.7 நெய்தல் நிலம்

நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமும் ஆகும். இதனை ‘வருணன் மேய பெருமணல் உலகமும்’ (நூ.எ.951) என்று தொல்காப்பியர் கூறுவார். நெய்தல் திணைக்குரிய பெரும்பொழுது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் ஆகிய ஆறும் ஆகும். இந்நிலத்தின் உரிப்பொருள் ‘இரங்கலும் இரங்கல் நிமித்தமும்’ ஆகும். நிலத்தில் நடந்த வாழ்வைப் போன்று அல்லாமல் நெய்தல் நில மக்கள் நீரில் போராடிய வாழ்க்கையை மேற்கொண்டதை அறிய முடிகிறது.

### 2.7.1 நெய்தல் நில மக்களின் வாழ்க்கை முறை

கடல் வளம் சூழ்ந்தது நெய்தல் நிலமாகும். நெய்தல் நிலத்தில் உள்ள பரதவர்கள் அங்குள்ள கடற்கரையில் உள்ள மணல் மேடுகளில் தங்கள் குடில்களை அமைத்திருப்பர். அவை மூங்கில் கழிகளைப் பரப்பி வெள்ளிய மரக்கொம்புகளை இடை இடையே கலந்து தாழை நாரால் கட்டி புல்லைப் பரப்பி வேயப்பட்டிருக்கும். இத்தகைய குடிலின் முற்றத்தில் மீன் பிடிக்கின்ற பறியைத் தொங்கவிட்டிருப்பர் வலைஞர்கள். இதனை,

**‘வேடி நிரைத்து வெண்கோடு விரைஇ**
**தாழை முடித்து தருப்பை வேய்ந்த**
**குறியிறைக் குரம்பை பறியுடை முன்றில்’** (பெரும்.263-265)

என்னும் பெரும்பாணாற்றுப் பாடல் வரிகள் மூலம் அறிய முடிகிறது.

நெய்தல் நில மக்கள், மீன்பிடிக்கும் தொழிலை மேற்கொண்டனர். தலைவன் மீன்பிடித்தல் பொருட்டு கடலிற்குக் காலையில் சென்று மாலையில் வீடு திரும்புவான். அதுவரை தலைவி துன்பம் தோன்ற, தலைவன் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்த செய்தியைச் சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது.

கடற்கரையில் அமைந்திருக்கும் ஊர்களை உடையது நெய்தல் நிலம். இந்த ஊர்கள் பட்டினம், பாக்கம் என்று அழைக்கப்பட்டன. இதனை,

**'பெருங் கழிப்பாக்கம் கல்லென**

**வருமே தோழி கொண்கன் தேரே'** (நற்.111)

என்னும் நற்றிணைப் பாடல் வழி அறியலாம். மேலும் பாண்டியனின் தலைநகரமாக கொற்கைப் பட்டினமும், சோழனின் தலைநகரமாகக் காவிரிப் பூம்பட்டினமும் இருந்ததை ஆற்றுப்படை இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

நெய்தல் நிலமக்கள் பரதவர், துறைவன், சேர்ப்பன் என்றழைக்கப்பட்டனர். இதனைக் கீழ்க்காணும் பாடல் அடிகள் மூலம் காணலாம்.

**'உரவுக் கடல் உழந்த பெருவலைப் பரதவர்'** (நற்.63)

என உலோச்சனாரும்,

**'துறைவன் நம் ஊரனே'** (குறுந்.97)

என வெண்பூதியாரும்,

**‘நளிநீர்ச் சேர்ப்ப’** (ஐங்.179)

என்று அம்மூவனாரும் கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது.

நெய்தல் நிலத்தில் நெய்தற்பூ, தாழம்பூ போன்ற பூக்களும் புன்னை, ஞாழல் போன்ற மரங்களும் இருந்துள்ளன.

மாரிக் காலத்தில் பூக்கும் ஆம்பல் மலரைப் போன்ற தோற்றத்தையுடையக் கொக்கின் பார்வையைக் கண்டு அஞ்சிய ஈரமான உடலையுடைய நண்டு தாழையின் வேரில் உள்ள தன்னுடைய வளைக்குள் செல்லும் என்பதனை,

**‘மாரி ஆம்பல் அன்ன கொக்கின்**
**பார்வல் அஞ்சிய பருவரல் ஈர்ஞ்ஞெண்டு**
**கண்டல் வேர் அளைச் செலீ இயர்’** (குறுந்.117)

என்ற குன்றியனார் பாடல் அடிகள் மூலம் காண முடிகிறது.

நெய்தற்பூ காலையில் மலரும். இதனை இரண்டு வகையாகக் கூறுவர்.

1. நன்னீர் நெய்தற்பூ
2. உப்பங்கழி நெய்தற்பூ என்பனவாகும்.

கடற்கரையில் உள்ள உப்பங்கழிகளில் இந்த நெய்தற்பூ பூத்துக் குலுங்கும். ஆகவே இது நெய்தல் நிலம் எனப் பெயர் பெற்றது. நெய்தல் பூ அங்குள்ள செருந்தியோடு பூத்திருந்தது. அதனைத் தலைவன் தொடுத்துத் தன் மார்பில் சூட்டிக் கொண்டான்.என்பதனை,

'நெய்தல் நறுமலர் செருந்தியொடு விரைஇ

கைபுனை நறும் தார் கமழும் மார்பன்' (ஐங்.182)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது. இது மட்டுமின்றி கொடுமையான கழிகளில் நெய்தல் மலர் காலையில் பூத்திருந்தது என்பதனை,

'கொடும் கழி நெய்தலும் கூம்ப

காலை வரினும் களைஞரோ இலரே' (ஐங்.183)

என்று அம்மூவனார் கூறுகிறார்.

நெய்தற் நிலத்தில் உள்ள புன்னை மரங்களின் நுண்தாதுக்கள் அங்குள்ள நெய்தற் பூக்களின் மேல் வீழ்ந்திருந்தன. இது மட்டுமின்றி புன்னை மரத்தின் பூக்கள் பொன்னிறமாக இருந்தன என்பதை,

'புன்னை நுண்தாது உறைதரு நெய்தல்

பொன்படுமணியின் பொறப்ப தோன்றும்' (ஐங்: 189)

என்றும்,

'பொன்னிறம் விரியும் பூக்கெழு துறைவரை' (ஐங் : 110)

என்று அம்மூவனார் கூறுவதில் இருந்தும் காணமுடிகிறது.

மேலும் நெய்தல் நிலத்தில் ஞாழல் மரம் இருந்துள்ளது என்பதை,

'எக்கர் ஞாழல் சிறியிலை பெரும் சினை' (ஐங் :145)

'எக்கர் ஞாழல் பூவின் அன்ன' (ஐங் :149)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் ஞாழல் மரம் இருந்ததையும் அது சிறிய இலைகளை உடையது என்பதையும் அறியமுடிகிறது.

கடல்பகுதியான நெய்தல் நிலப்பகுதியில் நீர்வாழ் உயரினங்களே அதிகம். சுறா இங்குள்ள விலங்காகவும், நீர்க் காக்கையை நெய்தல் நிலத்தின் பறவையாகவும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. வீரம் மிக்க நெய்தல் நில பரதவன் சுறா மீனை வேட்டையாடி வந்தான் என்பதனை,

**'கோட் சுறா எறிந்தென'** (நற்-207)

என்னும் நற்றிணைப் பாடல் வரிமூலம் காணலாம். இது மட்டுமின்றி கடற்கரையில் உள்ள புன்னை மரத்தின் கிளைகளில் நீர்க்காக்கைகள் தங்கியிருந்தன என்பதை,

**'பெரும் கடற்கரையது சிறுவெண்காக்கை**
**கரும் கோட்டு புன்னை தங்கும்'** (ஐங்: 161)

என அம்மூவனாரின் இலக்கியவரிகள் தெளிவுப்படுத்துகின்றன.

## 2.7.2 நெய்தல் நில மக்களின் தொழில்

நெய்தல் நிலம் கடல் சார்ந்த பகுதி. ஆகவே அங்குள்ள மக்கள் கடலில் இருந்து கிடைக்கும் பொருள்களையே தங்கள் ஆதாரமாகக் கொண்டிருந்தனர். இம்மக்கள் மீன்பிடித்தல், உப்பு விளைவித்தல், மீன் காயவைத்தல், உப்பு விற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். சங்ககால நெய்தல் நில மக்களான பரதவர்கள் கடலையே நம்பி வாழ்ந்து வந்துள்ளனர். நெய்தல்நிலம் மீன்வளமும் உப்பு வளமும் நிறைந்து

காணப்பட்டது. மீன் வேட்டைக்குச் சென்ற பரதவர்கள் மீன்கள் நிறைந்த படகுகளுடன் கரைக்கு வந்து ஆரவாரம் செய்தனர் என்பதனை,

**'நீரை திமில் வேட்டுவர் கணசேர் கம்பலை'** (மதுரை: 116)

என்ற மதுரைக்காஞ்சிப் பாடல் வரியால் தெளிவாகிறது.

### 2.7.2.1 முத்துக்குளித்தல்

முத்துக்குளித்தல் என்பது முத்தெடுத்தல் எனவும் வழங்கப்பெறுகின்றது. கடலில் மூழ்கி கடலின் அடிப்பகுதியில் காணப்படும் சிப்பியில் உள்ள முத்தினைப் பரதவர்கள் எடுப்பர். இதுவே முத்துக்குளித்தல் எனப்படும். முத்து ஒன்பது வகை நவரத்தினங்களுள் ஒன்றாகும். இயற்கையாகவே கிடைக்கும் முத்து விலையுயர்ந்தது.

கடற்கரையில் வாழ்ந்த மக்கள் முத்துக்குளித்தல் தொழிலைச் செய்தனர். சூல் முற்றி ஒளிபொருந்திய சிறந்த முத்துக்களை மட்டுமல்லாமல் சங்குகளையும் மூழ்கியெடுத்துள்ளனர் என்பதைக் கீழ்க்காணும் பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

**'விளைந்து முதிர்ந்த விழுமுத்தின்**
**இலங்குளை இருஞ்சேரி'** (மதுரை: 135-136)

என்னும் மதுரைக்காஞ்சிப் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

### 2.7.2.2 மீன்பிடித்தல்

பரதவர்கள் அதிகாலையிலேயே தோணியில் சென்று மீன்பிடித்தனர் என்பதை,

‘வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள் வேட்டு எழுந்த நயனில் பரதவர்
வைகு கடல் அம்பி’ (அகம் :187)

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகள் பரதவர்கள் அதிகாலையில் மீன் வேட்டைக்குச் சென்றனர் என்று கூறுகிறது. பரதவர்கள் மட்டுமின்றி பரதவச் சிறுவர்களும் நுண்ணிய கயிற்றாலாகிய வலையில் அதிகாலையில் மீன் வேட்டையாடுவர் என்கிறார் நக்கீரர். இதனை,

‘………………நாட்புலம் போகிய
கொழுமீன் வல்சிப் புன்தலைச்சிறா அர்
நுண்ஞாண் அவ்வலை’ (அகம்: 290)

என்ற பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

2.7.2.3 மீன்விற்றல்

அதிகாலையில் பிடித்து வந்த மீன்களைப் பரதவ மகளிர் விலை கூறி விற்பர். பசிய மீனை விற்று அதற்கு ஈடாக வெண்ணெல்லைப் பெற்று வருவர் என்பதனை,

‘பசுமீன் நொடுத்த வெண்ணெல்’ (அகம்: 340)

என்று நக்கீரனாரும்

‘மீனொடுத்து நெற்குவைஇ’ (புறம்: 343)

என்று பரணரும் கூறுவதில் இருந்து அறியமுடிகிறது.

### 2.7.2.4 உப்பு விளைவித்தல்

பரதவர்கள் உப்பளத்தில் சிறுசிறு பாத்திகளில் உப்பினை விளைவிப்பர். நேர்நேராக வகுக்கப்பட்ட சிறுசிறு பாத்திகளில் கடல்நீரைப் பாய்ச்சி உப்பு விளைவிப்பர். இதனை,

**'நேர் கட் சிறுதடி நீரின் மாற்றி**
**வானம் வேண்டா வாழ்வின் எம்**
**காலைஞ் சிறுகுடி'** (நற்:254)

என்ற நற்றிணை இலக்கிய அடிகள் பரதவர்கள் உப்பு விளைவித்ததைக் கூறுகின்றன. பரதவர்கள் உப்பினை ஏரால் உழுவதின்றிக் கையால் பாத்தி கட்டி விளைவிப்பர். இதனை,

**'உவர்விளை உப்பின் உழாஅ உழவர்'** (நற்: 331)

என்கிறார் உலோச்சனார்.

### 2.7.2.5 உப்பு விற்றல்

பரதவர் விளைவித்த உப்பினை உப்பு வணிகர்களாகிய உமணர்கள் தங்கள் வண்டிகளில் ஏற்றிச்சென்று விற்றதைச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

**'நோன்பகட்டு உமணர் ஒழுகையொடுவந்த'**

(சிறுபாணாற்றுப்படை, வரி: 55)

என்ற பாடல் வரி கூறுவதில் இருந்து அறியலாம்.

உப்பை நெல்லுக்கு மாற்றிய உப்புவணிகர் தமக்குக் கிடைத்த நெல்லைச் சிறு படகுகளில் ஏற்றிக்கொண்டு கழிகளில் ஓட்டிச் சென்றதை,

**'குறும்பல்லூர் நெடுஞ் சோணாட்டு**
**வெள்ளையுப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லோடு வந்தவல்வாய்ப்பற்றி'** (பட்டி: பா.வரி: 28-30)

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறும் பட்டினப்பாலை இலக்கிய அடிகள் மூலம் தெளிய முடிகிறது.

### 2.7.2.6 மகளிர் மீன் காயவைத்தல்

பரதவ மகளிர் பகற்பொழுதில் மீன்வற்றலை வெயிலில் காயவைப்பர். அதனைக் கவரவரும் பறவையினங்களை ஓட்டும் செயலில் ஈடுபடுவர். இதனை,

**'படுபுள் ஓம்பலின் பகல் மாய்ந்தன்றே'** (நற்: 49)

என்று நெய்தற்றனார் கூறுகிறார்.

வலிமையுடைய கடலில் சென்று உடல்வருத்திப் பெரிய வலைகள் வீசி மீனைப் பிடிக்கின்றனர் பரதவர். மிகுதியான மீன்களைப் புதிய மணற்பரப்பில் காயப் போடுகின்றனர். கல்லென்று ஒலிக்கக்கூடிய சேரி முழுவதும் புலவு நாற்றம் வீசும் என்பதனை,

**'உரவுக்கடல் உழந்த பெருவலைப்பரதவர்**
**மிகுமீன் உணக்கிய புதுமணல் ஆங்கண்**
**கல்லென் சேரிப் புலவர் புன்னை'** (நற்: 63)

என்று உலோச்சனார் கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது.

இத்தகைய பரதவர்கள் “வலைகள் நெடிய கயிறுகள் கட்டப் பெற்றுக் குறுகிய கண்களை உடையவனாக, முனைகளில் சோவிகள் கொண்டு கட்டப்பெற்றவனாகக் காணப்பட்டன. அவர்கள் இவ்வலைகளை முற்றத்தில் உலரவைத்தனர்”[19] என்று கவிஞர் மீனவன் கூறுகிறார். அது மட்டுமின்றி பரதவர்கள் மீன்களை வாரி எடுத்தற்குப் பறி எனப்படும் கருவியினை பயன்படுத்தியதை,

‘நாள் வலை முகந்த கோள்வல் பரதவர்
நுணங்கு மணல் ஆங்கண் உணங்கப் பெய்மார்
பறிகொள் கொள்ளையார் மறுக’ (அகம்: 300)

என்ற அகநானூற்று பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

சுறாமீன்களைப் பிடிப்பதில் பரதவர்கள் அதிக ஆர்வம் காட்டினர் கூர்மையான உளியால் எறிந்து, சுறாமீன்களைப் புண்படுத்தி அதனைப் பிடித்தனர். சுறாமீனைப் பிடிப்பதற்கு என்று தனியாகத் தூண்டில்களை வைத்திருந்தனர். இதனை ‘வாங்கு விசைத் தூண்டில்’ என்று கூறுகின்றனர். இதனை,

‘கடுஞ்சுறா எறிந்த கொடுந்திமில் பரதவர்
வாங்கு விசைத் தூண்டில் ஊங் கூங்காகி’ (நற்-199)

என்ற நற்றிணைப்பாடல் வரிகள் மூலம் தெளிவாக அறிய முடிகிறது.

பரதவர்கள் பயன்படுத்திய ஓடங்களைத் திமில், தோணி, அம்பி என வழங்கினர். அம்பி என்பது பலர் செல்லும் படகு. திமில் என்பது தாமே செலுத்தும் படகினைக் குறிக்கும். அம்பி என்பது மீன் பிடிப்பதற்கு மட்டும்

பயன்பட்டது. அன்று அதில் மக்களையும் ஏற்றிச்சென்றனர். திமில் என்பது மீன்பிடிப்பதற்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டது. தனி ஒருவருக்கு உரிமையாக இருந்த திமில் கொடுந்திமில், வான்திமில் எனவும் வழங்கப்பெற்றது. இதனை,

'சிறுகுடிப் பரதவர் பெருங்கடன் மடுத்த
கடுஞ்செலற் கொடுந்திமில் போல' (அகம்: 330)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் காணமுடிகிறது.

பரதவர்கள் வேட்டையாடுதல், மற்போர் போன்ற விளையாட்டுக்களையும் சிறுவர்கள் வட்டாடல், கிலியாடல், சிறுதேர் போன்ற விளையாட்டுகளையும், ஊசலாட்டம், பந்தாடுதல் போன்றவற்றைப் பரதவர் குல சிறுமியரும், புனலாட்டு, கடலாட்டு, பாவை விளையாட்டு போன்ற விளையாட்டுகளைப் பரதவ குல மகளிரும் விளையாடியதைச் சங்க இலக்கிய அடிகள் மூலம் காணலாகிறது. அதேபோன்று பரதவ குல மக்களின் விருந்தோம்பல் சிறப்பைச் சிறுபாணாற்றுப்படை மூலம் உணரமுடிகிறது.

## 2.8 பாலைநில மக்களின் வாழ்க்கை முறை

பாலைத்திணைக்கென வரையறுத்த நிலமில்லை எனினும் முல்லையும் குறிஞ்சியும் வேனிற்காலத்தில் பாலைபோல் தோன்றும் என இலக்கியங்கள் கூறுகின்றன. பாலைத்திணைக்குரிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியாக உள்ளன.

'நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்தியப்பண்பே' (தொல்.அகத்:2)

எனத் தொல்காப்பியம் கூறுகிறது. முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணையில் நடுவண் திணையாகப் பாலைநிலம் தவிர மற்ற நான்கிற்கும் நிலம் உண்டு என்பதனையும் அறிய முடிகிறது.

பாலைநிலம் 'மணலும் மணல் சார்ந்த இடமும்' ஆகும். இங்குள்ள மக்கள் மறவர், எயிற்றியர், எயினர் என்று அழைக்கப்பட்டனர். இம்மக்கள் கொற்றவையை வணங்கியுள்ளனர்.

நீரில் மீனவர்கள் போராட்ட வாழ்க்கையை நடத்தியதைப் போன்று நிலத்தில் பாலைநிலமக்கள் போராட்ட வாழ்வை வாழ்ந்து வந்துள்ளனர். ஏனெனில் பாலைநிலம் வளம்குன்றிய நிலம் என்பதால் இந்நிலத்தின் எந்தவொரு தொழிலையும் குறிப்பிட்டுச் செய்ய இயலவில்லை என்பதை அறியமுடிகிறது.

பல்வேறு தொழில்களைச் செய்யமுடியாத நிலையில் பாலை நில மக்கள் அந்நிலத்தின் வழியே செல்வோரிடம் இருந்து வழிப்பறி செய்து தங்கள் வாழ்க்கையை நடத்தியமையை அறியமுடிகிறது. இந்நிலமக்களின் உரிப்பொருள் 'பிரிதலும் பிரிதல் நிமித்தமும்' ஆகும். பொருளீட்டத் தலைவன் பிரிதலும் அப்பிரிதல் தொடர்பான நிகழ்வுகளும் பாலைத் திணைப்பாடல்களில் வெளிப்படுவதனைக் காணமுடிகிறது.

பாலைநிலத்திற்குரிய கருப்பொருளாகிய புறா, பருந்து, கழுகு போன்ற பறவைகளும் குராஅம் பூ, மராஅம் பூ போன்ற பூக்களும் விலங்காகச் செந்நாயும் இலக்கியங்களால் காட்டப்பெற்றுள்ளன.

### 2.8.1 பாலை நிலத்தொழில்

தமிழரின் ஐந்திணைப்பாகுபாடு என்பது புவியியல் ரீதியில் தமிழகத்தின் நிலவெளியை பகுக்கின்றது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை போன்ற இவ்ஜந்திணையை மக்களும் தங்கள் வாழும் நிலப்பகுதியில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு அவற்றினை மற்ற சில மக்களிடம் பண்டமாற்றுமுறை செய்தும் வாழ்ந்துவந்துள்ளனர்.

குறிஞ்சிநிலமக்கள் வேட்டையாடியும் முல்லைநிலமக்கள் ஆநிரைகளை மேய்த்தும், மருதநில மக்கள் உழவுத்தொழிலைச் செய்தும், நெய்தல் நிலமக்கள் மீன்பிடித்தும், உப்புவிளைவித்தும் தங்கள் வாழ்க்கையை வாழ்ந்து உள்ளனர். அதுபோல எந்த ஒரு தொழிலையும் செய்ய முடியாத வறண்ட நிலமான பாலை நிலத்தில் மக்கள் வழிப்பறி செய்தும் கொள்ளையடித்தும் தங்கள் வாழ்வை நடத்தியுள்ளனர் என்பதைச் சங்க இலக்கிய அடிகள் மூலம் காணமுடிகிறது.

பாலைநிலம் மிகவும் வறட்சியான நிலம். வறண்ட காடு. மழையில்லாமல் வெயில் கொடுமையுடையது. இங்கு குடிக்கும் நீர் கூடக் கிடைப்பது கடினம். ஒவ்வொரு திணைக்குரிய மக்களும் அந்நிலத்திற்கேற்பத் தொழில் செய்து வந்துள்ளனர் என்பதைப் பாலைத்திணையைச் சார்ந்த மக்கள் வழிப்பறி செய்வதிலும் கொள்ளையடிப்பதிலும் ஈடுபட்டனர் என்பதை அத்திணைப்பாடல் வழியே அறிய முடிகிறது. இதனைப் பற்றிய விரிவான விளக்கம் பின்வரும் இயல்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

பண்டைத்தமிழ் இலக்கியங்கள் வழிப்பறிசெய்வோரை ஆறலைக்கள்வர்கள் என்று கூறுகின்றனர். ஆறலைத்தல் என்பதற்கு "வழிப்பறிசெய்தல"[20] என்று பொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

### 2.8.1.1 ஆறலைத்தல் (வழிப்பறி)

வழிப்பறி செய்தலைப் பாலைத்திணைப் பாடல்களில் மட்டுமே காண முடிகிறது. மறவர் பகற்பொழுது முழுவதும் ஆறலைத்தலில் ஈடுபடுவர். மிகவும் கொடுமையான வெயிலில் பாலைநிலம் வழியாகச் செல்பவர்கள் யாராயினும் அவர்களை வழிமறித்துக் கொன்று அவர்களது உடைமைகளைத் தனதாக்கிக் கொள்வர் என்பதனை,

> **'........................ சாத்தெறிந்து**
> **அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிச்**
> **கொடுவில் ஆடவர்'** (அகம்:167)

என்ற அகநானூற்றுப்பாடல் வரிகள் மூலம் மறவர்கள் பாலைநில வழியே செல்லும் வணிகச் சாத்தர்களைக் கொன்று அவர் பொருள்களைக் கொள்ளையடித்துத் தமக்குள் பகுத்துக்கொண்டதை அறிய முடிகிறது. இவ்வாறாகப் பாலைத்திணை மக்கள் வழிப்பறி செய்து தங்கள் வாழ்வை நடத்தியுள்ளமையைச் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், ஆகிய திணைப்பாடல்களில் வழிப்பறி செய்திகள் காணப்படவில்லை. ஆனால் பாலைத்திணையில் மட்டும் ஆறலைத்தல் என்னும் வழிப்பறி பற்றிய செய்திகள் காணக்கிடைக்கின்றன. ஆகவே பாலைநில மக்களாகிய மறவரும், எயினரும் ஆறலைத்தல்

செய்துள்ளனர் என்பதினை உணரமுடிகிறது. பண்டைத் தமிழ் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை வாழ்ந்து வந்துள்ளனர் என்பதையும் தாங்கள் வாழ்ந்த திணையின் அமைப்பிற்கேற்பத் தொழில் செய்துள்ளனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் மூலம் காணலாம். இவ்வாறு திணைக் கோட்பாட்டிற்கேற்ப பண்டைத் தமிழர் வாழ்க்கை முறையை அமைந்திருந்தனர் என்பதனை இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

பாலைநிலமக்கள் வழிப்பறி செய்தல் மட்டுமின்றி போர்க்காலங்களில் படைவீரர்களாகவும், செயல்பட்டனர் என்பதனை புறஇலக்கியங்கள் காட்டுகின்றன. இதனை நம்பியகப்பொருளும் பாலைநிலமக்களின் தொழிலாக, “போர்செய்தல், சூறையாடுதல்”[21] ஆகியவை இருந்தது என்பதனைக் கூறுகிறது.

பாலைநில மறவரும் எயினரும் தாங்கள் செய்யும் வேலைக்கேற்ப வலிமையுடையவராக இருந்துள்ளனர். எந்த உயிர்களிடத்தும் அன்பும் அருளும் இல்லாதவர்கள், ஆறலைக் கள்வர்கள் ஆவார்கள். இத்தகைய ஆறலைக் கள்வர்கள் எப்பொழுதும் கவர்ந்த வழிகளைப் பயன்படுத்தினர் என்பதினைச் சங்க இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது.

## 2.9 தொகுப்புரை

தமிழில் திணை என்ற சொல் மக்களின் வாழ்வியலோடும் பண்பாட்டோடும் தொடர்புடையது. இது புவியியல் ரீதியாகத் தமிழகத்தின் நிலவெளியைப் பகுக்கின்றது என்பதை அறியமுடிகிறது.

குறிஞ்சி நிலம் மலையும் மலைச்சார்ந்த இடமும் ஆகும். குறிஞ்சி நில மக்கள் குறவர், குறத்தியர், கானவர் என அழைக்கப்பட்டுள்ளனர்.

குறிஞ்சி நிலத்தில் அழகான காந்தள், குறிஞ்சி, குவளை போன்ற பூக்களும், புலி, குரங்கு போன்ற விலங்குகளும் இருந்துள்ளன.

குறிஞ்சி நில முருகக் கடவுளுக்கு ஆடுகளைப் பலியிட்டு வணங்கப்படுவதினை அறிய முடிகிறது. குறிஞ்சி நிலக் கானவர்கள் கொல்லையமைத்தல், வேட்டையாடுதல், திணைவிதைத்தல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளமையைக் காணமுடிகிறது. குறிஞ்சி நில மக்களின் குடில்கள் தாழ்வானதாகவும், குடில்களின் மேல் திணைத் தாளையும் ஐவன நெல்லின் தாளையும் புற்களும் கூரையாக வேய்ந்துள்ளனர் என்பதினை இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

குறிஞ்சி நிலத்தினை அடுத்து அமைவது முல்லைநிலமாகும். காடும் காடு சார்ந்த பகுதியே முல்லை நிலமாகும். இந்நிலத்தில் முல்லை, கொன்றை போன்ற பூக்களும் மான்,முயல் போன்ற விலங்குகளும், காட்டுக்கோழி, கருங்காக்கை போன்ற பறவைகளும் இருந்துள்ளமையை அறியமுடிகிறது.

முல்லை நிலமக்கள் இடையர், ஆயர், கோவலர் என அழைக்கபட்டனர். தயிர் கடைதல், ஆநிரை மேய்த்தல் போன்ற தொழிலை மேற்கொண்டுள்ளனர். இந்நிலமக்கள் திருமாலைத் தெய்வமாக வழிப்பட்டுள்ளனர். முல்லைநிலமக்கள் தங்கள் குடில்களைக் குறுகிய கால்களைக் கொண்ட குடில்களாக அமைத்து அவற்றின் மேல் வரகுத்தாள், கேழ்வரகுத் தாள் ஆகியவற்றைக்கொண்டு கூரை வேய்ந்தமை தெளிவாகிறது.

முல்லைநில மக்களின் வாழிடம் பாடி, சேரி என்று அழைக்கப்பட்டது. முல்லை, கொன்றை, பீர்க்கம்பூ போன்ற பூக்கள் இந்நிலத்திற்கு உரியவனாக இருந்துள்ளதை அறியமுடிகிறது. கார்காலத்தில் பூக்கும் முல்லைப் பூவானது காட்டுப்பூனையின் பற்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

மருதநிலம் என்பது வயலும் வயல் சார்ந்த இடமும் ஆகும். வேறு எந்த நிலத்திலும் இல்லாத பரத்தமையை இந்நிலத்தில் மட்டுமே காணமுடிகின்றது. இந்நிலமக்கள் இந்திரனைத் தெய்வமாக வணங்கியுள்ளனர். மருத நிலப்பகுதிகள் ஏரி மற்றும் பரந்த வயல்களும் நெல் மலிந்த வீடுகளைக் கொண்டவையாகவும், ஏரிகள், ஆறுகள், குளங்கள் சார்ந்த நீர்வளமும் நிலவளமும் அமைந்துள்ளவையாகவும் இருப்பதை அறியமுடிகின்றது. உழவர்கள் தங்கள் மேற்கூரைகளைப் புதிய வைக்கோல், தென்னங்கீற்று போன்ற பொருள்களால் வேய்ந்துள்ளனர். மருத நிலத்தில் குவளை, தாமரை, ஆம்பல் போன்ற மலர்களும், காஞ்சி, மருதம், வஞ்சி போன்ற மரங்களும் இருந்துள்ளன. தாமரை மலர்களும் அதன் இலைகளும் பொய்கைக்கு அழகுசெய்வனவாக அமைந்திருந்ததைக் காணமுடிகிறது.

செந்நெல்லும் வெண்நெல்லும் நிரம்பிய வயல்களை உடைய மருத நிலத்தில் எருமை, நீர்நாய் போன்ற விலங்கினங்களும், நாரை, அன்னம், குருகு, மகன்றில், நீர்க்கோழி போன்ற பறவையினங்களும் இருந்துள்ளன.

மருதநிலமக்கள் உழுதல், நாற்றுநடுதல், களையெடுத்தல் நெல் அரிதல் போன்ற வேலைகளில் ஈடுபட்டுள்ளமையைக் காணமுடிகிறது.

நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமும் ஆகும். இங்குள்ள மக்கள் வருணன் என்ற தெய்வத்தை வணங்கியுள்ளனர். கடற்கரையில் அமைந்திருக்கும் ஊர்களையுடையது நெய்தல் நிலமாகும். இந்த ஊர்கள் பட்டினம், பாக்கம் என்று அழைக்கப்பட்டதைக் காணமுடிகின்றது. நெய்தல் நில மக்கள் பரதவர், துறைவன், சேர்ப்பன் என்று அழைக்கப்பட்டனர். நெய்தல் நில மக்களின் வீடுகள் வெள்ளிய மரக்கொம்புகளை இடை இடையே கலந்து தாழை நாரால் கட்டி புல்லைப் பரப்பி வேயப்பட்டவையாக இருந்ததை அறியமுடிகிறது. நெய்தல் நிலத்தில் நெய்தற் பூ, தாழம் பூ போன்ற பூக்களும் புன்னை,ஞாழல் போன்ற மரங்களும் இருந்துள்ளன.

கடல்பகுதியான நெய்தல் நிலப்பகுதியில் நீர்வாழ் உயரினங்கள் காணப்படுகின்றன. சுறா இங்குள்ள விலங்காகவும், நீர்க்காக்கை நெய்தல் நிலத்தின் பறவையாகவும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. நெய்தல் நில மக்கள் மீன்பிடித்தல், மீன்விற்றல், உப்பு விளைவித்தல், உப்பு விற்றல், மீன் காயவைத்தல் போன்ற தொழில்களைச் செய்தமையைக் காணமுடிகின்றது.

குறிஞ்சியும், முல்லையும் திரிந்து உருவான நிலம் பாலை நிலமாகும். இம்மக்கள் எயினர், எயிற்றியர், மறவர் என்று அழைக்கப்பட்டனர். அந்நில மக்கள் கொற்றவையைத் தெய்வமாகத் தொழுததை அறியமுடிகின்றது. நீரில்

மீனவர்கள் போராட்ட வாழ்வை வாழ்க்கையாக நடத்தியதைப் போன்று பாலைநிலமக்கள் நிலத்தில் போராட்ட வாழ்வை வாழ்ந்து வந்துள்ளனர். பொருளீட்டத் தலைவன் பிரிவதும் அப்பிரிவு தொடர்பான நிகழ்வுகளையும் பாலைத்திணைப் பாடல்களில் வெளிப்படுவதைக் காணமுடிகிறது.

பாலைத்திணை மக்கள் வழிப்பறிச்செய்தலிலும் கொள்ளையடித்தலிலும் ஈடுபட்டுள்ளனர் என்பதனை அத்திணைப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது. பாலைநில மறவரும் எயினரும் தாங்கள் செய்யும் வேலைக்கேற்ப வலிமையுடையவர்களாகவும் அன்பும் அருளும் பிற உயிர்களிடம் இல்லாதவர்களாகவும் இருந்துள்ளனர். இவர்கள் கவர்த்த வழிகளை பயன்படுத்தியுள்ளனர்.

# குறிப்புகள்

1. சுப்பரமணியன்.ச.வே., தொல்காப்பிய உரைவளக் கோவை –ப.54.
2. மேலது., ப.54.
3. சைவசித்தாந்த அகராதி, ப.540.
4. க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி, ப.717.
5. அபிதான சிந்தாமணி,ப.818.
6. பவானந்தர் தமிழ் சொல்லகராதி, ப.702.
7. மனோன்மணி சண்முகதாஸ், குறுந்தொகை ஒரு நுண்ஆய்வு, ப. 38.
8. சுப்பரமணியன்.ச.வே., தொல்காப்பிய உரைவளக் கோவை –ப-54.
9. மாதையன்.பெ., அகத்திணைக்கோட்பாடும் சங்க அக கவிதை மரபும், ப. 86.
10. மேலது., ப. 85.
11. குளோரியா சுந்திரமதி, சங்க இலக்கியத் திணைத்துறை அமைப்பில் எழும் சிக்கல், ப. 28.
12. மாதையன்.பெ., சங்க கால இனக்குழுச்சமுதாயமும் அரசு உருவாக்கமும், ப. 12.
13. மணவாளன் இலக்கிய ஒப்பாய்வு, ப. 89.
14. குளோரியா சுந்திரமதி, திணைத்துறை அமைப்பில் எழும் சிக்கல், ப. 28.
15. மேலது., ப.28.
16. மு.அருணாச்சலப்பிள்ளை, தொல்காப்பிய உரைவளக்கோவை, பக்.73.
17. தனஞ்செயன்.ஆ., சங்க இலக்கியமும் பண்பாட்டுச்சூழலியலும், ப. 135.

18. இராசராம், சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, ப.38.

19. கவிஞர். மீனவன், பண்டைய தமிழரும் பரதவர் வாழ்வும், ப.137.

20. கழகத் தமிழ் அகராதி, ப.113.

21. திருஞானசம்பந்தம்.சு (உ.ஆ), நம்பிஅகப்பொருள் விளக்கம், ப.23.

இயல் - 3

# களவு விளக்கமும் வகைகளும்

இயல் - 3

# களவு விளக்கமும் அதன் வகைகளும்

## 3.1 முன்னுரை

ஆய கலைகள் அறுபத்தி நான்காகும். இந்த அறுபத்தி நான்கு கலைகளுள் களவுக்கலையும் ஒன்றாகும். ஏனெனில் 'களவும் கற்று மற' என்ற சொல்வழக்கு மக்களிடையே இன்றளவும் நிலவுவதே இதற்குச் சான்றாகத் திகழ்கிறது. அதாவது திருட்டு, கொள்ளை போன்ற தொழிலையும் கற்றுக்கொள். ஆனால் அதனை உடனே மறந்து விடவேண்டும் என்பதே இதன் கருத்தாகச் சொல்லப்பட்டு வருகிறது எனலாம்.

சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே வாழ்ந்தனர். தாங்கள் வாழும் நிலத்தில் கிடைக்கும் பொருட்களையே பெரிதும் நம்பியிருந்தனர். அதற்கேற்ப கால்நடை, விவசாயம் போன்ற தொழில்களையும் செய்துள்ளனர் என்பதையும் இலக்கியங்கள் மூலம் தெளிவாக உணரமுடிகின்றது.

மக்கள் இன்று பல்வேறுபட்ட தொழில்களைச் செய்து வருகின்றனர். அதைப்போன்றே சங்ககாலமக்களும் தாங்கள் வாழ்ந்த நிலப்பரப்பின் காலச்சூழ்நிலைகளுக்கும், நிலத்தின் தன்மைக்கும் ஏற்ப பல தொழில்களைச் செய்து வந்துள்ளனர். பாலைத்திணை மக்களான மறவரும், எயினரும் வழிப்பறி செய்தல், ஆநிரை கவர்தல் போன்ற தொழில்களில் ஈடுபட்டனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது. அவ்வகையில்

களவு பற்றியும் அதன் வகைகள் பற்றியும் விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

## 3.2 களவு

களவு என்பது ஒருவர் பொருளை அவர் அறியாதவாறு எடுத்தலாகும். இது ஒரு நுட்பமான கலையாகும். ஏனெனில் களவுக்கான காலம் மற்றும் இடத்தைத் தேர்வு செய்தலும், பிறர் அறியாதவாறு களவாடுதலும், தடயங்களை விட்டு வைக்காமையும், காவலர் கையில் அகப்படாமையும் களவு செய்பவரின் தொழில் நுட்பங்களாகப் பின்பற்றப்பட்டுள்ளன. இக்கள்வர்கள் மக்களோடு மக்களாகத் திரிபவர்களாகவும் ‘இவர் கள்வர்’ எனத் தனித்துக் கூறும்படியான தோற்றம் இல்லாதவர்களாகவும் இருந்துள்ளனர். இதனைப் பிற்காலத்தில் எழுந்த நீதி நூலான திருக்குறள்,

> “மக்களே போல்வர் கயவர் அவரன்ன
> ஒப்பாரி யாங்கண்டத தில்”[1] (குறள் 1071)

என்கிறது. அதாவது மக்களே போல் இருப்பவர் கயவர். அவர் மக்களை ஒத்திருப்பது போன்ற ஒப்புமை வேறு எந்த உயிர்களிடத்தும் அதாவது பறவை, விலங்கு போன்றவற்றிடம் கண்டதில்லை என்று வள்ளுவர் கூறுவதன் மூலம் அறியமுடிகின்றது.

இத்தகைய களவில் இருந்து சிறிது வேறுபட்டதே கொள்ளையிடுதலாகும். கொள்ளையிடுதல் என்பது பிறரைத் துன்புறுத்தி அவர்களிடம் இருந்து பொருள்களைப் பறிப்பதாகும். சங்க இலக்கியங்களில் பாலைத்திணை மறவரும் எயினரும் ஆநிரை கவர்ந்தோராகவும்

ஆறலைத்தலில் ஈடுபட்டவர்களாகவும் சங்க பாலைத்திணைப் பாடல்கள் காட்டுகின்றன.

### 3.2.1 களவு விளக்கம்

களவு என்பதற்குப் பல்வேறு விளக்கங்களை அகராதிகளும், நிகண்டுகளும் தருகின்றன.‘

தொல்காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணர், “‘களவு’ என்ற கிளவிக்குப் பிறர்க்குரிய பொருளை அவர் அறியாதவாறு எடுத்தல்”[2] என்கிறார். இதனைத் தொடர்ந்து ‘பிங்கலந்தை நிகண்டு, அபிதான சிந்தாமணி, சைவ சித்தாந்த அகராதி’ போன்றவையும் களவு என்பதற்குப் பல்வேறு விளக்கங்களைத் தருகின்றன.

பிங்கலந்தை நிகண்டு - களவு என்னும் பதத்திற்கு, “திருட்டு, வஞ்சனை, கலவடம், உன்மத்தம், களர்செடி”[3]என்று பொருள் தருகின்றது.

அபிதான சிந்தாமணி - களவு என்ற சொல்லுக்கு, “பிறர்க்குரிய பொருளை மறையிற் கொள்ளுதல்”[4] என்று பொருள் தருகின்றது.

சைவ சித்தாந்த அகராதி - களவு என்ற பதத்திற்கு, “திருட்டு மற்றும் ஐந்து பெரிய பாவங்களில் ஒன்று”[5] என்று பொருள் தருகின்றது.

மேற்கூறியவற்றின் மூலம் களவு என்பது பிறருக்கு உரிய பொருளைத் தெரியாமல் கவர்தல் என்பதைத் தெளிவாக உணரமுடிகின்றது. இதிலிருந்து மாறுபட்டது ஆறலைத்தலாகும். ஆறலைத்தல் என்பது ஒருவரை

துன்புறுத்தியோ அல்லது அவரைக் கொன்றோ அவருடைய பொருள்களைத் தனதாக்கிக் கொள்ளுதலாகும். இதுவே பிற்காலத்தில் போர்முறையாகக் கருதப்பட்டது எனலாம். ஏனெனில் போர் நடைபெறுவதற்கு மூலகாரணமாக அமைவது பிறநாட்டின் செல்வத்தையும் வளத்தையும் கொள்ளையடிப்பதே ஆகும். இதனைப் புறநானூறு போன்ற சங்க இலக்கியங்கள் வழி காணமுடிகின்றது.

### 3.2.2 கள்வன் விளக்கம்

களவு செய்பவர் கள்வர், கள்வன் என்றழைக்கப்பட்டனர். கள்வன் என்பதற்கு அகராதிகளும் நிகண்டுகளும் பல்வேறு விளக்கங்களைத் தருகின்றன.

பிங்கலந்தை நிகண்டு கள்வன் என்ற சொல்லிற்கு, ‘‘கரியவர், யானை, கர்கடகராசி’’[6] என்று பொருள் கூறுகிறது.

கழகத் தமிழ் அகராதி கள்வன் என்ற பதத்திற்கு, ‘‘கள்ளன், நண்டு, கள்வர், களவு செய்தல்’’[7] என்று விளக்கம் தருகிறது. இதன்மூலம் கள்வர் என்பது களவு செய்கிறவர் என்பதையும் தெரிந்து கொள்ள முடிகின்றது.

இது மட்டுமின்றி ‘‘கள்ளநேரம்’’ என்பதற்கு, ‘‘களவு முதலியன நடத்துவதற்கு ஏற்றவேளை’’[8] என்றும் கழகத் தமிழ் அகராதி பொருள் விளக்கம் தருகிறது.

### 3.3 களவுத் தொழில்

பண்டைத் தமிழ் மக்கள் தாங்கள் வாழும் திணை அமைப்பிற்கு ஏற்பவே தொழில் செய்துள்ளனர். இதில் பாலை நில மக்கள் களவையும் வழிப்பறி செய்தலையும் முக்கியத் தொழிலாக மேற்கொண்டுள்ளனர். களவு செய்தல் என்பது பாலை நில மக்களிடையே அதிகமாகக் காணப்பட்டது. எனினும், ஊர் மற்றும் நகர்ப்புறங்களிலும் களவுத்தொழில் காணப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

### 3.4 களவின் வகைகள்

பழங்காலம் முதல் மனிதர்களின் பெயர்கள் செய்யும் தொழில் மற்றும் நிலம் முதலானவற்றின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. இதனைத் தொல்காப்பியமும்,

**"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே"**[9] (நூற்.642)

என்கிறது.

இவ்வுலகில் உள்ள எல்லாச் சொற்களும், பெயர்களும் ஏதேனும் ஒரு பொருளைக் குறித்தனவாகவே அமையும் என்று கூறுகிறது. இது மட்டுமின்றி,

"நிலப்பெயர், குடிப்பெயர் குழுவின் பெயரே
வினைப்பெயரே, உடைப்பெயர் பண்புகொள்பெயரே
பல்லோர் குறித்த முறைநிலைப் பெயரே
பல்லோர் குறித்த சினைநிலைப் பெயரே
பல்லோர் குறித்த திணை நிலைப் பெயரே
--------------- ------------------- ----------------- ----------------

---------------- -------------------- ------------------ ----------

**அன்றி அனைத்தும் அவற்று இயல்பினவே"**[10]

என்னும் நூற்பாவில் பெயர்கள் நிலம், குடி, குலம், குழு, வினை அதாவது ஒருவர் செய்யும் தொழில் மற்றும் உடை, பண்பு, முறை,சினை, திணை ஆகியவற்றின் பெயரால் அமையும் என்று கூறுகிறது.

தொல்காப்பியக் கூற்றின் வழி ஒருவர் எந்தத் தொழிலைச் செய்கின்றாரோ அந்தத் தொழிலுக்கு ஏற்ப அவரது பெயர் அமைந்ததை அறிய முடிகின்றது. கள்வர்களும் அவர்கள் எந்த முறையில் களவு செய்கிறார்களோ அந்த முறையிலேயே அழைக்கப்பட்டிருக்கின்றனர் என்பதையும் அறிய முடிகிறது.

சங்க இலக்கியங்களில் கள்வர்களை அவர்கள் களவு செய்யும் முறையைக் கொண்டு நான்கு வகையாகப் பிரித்துக் கூறப்பட்டிருக்கிறது. அவை முறையே

- ஆறலைக் கள்வர்
- ஆநிரைக் கள்வர்
- ஊர்க் கள்வர்
- கடல் கொள்ளையர் என்பனவாகும்.

இந்நான்கில் ஆறலைக் கள்வரும், ஆநிரைக் கள்வரும் பாலை நிலத்தைச் சார்ந்தவர்களாகச் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. உதாரணமாக அகநானூற்றில் பாடல் எண்கள் (1,3,7,9,16,31,63….) போன்ற பாலைத்திணைப் பாடல்கள் ஆறலைக் கள்வரையும், பாடல் எண்கள்

(35,97,105,129,131,159) போன்ற பாலைத் திணைப்பாடல்கள் ஆநிரைக் கள்வரையும் குறிப்பிடுவதைக் காணலாம்.

ஊர்க்கள்வர் மற்றும் கடல் கொள்ளையர்கள் பற்றிய செய்திகள் பிறதிணைப் பாடல்களில் ஒன்றிரண்டு இடங்களில் மட்டுமே கூறப்பட்டுள்ளன. சான்றாக நற்றிணையில் ஊர்க்கள்வர் பற்றிய செய்திகள் மருதத்திணைப்பாடல் எண் 40 மற்றும் குறிஞ்சித்திணைப் பாடல் எண் 255லிலும் மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளன. அதேபோன்று அகநானூற்றில் மருதத்திணைப் பாடல் எண் 276 லிலும் மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது.

### 3.4.1 ஊர்க்கள்வர்

ஊர்கள்வர்கள் நகர் மற்றும் ஊர்ப்புறங்களில் இரவில் சுற்றித்திரிந்து களவு செய்வோர் ஆவர். இவர்கள் தான் ஊர் மற்றும் நகர்ப்புறங்களில் காவல் தொழிலைச் சிறப்பாகச் செய்துவந்துள்ளனர். இக்கள்வர்கள் காவலர்கள் அறியாதவாறு வீட்டுக்குள் புகுந்து களவும் செய்துள்ளனர்.

இத்தகைய ஊர்க்கள்வர் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் நேரடியாகச் சுட்டப்படாமல் மறைமுகமாகவே காட்டப்பட்டுள்ளன. நற்றிணையில் உள்ள குறிஞ்சித்திணைப் பாடலில் (255) ஊர்க்காவலர்கள் காவல் செய்த செய்தி கூறப்பட்டுள்ளது. உதாரணமாக பேயினங்கள் காற்றைப் போல் இயங்கும். இந்த இரவில் கானவர் குறிஞ்சிப் பண்ணைப் பாடிக்கொண்டு ஊரைக் காவல் செய்கின்றனர் என்பதை,

**‘உருகெழு மரபின் குறிஞ்சி பாடி**
**கடியுடை வியல் நகர்க் கானவர் துஞ்சார்’** (நற்.255)

என்று ஆலம்பேரி சாத்தனார் கூறுவதில் இருந்து அறியமுடிகின்றது.

இதன் மூலம் ஊர்க் கள்வர்கள் இருந்ததையும் அதனால் ஊருக்குக் காவல் போடப்பட்டது என்பதையும் தெளிவாக உணரமுடிகின்றது.

தலைவி தலைவனை, திருடவரும் கள்வனுடன் ஒப்புமைப்படுத்திப் பேசுவதாக மருதத்திணைப் பாடல்களில் ஒன்றிரண்டு இடங்களில் காண முடிகின்றது. உதாரணமாக நற்றிணைப் பாடலில்,

**'நள்ளென் கங்குல் கள்வன் போல'** (நற்.40)

**'அடிஅறிவுறுதல் அஞ்சி பைபயக்**
**கடிஇலம் புகூம் கள்வன் போல'** (அகம்.276)

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகள் பரத்தையிடம் சென்ற தலைவன் தன் வீட்டிற்குள் செல்லும் போது தலைவிக்கு அஞ்சி மெதுவாக நுழைகிறான். இதனைக் கண்ட தலைவி வீட்டிற்குள் புகும் தலைவனைக் கள்வனோடு ஒப்புமைப்படுத்திக் கூறியிருப்பதைக் காணலாம். ஊர்க்கள்வர்கள் தாங்கள் செய்யும் வேலைக்கு ஏற்ப திறமையுடையவர்களாக இருந்தனர் என்பதையும் அறிய முடிகின்றது.

### 3.4.1.1 ஊர்க்கள்வர் தோற்றமும் தொழில்முறையும்

சங்க இலக்கியப் பாலைத்திணைப்பாடல்களில் ஆறலைக்கள்வர் தாங்கள் செய்யும் தொழிலுக்கு ஏற்ப வலிமையாகவும் எதற்கும் அஞ்சாத தன்மை கொண்டவர்களாகவும் இருந்தனர் என்பதைக் கூறுவதைப் போன்று ஊர்க்கள்வர்களின் தோற்றத்தையும் அவர்கள் தொழில் செய்யும் முறையையும் மதுரைக்காஞ்சி எடுத்துக் கூறுகிறது.

ஊர்க்கள்வர்கள் இரவுக் காலங்களிலேயே ஊர்ப் பகுதிகளிலும் நகர வீதிகளிலும் சுற்றித் திரிந்துள்ளனர். இவர்கள் கரிய யானையின் நிறம் போன்ற கருமையான நிறத்தை உடைய உடலை உடையவர்களாகவும் காணப்பட்டுள்ளனர்.

கல்லையும் மரத்தையும் அறுக்கும் கூர்மையுடைய, நிலத்தையகழும் உளியையும் வாளையும், செருப்பணிந்த அடியையும், உடையவர்களாகவும் காணப்பட்டுள்ளனர்.

தொடையின் அருகே கண்ணுக்குத் தெரியாத கூரிய முனையினை உடைய வளைவுக் கத்தியினை வைத்திருந்துள்ளனர். மேலும் அக்கத்திகளின் மேல் பல நிறங்களில் கைப்பிடியையும் அமைத்திருந்துள்ளனர்.

மெல்லிய நூலால் ஆன ஏணியைத் தன் இடையைச்சுற்றி ஊர்க்கள்வர்கள் கட்டியிருந்துள்ளனர்.

இத்தகைய தோற்றமும், கருவிகளையும் உடைய ஊர்க்கள்வர்கள் பேரணிகலன்களை விரும்பி அவற்றைக் களவாடுவதற்கு உரிய நேரமும் இடமும் பார்த்து மக்களோடு மக்களாக ஊர் மற்றும் நகர்ப்புறங்களின் வீதிகளில் அலைந்துள்ளனர். மேலும் கண்களை மூடித்திறக்கும் அத்தகைய நொடிப்பொழுதில் ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்தில் மறைந்து கொள்ளும் இயல்பினை உடையவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதை,

**‘இரும்பிடி மேஎந்தோலன்ன விருள் சேர்பு**

**கல்லு மரனுந் துணிக்குங் கூர்மைத்**

தொடலை வாளர் தொடு தோலடியர்
குறங்கிடைப் பதித்த கூர் றுனைக் குறும்பிடிச்
சிறந்த கருமை நுண்வினை நுணங்கற
ணிறங் கவர்பு புனைந்த நீலக்கச்சினர்
மென்னூலேணிப் பன்மாண் சுற்றினர்
நிலன கழுளியர் கலனைச் இக்கொட்டுங்
கண் மாறாடவர்' (மதுரை 634-642)

என்னும் மதுரைக்காஞ்சிப் பாடல் அடிகள் மூலம் தெளிவாக உணர முடிகின்றது.

இத்தகைய திறமையுடைய ஊர்க்கள்வர்களைப் பிடிப்பதற்காக மன்னன் ஊர்க்காவலர்களையும் நியமித்திருந்தான் என்ற செய்தியையும் ஐங்குறுநூற்றுப் பாடலிலும், அகநானூற்றில் பா.எ.308, பா.எ.3, பா.எ.122 மற்றும் பா.எ.187 ஆகிய பாடல்களிலும், பதிற்றுப்பத்தில் பா.எ.28லும் மேலும் நற்றிணை போன்ற இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. உதாரணமாக,

**'மாலை வெண் காழ்காவலர் வீச'** **(ஐங்.421)**

**'காவலர்க்கரந்து கடிபுனம் துழைஇய'** **(அகம்.308)**

**'துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்'** **(அகம்.122)**

**'அருங்கடிக் காப்பின் அஞ்சுவரூமூதூர்த்'** **(அகம்.114)**

என்னும் இலக்கிய அடிகளின் வழி ஊர்கள் அரிய காவலை உடையதாக இருந்துள்ளன என்பதை அறிய முடிகின்றது.

ஊரைக் காவல் செய்யும் ஊர்க்காவலர்கள் புலியைப் போன்றவர்களாகவும் இரவில் தூங்காத கண்களை உடையவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதையும் அவ்வாறான திறமை உடையவர்களையே அரசன் தேர்வு செய்தான் என்பதையும் மதுரைக்காஞ்சிப் பாடல்வரிகள் மூலம் அறிய முடிகின்றது.

### 3.4.2 கடல்கொள்ளையர்

கி.மு.500 முதல் கி.பி.200 வரை உள்ள காலத்தைச் சங்ககாலம் என்று அறிஞர்கள் கருத்தால் அறிய முடிகின்றது. இத்தகைய காலக்கட்டத்தில்தான் நிலமானிய முறையும் தோற்றம் பெறத் தொடங்கியது எனலாம். தமிழ்நாட்டில் மட்டுமின்றி பிற உலக நாடுகளிலும் இக்காலகட்டத்தில் கடற்கொள்ளையர் இருந்ததை இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது. உதாரணமாக, ‘‘கி.மு மூன்றாம் நூற்றாண்டில் ஒலிப்பஸ்நகரின் மீது கடல்கொள்ளையர் நடத்திய தாக்குதல்’’[11] குறிப்பிடத்தக்கதாகும்.

நிலமானிய முறை உருப்பெற்று வளர்ந்து வரும் தொடக்ககாலங்களில் கொள்ளையர் இயக்கமும் தொடங்கியிருக்கலாம் எனலாம். ஏனெனில் கொள்ளையர்கள் உருவான காலத்தைக் கணக்கிட இயலாது. எனவே மக்கள் கடற்கரையோரங்களில் வாழத்தொடங்கிய சில ஆண்டுகளுக்குள்ளேயே கொள்ளையர் கூட்டமும் உருவாகத் தொடங்கியிருக்கும் என்பதையும் அறியமுடிகின்றது. இதன் பின்னால் சங்க இலக்கியங்களின் பிற்பகுதிகளில் சிற்றரசு, பேரரசு உருவாக்கம் தொடங்கியதையும் அறிய முடிகிறது.

கடல் கொள்ளையர் என்பவர்கள் கடலில் வரும் மரக்கலன்கள் மற்றும் கடற்கரையில் நடைபெறும் ஏற்றுமதி இறக்குமதிக்காக வைக்கப்பட்டிருக்கும் பொருட்களைக் கொள்ளையடிப்பவர்கள் ஆவார்கள். இத்தகைய கடல் கொள்ளையர் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் தெளிவாகக் காணப்படவில்லை. ஒரு சில இடங்களில் மட்டும் சில குறிப்புகள் மூலம் காணக்கிடைக்கின்றன.

பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்தில் கடற்பிறக்கு ஓட்டிய சேரன் செங்குட்டுவனைப் பற்றிப் பரணர் கூறுகிறார். இதில் செங்குட்டுவன் ஏறிவந்த குதிரை கடற்கரையில் ஊர்ந்து வந்ததால் கடல் துன்புற்றது என்றும், பரணர் கூறுகிறார். இதற்குக் காரணம் கடல் கொள்ளையருடன் கடற்கரையில் நடந்த போரால் கடல் அலையின் நிறம் மாறியது என்று கூறுவதன் மூலம் சேரன் செங்குட்டுவன் கடல் கொள்ளையரை எதிர்த்துப் போரிட்டதை அறிய முடிகின்றது.

மேலும் இப்பாடலில் பரணர், பாணர் கூட்டத்தோடு வருவதாகப் பாடியிருக்கிறார். யாழ், முழவு, பதலை முதலான இசைக் கருவிகளைப் பையில் போட்டுக் கொண்டு பாணர் கூட்டம் வருகிறது அவர்கள் வரும் வழியில் மழைபெய்யாமல் காட்டில் உள்ள மூங்கில் காய்ந்து போயிற்று. இது போன்ற காடுகள் பலவற்றைக் கடந்து கடல் பிறக்கு ஓட்டிய நின்முயற்சியைக் காண வந்தேன் என்று கூறுவதனை,

'மழை பெயல் மாறிய கழைதிரங்கு அத்தம்

ஒன்று இரண்டு அலபல கழிந்து திண்தேர்

வசை இல் நெடுந்தகை காண்கு வந்திசினே’

(பதிற்.5ம்பத்து. பா.எ.41)

என்னும் பதிற்றுப்பத்து பாடல் அடிகள் மூலம் கடல் கொள்ளையர்களை விரட்டிய சேரன் செங்குட்டுவனை, பாணர்களும் புலவரும் காணவந்த செய்தியைத் தெளிவாக அறியமுடிகின்றது.

சங்க இலக்கியப் பாடல்கள் சிலவற்றில் சுங்கக்காவல் பற்றிய செய்திகள் காணக் கிடைக்கின்றன. உதாரணமாக அகநானூற்றில் 27ஆம் பாடலில் பாண்டிய மன்னன் சுங்கக் காவலரை வைத்து துறைமுகத்தை பாதுகாத்த செய்தியினை அறிய முடிகின்றது. இதன் மூலம் கடல் கொள்ளையர்கள் இருந்ததையும் அதனால் கடற்கரை துறைமுகங்களில் காவல் போடப்பட்டது என்பதையும் அறிய முடிகின்றது.

ஏற்றுமதி இறக்குமதி நிகழும் பண்டக சாலைகளில் பொருள்களைப் பிறர் கவராமல் காக்கின்ற தொழிலைச் சுங்கக்காவலர்கள் மேற்கொண்டுள்ளனர். சங்க காலத்தில் சுங்கச்சாவடிகள் இருந்ததை, “தமிழ்நாட்டு மன்னர்கள் பயிர்த்தொழில் போன்று வாணிகத்தையும் வளம் பெற வளர்த்தனர். எனவே ஆங்காங்கு சுங்கச் சாவடிகளை அமைத்தனர்”[12] என்ற ரெ.சுபா கூற்றின் வழியும் அறிய முடிகிறது.

கடல் கொள்ளையர்களிடம் இருந்து பண்டமாற்றுப் பொருள்களைப் பாதுகாக்கும் வேலையைச் சுங்கக்காவலர்கள் செய்தனர் என்பதைப் பட்டினப்பாலை பாடல் வரிகள் (பா.வரி 120-125) தெளிவாகக் கூறுவதன் மூலம் கடல் கொள்ளையர்கள் இருந்ததை அறியமுடிகின்றது. மேலும்

பாண்டிய மன்னன் தன் துறைமுகமான கொற்கைப்பட்டினத்தைக் காவல் செய்த செய்தியை,

**‘மறப்போர் பாண்டியர் அறத்தின் காக்கும்**

**கொற்றை அம்பெரும் துறைமுகத்தின் அன்ன’** (அகம்.27)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகின்றது. இத்தகைய களவு மற்றும் கொள்ளையினாலேயே காவலும் சிறப்புப்பெற்றிருக்க வேண்டும் என்பதையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

புறநானூற்றில் மாங்குடிகிழார் 334வது பாடலில் துடியன், பாணன், பறையன், கடம்பன் என்னும் நான்கு குடி மக்களைப் பற்றிக் கூறுகிறார். இதில் கூறப்படும் கடம்பர் என்ற குடியைச் சார்ந்த மக்கள் ‘‘வெள்ளைத்தீவு/ லட்சதீவின் கடல்கொள்ளையர்’’[13] என்று துயர் மிகு தமிழர் என்னும் இணையப்பதிவு கூறுகிறது.

### 3.4.3 ஆநிரைக் கள்வர்

ஆநிரை என்பதற்கு ‘‘பசுக்கூட்டம்’’[14] என்று பொருள் தருகிறது கழகத்தமிழ் அகராதி. மேலும் ஆநிரை என்பதற்கு, ‘‘பசுக்கொட்டில்’’[15] எனவும் விளக்கம் அளிக்கிறது.

பசு, தமிழ்நாட்டில் புனிதமாகக் கருதப்படும் ஒரு விலங்காகும். மக்கள் பசுவைச் செல்வமாகவும், தெய்வமாகவும் கருதியதையும் இக்காலத்திலும் அவ்வாறே பசுவைக் கருதிடுவதையும் காணமுடிகிறது. இத்தகைய பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்றவர்களே ஆநிரைக்கள்வர் ஆவார்கள்.

பண்டைய காலங்களில் ஆநிரை கவர்தல் வெட்சி என்னும் போர்மரபாகவே கருதப்பட்டது. எனினும் ஒருவருடைய பொருளை அவர் அறியாதவாறு எடுத்தல் திருட்டே ஆகும். ஆகவே இது களவு எனப்பட்டது. பாலை நில மக்கள் இத்தகைய ஆநிரை கவர்தலில் ஈடுபட்டதை சங்க இலக்கியச் செய்யுட்கள் மூலம் காணமுடிகின்றது.

இத்தகைய ஆநிரை கவர்தலே பிற்காலத்தில் போர் ஏற்படக் காரணமாக இருந்தது என்பதனைப் புற இலக்கியங்கள் மூலமும் தெளிவாக உணரமுடிகிறது.

### 3.4.3.1 ஆநிரைக் கள்வர் தோற்றம்

ஒவ்வொருவரும் தாங்கள் செய்யும் வேலைக்கு ஏற்ப வலிமையுடையவர்களாகவும் அவ்வேலையில் தேர்ச்சி பெற்றவர்களாகவும் இருப்பர். அதைப் போன்று ஆநிரைகளைக் கவர்ந்து வரும் மழவர் மற்றும் மறவர்கள் தாங்கள் செய்யும் வேலைக்கு ஏற்ப மிகவும் வலிமை உடையவர்களாகவும் எதற்கும் அஞ்சாத தன்மை உடையவர்களாகவும், இருந்துள்ளனர்.

புலி போன்று முழுங்குகின்ற சிவந்த கண்களை உடைய மறவர்கள் தீக்கொள்ளியையும், நீண்ட திரண்ட அம்புகளையும் கையில் கொண்டு இரவு நேரங்களிலேயே ஆநிரைகளைக் கவர்ந்து சென்றுள்ளனர் என்பதனை,

**‘புலி என உலம்பும் செங்கண் ஆடவர்**

**ஞெலியொடு பிடித்த வார்கோல் அம்பினர்**

எல் ஊர் எறிந்து பல்ஆத் தழீஇய’ (அகம்.239)

என்று இளங்கீரனார் கூறுவதில் இருந்து தெரிய முடிகிறது.

மழவர்கள் ஆட்டுக்கிடாயின் கொம்பினைப் போன்ற தலைமயிரினை உடையவர்கள். பின்கழுத்தை முழுவதுமாக மறைக்கும் அளவிற்கு அத்தலைமயிர் பெரியதாக வளர்ந்திருக்கும். அது மட்டுமின்றி சிவந்த கண்களை உடையவர்களாகவும் ஆநிரை கவரும் மழவர்கள் இருந்துள்ளனர். ஆநிரைகளைக் கவரச் செல்லும்போது தம் வாயில் இருந்து இருமல் வராமல் இருப்பதற்காகப் புற்றுமண்ணைத் தன் வாயில் அடக்கிக் கொண்டு செல்வர் என்பதனை,

‘தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு சுரிந்த
சுவல் மாய் பித்தை செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்
தீப்படு சிறுகோல் வில்லொடு பற்றி.
நுரை தெரி மத்தம் கொளீஇ, நிரைப்புறத்து
அடிபுதை தொடு தோல் பறையஏகி’ (அகம்.101)

என்ற மாமூலனாரின் அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இது மட்டுமின்றி ஆநிரைகளைக் கவர வரும் போது மத்தம், தீப்படு, சிறுகோல், வில் ஆகியவற்றைக் கொண்டு செல்வர். இவ்வாறு படைக்கருவிகளை உடைய பாலை நில ஆநிரைக் கள்வர்கள் தம் கால்களின் அடியை மறைக்கும்படி தோலால் செய்யப்பட்ட செருப்பினை அணிந்திருப்பர் என்பதனையும் சங்க இலக்கியப் பாடல் அடிகள் மூலம் தெளிவாகக் காணமுடிகின்றது.

### 3.4.3.2 ஆநிரை கவரும் முறை

ஆநிரைகள் கட்டப்பட்டுள்ள வீட்டு வாயிலின் பக்கத்தில் அடர்ந்த செடிகள் காணப்பட்டுள்ளன. சுகாதாரமான சுற்றுப்புறத்தை உடைய, வீட்டு வாசலின் கதவுகளை இறுக்கமான கயிற்றினால் கட்டி அமைந்துள்ளனர். வீடு உள்ள இடத்தில், வைக்கோல் பரப்பப்பட்டுச் செய்யப்பட்ட கட்டில் மேல் காவற்காரர்கள் உறங்கியுள்ளனர். இவ்வாறாகக் கடுமையான காவலை உடையதாகப் பாதுகாக்கப்பட்டுள்ள ஆநிரைகளை இக்காவலைத் தாண்டி ஆநிரை கள்வர்கள் கவர்ந்துள்ளனர். முதலில் தயிர் கடையும் மத்தினைக் கவர்ந்து கொண்டு ஆநிரைகள் உள்ள இடத்திற்குத் தம் காலடிகளில் உள்ள செருப்புகள் தேயச் சென்றனர் என்பதனை,

**'குளகு அரையாத்த குறுங்கால், குரம்பை**
**செற்றை வாயிற் செறிகழிக் கதவின்**
**கற்றை வேய்ந்த கழித்தலைச் சாம்பின்**
--------------- ---------------- ------------------------------
--------------- --------------- ----------- --------------------
**இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்'** (பெரும்.148-154)

என்னும் பெரும்பாணாற்றுப்படை பாடல் வரிகள் மூலம் அறியமுடிகின்றது. இவ்வாறாகக் கடுங்காவலைத் தாண்டி கவர்ந்து வந்த ஆநிரைகளில் சிலவற்றைக் கள்வர்கள், காட்டின் அரண்களில் உள்ளோர் அலறுமாறு கொன்று தமக்குள் பங்கிட்டுக் கொண்டனர் என்பதனை,

**'செல்நாய் அன்ன கருவில் சுற்றமொடு**
**கேளா மன்னர் கடிபுலம் புக்கு**

நாள் ஆதந்து நறவுதொடை தொலைச்சி

இல்அடுகள் இன் தோப்பி பருகி’ (பெரும்.139-142)

என்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவதில் இருந்து தெளிய முடிகின்றது. கள்வர்கள் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து வரும் போது பசுக்களின் கழுத்தில் உள்ள மணி ஒலிக்கும். இந்த ஒலியைத் ‘தண்ணுமை’ ஒலியென அகநானூறு கூறுகிறது. இதனை

**‘வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்**

**சேக்கோள் அறையும் தண்ணுமை’** (அகம்.63)

என்று அகநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

போரின் காரணமாக மன்னரின் படைவீரர்கள் கன்றுடன் ஆநிரைகளைக் கவர்ந்து வந்துள்ளனர் என்பதைக் கீழ்க்கண்ட பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

**‘தெறிப்ப விளைந்த தீங்கந்தாரம்**

**நிறுத்த ஆயம் தலைசென்று உண்டு’** (புறம்.258)

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகளின் ஆசிரியர் உலோச்சனார் ஆநிரைகளைக் கவர்ந்து வரும் வீரன் ஒருவனுக்குக் கேப்பையின் நன்கு விளைந்த கள்ளை விருந்தாகக் கொடுத்ததாகக் கூறுகிறார்.

மேற்கூறிய பாடல் வரியில் கூறப்பட்டுள்ள ‘கந்தாரம்’ என்பது ஒருவகைக் கள். அது முதிர்ந்த காரைப்பழம் போன்று நுரைவிட்டுக்கொண்டு விளைந்து இருக்கும் என்று கூறுகிறார் இப்பாடலின் ஆசிரியர்.

அகநானூற்றுப் பாடல் ஒன்றில் தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்கிறாள். அவள் செல்லும் வழி கூர்மையான வேலும் சிறுசிறு கருவிகளைக் கையில் வைத்துக் கொண்டு மழவர் இன மக்கள் ஆநிரைகளைக் கவர்ந்து வருவர் என்று நற்றாய் ஒருத்தி தெய்வத்திடம் வணங்குகிறாள். இதனை,

**'நுழை நுதி நெடு வேல் குறும்படை மழவர்**

**முனை ஆத்தந்த முரம்பின் வீழ்த்த**

**வில் ஏர் வாழ்க்கைவிழுத்தொடை மறவர்'** (அகம்: 35)

என்று இப்பாடலின் ஆசிரியர் குடவாயிற் கீரத்தனார் கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது.

மறவர்கள் சீழ்க்கை ஒலி கேட்டு அம்பினைத் தப்பாது எய்யும் திறன் உடையவர்கள் விடியற்காலையில் பசுக்கூட்டங்களைக் கவர்ந்து செல்பவர். அதாவது விசில் அடிக்கும் அந்த கணப்பொழுதில் அம்பைக் குறிபார்த்து எய்தும் திறமை உடையவர்கள். இத்தகைய திறன் பெற்றவர் பாலை நில மறவர்கள் என்பதனை,

**'விளை அம்பின் விழுத்தொடை மழவர்**

**நாள் ஆ உய்த்த நாம வெஞ்சுரத்து'** (அகம்: 131)

என்று குடவாயிற் கீரத்தனார் கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது. இவ்வாறு ஆநிரைக் கள்வர்கள் பசுக்களைக் கவர்வதால் பசுக்கூட்டங்கள் தங்களுடைய கன்றுகளைக் காணாததால் பொலிவற்ற கண்களை

உடையனவாய் தன் செவிகளைச் சாய்த்து மிகவும் துன்பமுடன் காணப்பட்டன என்பதைக் கீழ்க்கண்ட பாடல் வரி உணர்த்துகிறது.

**‘களிறு காணாது புன்கண்ண செவி சாய்த்து’** (அகம்: 65)

**‘கடிநலம் கவர்ந்த கன்றுடை கொள்ளையர்’** (அகம்: 101)

என்ற மாமூலனாரின் பாடல் வரி மூலம் சில நேரங்களில் ஆநிரைகளுடன் சேர்ந்து கன்றுகளையும் கவர்ந்து சென்றுள்ளனர் என்பதையும் அறியமுடிகின்றது.

### 3.4.3.3 ஆநிரைக் கள்வர் வாழ்வியல் முறை

ஓர் இனமக்கள் பற்றிய பழக்கவழக்கம், உணவுமுறை, செய்யும்வேலை, வழிபாடு மற்றும் நம்பிக்கைகள் போன்றவையே வாழ்வியல் முறையில் அடங்கும். சங்க காலத்தில் ஒவ்வொரு நிலத்திலும் வெவ்வேறான பழக்கவழக்கங்கள் மற்றும் உணவுமுறை, சமயநம்பிக்கை இருந்துள்ளதையும் அறிய முடிகின்றது. இதே போன்று ஆநிரைக்கள்வர்களைப் பாலை நிலமக்களாகவே சங்கஇலக்கியங்கள் காட்டுகின்றன.

ஆநிரைக் கள்வர்கள், கோடை நீண்டமையால் வெப்பத்தால், வறண்ட நிலங்களில் எறும்புகள் முறையாக எடுத்துச் சென்று தம் வளையில் சேர்த்து வைத்த புல்லரிசியை உணவாக உட்கொள்வர். அதுமட்டுமின்றி தாம் கவர்ந்து வரும் ஆநிரைகளில் கொழுத்த ஆநிரையைக் கொன்று அதன் புலால்உணவைச் சமைத்து உண்பர் என்பதனை,

'சிறுபுல் உணவு நெறி பட மறுகி

நுண்பல் எறும்பி கொண்டு அளைச் செறித்த

வித்தா வல்சி வீங்கு சிலை மறவர்' (அகம் : 377)

என்று இப்பாடலின் ஆசிரியர் மாறோக்கத்துக் காமக்கணி நப்பாலத்தனார் கூறுகிறார். ஆநிரைகளைக் கவர்ந்து வரும் இவர்கள் தாம் கைப்பற்றிய ஆநிரைகளை இரவு நேரங்களில் தமக்குள் பங்கீட்டுக் கொள்வர். இவ்வாறு இவர்கள் பலமுறை பசுக்கூட்டங்களைக் கவர்ந்து சென்றதால் வளமிக்க ஊரில் உள்ள குடிமக்கள் தங்கள் வாழ்வின் ஆதாரங்களை இழந்து வேறு இடத்திற்குக் குடிபெயர்ந்து சென்றுவிட்டதை,

'பல் ஊழ்ப் புக்கு பயன்நிரை கவர

கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்த' (அகம்: 377)

என்னும் பாடல் வரிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. அது மட்டுமின்றி சிற்றூரில் வாழும் மக்கள் தலைகளில் கைவைத்து அலறி எழும்படி, கவர்ந்து வந்த ஆநிரைகளில் கொழுத்த ஆநிரையைக் கொன்று தின்றதை,

'கொழுப்பு ஆ தின்ற கூர்ம்படை மழவர்

செருப்புடை அடியர்' (அகம் 129)

என்று குடவாயிர் கீரத்தனார் கூறுவதில் இருந்த உணரமுடிகின்றது. கவர்ந்து வரும் ஆநிரைகளில் கொழுவிய ஆவினைத் தெய்வம் வாழும் பருத்த அடிமரத்தைக் கொண்ட வேப்ப மரத்தடியில் பலியிட்டு, அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்ததை,

'அம்பு சேண்படுத்து வன்புலத்த உய்த்தென
தெய்வம் சேர்ந்த பாரை வேம்பில்
கொழுப்பு ஆ எறிந்து குருதி தூஉய்' (அகம்: 309)

என்னும் பாடல் வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

3.5 நடுகல்

பண்டைத் தமிழரின் வாழ்வியலை வெளி உலகுக்கு வெளிக்காட்டும் சான்றுகளுள் நடுகற்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். பண்டைத் தமிழ் இலக்கியங்களில் நடுகல் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்திற்குப் பின்பு எழுந்த திருக்குறளில்,

"என்னை முன் நில்லன் மின் தெவ்வீர் பலரென்னை
முன்னின்று கல்நின்றவர்"[16] (குறள்.771)

என்று, போரில் இறந்த பகைவர் கல்லாகி நின்றதாகக் குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியத்தில் நடுகற்களின் உருவம் மற்றும் எழுத்துக்கள் பற்றிக் குறிப்பிடவில்லை. நடுகல் குறித்தும், நடுகல் எடுப்பதற்கான ஆறு நிலைகள் பற்றியும் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட்டு அயர்ந்த காந்தளும் உறுபகை
…………. …………………………………..
…………………………. ………….. ……….
காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்

சீர்த்தகு மரபில் கல்லொடு புணரச்

சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே"[17] (தொல்.நூற்.,63)

என்னும் நூற்பாவின் மூலம் காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல் ஆகியவற்றைச் செய்துள்ளனர் என்பதைத் தெளிவாக உணரமுடிகின்றது. இதில்,

காட்சி - போர்க்களத்தில் இறந்த வீரனுக்கு நடுகல் நடுவதற்கு உரிய கல்லைத் தேர்ந்தெடுத்தல் ஆகும்.

கால்கோள் - அவ்வாறு தேர்ந்தெடுத்த கல்லைக் கொண்டு வருதலாகும்.

நீர்ப்படை - நடுகல்லிற்குக் கொண்டு வந்த கல்லை நீராட்டி தூய்மைசெய்தலாகும்.

நடுகல் - அக்கல்லை நட்டு அதற்குத் தக்க மரியாதையுடன் கோட்டம் கட்டுதலாகும்.

ஆகிய செயல்களை உடையனவாக நடுகற்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன என்பதைத் தெளிவாக அறிய முடிகின்றது.

நடுகல் என்பது கல்லில் வீரரின் உருவமும் பெயரும் எழுதி அவனைப் புதைத்த இடத்தில் நடப்படும் கல் என்றும் கூறலாம். அதுமட்டுமின்றி செத்தார்க்கு நடப்படும் கல் என்றும் பொருள் கொள்ளலாம்.

### 3.5.1 சங்க காலத்தில் நடுகல்:

சங்க காலத்தில் ஆநிரை கவர்தலும் அதனை மீட்டலும் இருந்ததை இலக்கியவரிகள் தெளிவாக உணர்த்துகின்றன. மிகப்பழங்காலந்தொட்டே நடுகற்கள் இருந்து வந்துள்ளன என்பதை இதன்மூலம் அறியமுடிகின்றது.

சங்க காலத்தில் ஆநிரைகளை மீட்க வருபவர் மற்றும் அதனைக் கவர்ந்து செல்பவர் வில் எய்து வீழ்த்தப்பட்டால் நடுகல் எழுப்பப்பட்டதைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது. பெரும்பாலும் ஆநிரைகளைக் கவர்ந்துவரும்போது அதனை மீட்பதற்காகச் சண்டையிட்டு மரணமடைந்த வீரர்களுக்கே நடுகற்கள் எழுப்பப்பட்டன என்பதைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. இதனை,

> **'பாலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி**
> **மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு**
> **அணி மயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து**
> **இனி நட்டனரே கல்லும்'** (புறம்: 264)

என்னும் புறநானூற்றுப் பாடல் அடிகள் வெட்சியார் கவர்ந்துசென்ற ஆநிரைகள் மீட்பதற்காக நடைபெற்ற கரந்தைப் போரில் உயிர்நீத்த வீரனுக்கு ஊரவர் கல் நட்டனர். மரல் நாரில் தொடுக்கப்பட்ட சிவந்த பூவையுடைய கண்ணியையும் அழகிய மயிலினது பீலியையும் சூட்டிப் பெயரும் பீடும் எழுதி பெருமை செய்து வழிபட்டுள்ளனர் என்பதை அறியமுடிகின்றது. இங்கு கூறப்பட்டுள்ள மரல் என்பது குறிஞ்சி நிலத்தில்

விளையும் ஒருவகைக் கள்ளிச்செடியாகும். இதனை மலைபடுகடாம் ‘காய்ந்த மரல் நாரில்’ என்று கூறுகிறது.

### 3.5.2 தமிழ்நாட்டில் நடுகல்

பண்டைய காலத்தில் ஆநிரைக் கவர்தலில் போரிட்டு உயிர்நீத்தவனுக்கு நடுகல் எழுப்பப்பட்டது. இதனை நடுகற்களும் உறுதி செய்கின்றன.

“தேனி மாவட்டம் ஆண்டிப்பட்டி வட்டம் புலிமான் கோம்பை என்ற ஊரில் கண்டறியப்பட்ட பிராமி எழுத்துக்களில் அமைந்த நடுகற்கள் காலம் கி.மு 2-3ம் நூற்றாண்டு என்று அறிஞரால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது”[18]

இந்த நடுகல்லில் உள்ள,

**“கல்பேடு தீயன் அந்தவன் கூடல்ஊர் ஆகோள்”**[19]

என்னும் வரிகள் ஆநிரையைக் கவர்ந்து சென்றவனிடம் இருந்து மீட்கும்போது தீயன் இறந்து பட்டான் என்பதைக் குறிக்கின்றது. இதில் உள்ள கூடலூர் என்பது சங்ககாலத்தில் உள்ள மதுரையைக் குறிக்கும். ஆகவே கூடலூர் பகுதியில் ஆநிரைகளைக் கவரும் கள்வர் இருந்துள்ளனர் என்பதை அறியமுடிகின்றது.

### 3.5.3 நடுகல் வழிபாடு

சங்க கால மக்கள் தங்களுக்காகவே ஆநிரைகளை மீட்டு உயிர்நீத்த வீரனுக்கும் ஆநிரைகளைக் கவர்ந்து வரும்போது உயிர்நீத்த வீரனுக்கும் நடுகற்கள் வைத்ததோடு மட்டுமின்றி அதற்கு வழிபாடும் செய்துள்ளனர்.

நடுகற்களுக்கு தீபதூபம் காட்டிப் பூசைசெய்யும் வழக்கம் இருந்ததைப் புறநானூறு, மலைபடுகடாம் முதலிய நூல்கள் குறிப்பிடுகின்றன. நடுகல்லைச் சுற்றிலும் கல்அடுக்கி அதனைப் பதுக்கை ஆக்கி நடுகல்லோடுச் சேர்த்து மயிற்பீலிகளைக் கட்டியுள்ளனர். அதோடு மட்டுமின்றி தோப்பி என்னும் கள்ளையும் படைத்து உயிரினங்களையும் பலியிட்டுள்ளனர் என்பதனை,

**'இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
**புடைநடு கல்லின் நாட்பலியூட்டி**
**நன்னீராட்ழ நெய்நறை கொளீஇய**
**மங்குல் மாப்புகை மறுகுடன் கமழும்'** (புறம்: 306)

என்னும் புறநானூற்றுப் பாடல் வரிகள் மூலம் இந்தப் பதுக்கைகள் வழிப்பாதைகள் கூடும் இடத்தில் அமைக்கப்பட்டிருந்தன என்பதை அறியமுடிகின்றது.

## 3.6 தொகுப்புரை

ஆயகலைகள் அறுபத்தி நான்கில் களவுக்கலையும் ஒன்றாகும். களவுக்கான காலம், இடத்தைத் தேர்வு செய்தலும் பிறர் அறியாதவாறு களவாடுதலும், தடயங்களை விட்டு வைக்காமையும், காவலர் கையில் அகப்படாமையும், களவு செய்வோரின் தொழில் நுட்பங்களாக இருந்ததை அறிய முடிகிறது.

தொல்காப்பியர் அறம் இல்லாதவற்றைக் களவு என்று கூறுகிறார்.

களவிலிருந்து சிறிது வேறுபட்டது கொள்ளை அடித்தலாகும். ஆனால் இரண்டின் நோக்கமும் பிறர் பொருளை எடுத்தல் என்ற ஒன்றேயாகும் என்பதைத் தெரிய முடிகிறது.

ஊர்க்கள்வர்கள் நகர்மற்றும் ஊர்ப்புறங்களில் இரவில் சுற்றித்திரிந்து களவு செய்வோர் ஆவார்கள். ஊர்க்கள்வர் பற்றிய செய்திகள் எட்டுத்தொகை நூல்களில் வெளிப்படையாகக் கூறப்படவில்லை. அகப்பாடல்களில் அகமாந்தர் கூற்றாக ஓரிரு செய்திகள் கூறப்பட்டுள்ளன எனலாம்.

பத்துப்பாட்டில் மதுரைக்காஞ்சியில் மட்டுமே இத்தகைய ஊர்க்கள்வர் பற்றிய தோற்றமும் செயலும் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளன. அதோடு மட்டுமின்றி ஊர்க்காவலர்களை மன்னன் திறமையுடன் நியமித்த செய்தியையும் கூறப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

நற்றிணை, அகநானூறு ஆகிய நூல்களில் ஊரில் காவலர்கள் காவல் செய்ததற்கான செய்தி கூறப்பட்டுள்ளது. இதன்மூலம் ஊர்க்கள்வர்கள்

இருந்ததையும் அதனால்தான் ஊருக்குக் காவல் போடப்பட்டது என்பதையும் அறியமுடிகிறது.

கடல் கொள்ளையர் பற்றிய செய்திகள் பதிற்றுப்பத்தில் 41ம் பாடலில் மட்டுமே கூறப்பட்டுள்ளது. அதுவும் கடல்பிறக்கு ஓட்டிய செங்குட்டுவனைப் பற்றிக் கூறும் இடத்தில் மட்டுமே கடல் கொள்ளையருடன் செங்குட்டுவன் போரிட்டு வென்ற செய்தி கூறப்பட்டுள்ளதே தவிர சங்க இலக்கியங்களில் பிறபகுதிகளில் கடல் கொள்ளையர் பற்றிய செய்திகள் கூறப்படவில்லை எனலாம்.

அகநானூற்றில் சுங்கக்காவல் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளது. பாண்டிய மன்னன் சுங்கக் காவலர்களை வைத்து துறைமுகத்தை பாதுகாத்துள்ள செய்தியை 27ம் பாடல்வரிகள் மூலம் தெளிவாக உணரமுடிகின்றது. அது மட்டுமின்றி தமிழ்நாட்டில் வேளாண்மை போன்று வாணிபமும் நடைபெற்றுள்ளதையும் அறியமுடிகின்றது.

ஆநிரைக் கவர்தல் வெட்சி என்னும் போர்மரபாகக் கருதப்பட்டது. எனினும் பிறர்க்குரிய பொருளை அவர் அறியாதவாறு எடுத்தலால் இது களவு எனப்பட்டது எனலாம்.

ஆநிரைக் கள்வர் தாம் கைப்பற்றிய ஆநிரைகளை இரவு நேரத்தில் காட்டரண்களில் உள்ளோர் அலறுமாறு அவற்றைக் கொன்று அறுத்து தமக்குள் பங்கிட்டுக் கொண்டதைக் காண முடிகிறது.

எறும்புகள் தங்கள் புற்றில் சேர்த்து வைத்த புல்லரிசியை ஆநிரைக் கள்வர் உணவாக உட்கொண்டதை அறிய முடிகிறது.

கவர்ந்து வரும் ஆநிரைகளில் கொழுவிய ஆவினைத் தெய்வம் வாழும் வேப்பமரத்தடியில் பலியிட்டு அதன் குருதியை மரத்தின் மேல் தெளித்து வழிபாடு செய்ததைக் காண முடிகிறது.

ஆநிரைக்கள்வர் ஆட்டுக்கிடாவின் கொம்பினைப் போன்று சுற்றிச் சுருண்ட பிடரியை மறைக்கும் தலைமயிரினை உடையவர்களாகக் காணப்பட்டதை அறிய முடிகிறது.

தம் வாயில் இருந்து இருமல் வராமல் இருப்பதற்காகப் புற்று மண்ணை வாயில் அடக்கிக் கொள்ளும் தன்மை உடையவர்களாக இருந்ததை உணர முடிகிறது.

சங்க காலத்தில் ஆநிரைக் கவர்தலும் அதனை மீட்டலும் இருந்துள்ளன. இவ்வாறு ஆநிரைக் கவர்தலில் போரிட்டு உயிர் நீத்தவனுக்கு நடுகல் எழுப்பப்பட்டதைக் காண முடிகிறது.

இத்தகைய நடுகற்களுக்கு பூசை செய்யும் வழக்கங்களும் இருந்துள்ளதை புறநானூறு மற்றும் மலைபடுகடாம் முதலிய சங்க நூல்கள் மூலம் அறிய முடிகின்றது.

# குறிப்புகள்

1. திருக்குறள், (கு.எ.) 1071
2. இளம்பூரணர்,(உரை) தொல்காப்பியம், ப.153
3. பிங்கல முனிவர், பிங்கலந்தை நிகண்டு, ப.416
4. அபிதான சிந்தாமணி, ப.458
5. அ.சி.மூர்த்தி, சைவ சித்தாந்த அகராதி, ப.87
6. பிங்கல முனிவர், பிங்கலந்தை நிகண்டு, ப.416
7. கழகப்புலவர், கழகத் தமிழ் அகராதி, ப.305
8. மேலது, ப.305
9. தொல்காப்பியம், சொல்லதிகாரம், நூற்பா: 642
10 மேலது, நூற்பா: 652
11. M.J.M நிம்சி இணையம், கடல்கொள்ளையர் பற்றிய கட்டுரை
12. ரெ. சுபா, சங்க இலக்கியத்தொழில்கள், ப.136
13 துயர்மிகு தமிழர், முகநூல் கட்டுரை, 18 ஜீன்
14. கழகப்புலவர், கழகத் தமிழ் அகராதி, ப.30
15. மேலது, ப.30
16. திருக்குறள், 771
17. தொல்காப்பியம், பொருளதிகாரம், நூற்பா 63
18. தமிழ்விக்கிபீடியா, இணையம்
19. மேலது.,

இயல் - 4

# ஆறலைக்கள்வர் வாழ்க்கைமுறையும், தொழில்முறைகளும்

4.0 முன்னுரை

4.1 பாலைநிலம்

4.1.1 பாலைநிலஅமைப்பு

4.1.2 பாலைநிலமக்கள்

4.2 ஆறலைக்கள்வர் விளக்கம்

4.3 பாலைநிலமக்களின் தோற்றம்

4.3.1 பாலைநில மகளிரின் தோற்றம்

4.3.2 பாலைநில மக்களின் குடில் அமைப்பு

4.4 பூவகைகளும் மரங்களும்

4.4.1 இலவம் பூ, இலவமரம்

4.4.2 இருப்பைப் பூ, இருப்பை மரம்

4.4.3 ஓமை

4.4.4 பாலை

4.4.5 மராஅம்

4.5 விலங்குகளும் பறவைகளும்

4.5.1 செந்நாய்

4.5.2 யானை

4.5.3 புலி

4.5.4 கழுகு

4.5.5 குடிஞை

4.5.6 புறா

4.5.7 கணந்துள்

4.6 திருமணமுறைகள்

4.7 சமையல்முறை

4.7.1 பாலைநில மக்களின் உணவு

4.7.2 புல்லரிசி உப்புக்கண்டம்

4.7.3 சிவந்தசோறும் உடும்புப் பொரியலும்

4.7.4 விருந்தோம்பல்

4.8 விழாக்கள்

4.8.1 பூந்தொடை விழா

4.8.2 இளவேனிற் விழா

4.8.3 பங்குனி விழா

4.11.3 முரசு

4.11.4 யாழ்

4.11.5 குழல்

4.11.6 தூம்பு

4.12 பாலைநிலமக்களின் தொழில்முறை

4.12.1 ஆடவர்க்குரிய தொழில்

4.12.1.1 ஆறலைத்தல்

4.12.1.2 ஆறலைக் கள்வரின் இயல்பு

4.12.1.3 ஆறலைக் கள்வரின் செயல்

4.12.1.4 ஆறலைக் கள்வர் தாக்குதல்

4.12.1.5முன் ஆயத்த நிலை

4.12.1.6 காத்திருக்கும் முறை

4.12.1.7 தாக்கும் முறை

4.12.1.8 ஆறலைக்கள்வர் பயன்படுத்தும் வழி

4.12.1.9 தொழில் சிறப்பு

4.12.1.10ஆறலைக்கள்வர் திருடியப் பொருள்கள்

4.12.2 மகளிருக்குரிய தொழில்கள்

இயல் - 4

# ஆறலைக்கள்வர் வாழ்க்கைமுறையும், தொழில்முறைகளும்

## 4.0 முன்னுரை

மக்கள் வாழ்வதற்குத் தேவையான நீராதாரம் இன்றி வறண்ட நிலத்திலே பொருள் தேட முடியாத சூழலில் பொருள்தேடி மீண்டுவரும், வழிப்போக்கரிடம் பொருள் பறிப்பவர்கள் கள்வர் என்று அழைக்கப்படுகின்றனர். இவ்வழிப்பறிக் கள்வர்கள் சங்க இலக்கியங்களில் ஆறலைக்கள்வர் என்றும் பாலை நிலம் சார்ந்தவர்களாகவும் குறிக்கப்படுகின்றனர். இத்தகைய பாலை நிலம் சார்ந்த மக்கள் பற்றியும், அவர்களது வாழ்க்கை முறை பற்றியும் ஆராய்வதாக இவ்வியல் அமைய உள்ளது.

## 4.1 பாலைநிலம்

தமிழ்நாட்டில் பாலை என்ற ஒரு தனியான நில அமைப்பு கிடையாது. வறண்ட பூமியான நிலத்தில் விவசாயம் செய்ய முடியாமல் போகும் நிலையில் தோன்றிய நில அமைப்பே பாலையாகும். இந்நிலத்தில் வாழ்ந்த மக்களே ஆறலைக் கள்வர் என்று அழைக்கப்பட்டனர். இப்பெயர் இவர்கள் செய்த தொழில் அடிப்படையிலேயே அமைந்திருந்தது எனலாம்.

### 4.1.1 பாலைநில அமைப்பு

பாலைநிலம் என்பது மணலும் மணல் சார்ந்த இடமாகவும் இலக்கியங்கள் கூறுகின்றன. குறிஞ்சி நிலமும் முல்லைநிலமும் தமது இயல்புகளில் மாறுபடும்போது உருவாகுவது பாலைநிலம் என்பதனை,

**"குறிஞ்சியும் முல்லையும் முறைமையிற் றிரிந்து**
**நல்லியல்பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"[1] (சிலம்பு-காடு.66-68)**

என்கிறது சிலப்பதிகாரம்.

பாலைநிலம் விரிந்து பரந்த நெடிய மணல் பரப்புடன் உயிரினங்கள் வாழ்வதற்குத் தகுதி அற்ற வெப்பம் நிறைந்த நிலப்பகுதியாகும். தமிழகத்தில் பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி ஆகிய வேனிற் காலங்களில் வெப்பம் மிகுதியாக இருக்கும். உயிரினங்கள் அனைத்தும் வாழ்வாதாரத்திற்காகப் போராடும் காலம் இதுவாகும். இக்காலங்களே பாலை நிலத்திற்கு உரிய பெரும் பொழுதுகளாக இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன.

பாலைநிலத்தின் அமைப்பு குறித்து சிறுபாணாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ளது. "வெயிலின் வெம்மையால் அந்நிலத்தில் உள்ள கற்களே வேலின் முனை போன்று கூர்மையாக காணப்படுகின்றன"[2] என்று குறிப்பிடுகின்றது.

பொதுவாக காலை மற்றும் மாலையில் வெயிலின் வெப்பம் குறைவாகவும் நண்பகலில் அதிகமாகவும் காணப்படும். ஆனால் சுரத்தில் மட்டும் காலையிலேயே வெயிலின் வெப்பம் அதிகமாகக் காணப்படுகிறது

என்றும் கூறுகின்றது. இத்தகைய பாலை நிலத்திலே கான்யாற்றின் மணல்வழி வந்தவர்கள் வெயிலின் கொடுமை தாங்க முடியாமல் நடந்து சென்றனர் என்றும் அப்பொழுது பாலை நிலவழியில் உள்ள பரற்கற்கள் வெப்பம் மிகுதியால் சூடேறி இருந்தன. அதனால் அக்கற்கள் பாணர்களின் கால்களைக் கிழித்தன. இத்தகைய தன்மை உடையதாகப் பாலை நில அமைப்பு இருந்ததையும் அறிய முடிகின்றது.

### 4.1.2 பாலை நிலமக்கள்

சங்ககாலமக்கள் நிலப்பாகுபாட்டிற்கு ஏற்பவே பெயரிட்டு அழைக்கப்பட்டுள்ளனர். அதிலும் தலைமக்கள் என்றும் பிறர் என்றும் பெயர்ப் பாகுபாடு காணப்பட்டுள்ளது. அந்த வகையில் பாலை நிலமக்கள் எயினர், எயிற்றி, மறவர், மறத்தி என்று அழைக்கப்பட்டுள்ளனர். அதுமட்டுமின்றி அவர்கள் தாங்கள் செய்யும் தொழில் முறைக்கு ஏற்ப ஆறலைக்கள்வர் என்றும் ஆநிரைக் கள்வர் என்றும் அழைக்கப்பட்டதையும் காண முடிகின்றது.

ஆறலைக்கள்வர்கள் என்பவர் பாலை நிலவழியே செல்வோரிடம் இருந்து பொருள்களைப் பறித்து அதனை வைத்துத் தங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர்கள் என்பதையும் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது. ஆநிரைக் கள்வர் பற்றிய விளக்கம் மூன்றாம் இயலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

## 4.2 ஆறலைக்கள்வர் விளக்கம்

ஆறலைக் கள்வர்களைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பாலைத்திணையில் வழிப்பறி செய்பவர்களாகவே காட்டுகின்றன. அகராதிகளும் அவ்வாறே கூறுகின்றன.

ஆறலைத்தல் என்பதை, ஆறு+அலைத்தல் என்று பிரிக்கலாம். ஆறு என்றால் வழி என்றும்,'அலைத்தல்' என்பது வருத்தம் என்றும் பொருள் கொள்ள முடிகிறது.

ஆறலைத்தல் என்பதற்கு "வழிப்பறிசெய்தல்"[3] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

வழி என்ற சொல்லுக்கு 'ஆறு' என்று பொருள் கூறுகிறது சைவசித்தாந்த அகராதி. அதுமட்டுமின்றி ஆற்றில் நீரில்லாத காலத்தில் ஆறு ஓடிய பாதையைப் பின்பற்றியே பெரும்பாலும் இவர்கள் ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்குச் சென்றிருக்க வேண்டும். ஆகவே தான் ஆறு என்ற சொல்லிற்கு 'வழி' என்று பொருள்படுவதையும் இதன்மூலம் அறிய முடிகின்றது.

சதுரகராதி, 'ஆறலைத்தல்' என்ற பதத்திற்கு "வழிப்பறித்தல்"[4] என்று பொருள் தருகிறது.

இதன்வழி ஆறலைத்தல் என்பது 'வழிப்பறி செய்வது' என்பதையே குறிப்பிடுகிறது என்பதை அறியமுடிகின்றது. வழியிலே வரும் வழிப்போக்கரிடம் வழிப்பறி செய்யும் தொழிலில் ஈடுபட்டதால் இவர்கள்

ஆறலைக்கள்வர் என்று அழைக்கப்பட்டுள்ளனர் என்பதையும் அறிய முடிகின்றது.

### 4.3 பாலை மக்களின் தோற்றம்

மக்களின் தோற்ற அமைப்பு நிலஅமைப்பு அடிப்படையிலேயே அமைகின்றன. இதனை எட்கர்தர்ஸ்ட்டன் தென்னிந்தியக் குலங்களும் குடிகளும் என்ற நூலிலும், பக்தவத்சல பாரதி பண்பாட்டு மானிடவியல் என்ற நூலிலும் விரிவாகக் கூறியுள்ளதன் வழி அறியமுடிகிறது. அந்த வகையில் சங்ககால ஐந்நில மக்களும் அந்நிலம் சார்ந்த வகையில் உடல் அமைப்பினைப் பெற்றிருப்பதை இலக்கியங்கள் வழிக் காண முடிகின்றது.

பாலை நிலத்திலே வாழும் ஆறலைத்தல் தொழில் செய்யும் ஆறலைக் கள்வர்கள் தாங்கள் செய்யும் தொழிலுக்கு ஏற்ப மிகவும் வலிமை வாய்ந்தவர்களாகவே இருந்துள்ளனர். காண்போர் அஞ்சுமாறு தலைமாலைசூடிய தலையினை உடையவர்களாகவும், வரிகள் கொண்ட வேங்கைப் புலியின் தோலினைப் போன்ற தோளினை உடையவர்களாகவும் இருந்துள்ளனர். கொடுமையான பார்வையும் வலிமையான வளைந்த வில்லினையும் உடையவர்களாக அந்நில ஆடவர்கள் இருந்துள்ளனர் என்பதனை,

**‘குலாஅவல் வில் கொடுநோக்கு ஆடவர்’** (அகம்.265)

**‘இரும்புலி வேங்கைக் கருந்தோல் அன்ன’** (அகம்.285)

**‘வெருவர உவலை சூடிய தலையர்’** (அகம்.291)

என்னும் அகநானூற்றுப் பாடல்வரிகள் உணர்த்துகின்றன. இவர்கள் பசுங்கன்றின் தோலால் செய்யப்பட்ட அம்புக்கூட்டினையும், சினம் மிக்கநாயினையும், பாதுகாப்புப் படையாகக் கொண்டிருந்ததைக் காணமுடிகிறது. கல்வி அறிவு இல்லாத பாலை நில ஆடவர்கள், செந்நிற கிளையையும், கருநிற அடிப்பகுதியையும் உடைய வெண் கடம்பின் வெண்மையான மெல்லிய பூங்கொத்துகளைச் சுருண்டு வளைந்துள்ள தங்களின் தலைமயிர் பொலிவு பெறும்படி சூடிக் கொண்டிருந்ததை அறியமுடிகிறது. காவிநிற உடையணிந்து வாரப்படாத ஒழுங்கற்ற தலைமயிரை உடையவர்களாகவும் காணப்பட்டுள்ளனர். மற்றவருக்குத் துன்பம் விளைவிக்கும் வில்லினையும் வலிமையான அம்பினையும் உடையவர்களாக இந்நில எயினரும் மழவரும் இருந்துள்ளனர் என்பதனை,

**'கற்ற உரிக் குதம்பைக் கதநாய் வடுகர்'** (அகம்.381)

**'கரிந்துவணர் பித்தை பொலியச்சூடி**
**கல்லா மழவர்வில் இடம் தழிஇ'** (அகம்.127)

என்னும் பாடல்வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

''புலியின் பார்வை போன்ற கொடுமையான பார்வையும், அன்பில்லாத வலிமையான உடம்பினையும், கடுமையான பார்வையும் உடையவர்களாக இருந்ததனை''[5] கலித்தொகை கூறுகிறது. கலைமானின் கொம்பினைப் போன்று முறுக்குண்டு, தாழ்ந்த, தாடியையும் கடுமையான கோபமும் உடையவர்களாகவும் போரில் புறங்கொடாத தன்மையும் கையில் வீரவளையல் அணிந்தவர்களாகவும் இருந்துள்ளனர் என்பதனை,

'மருப்பின் திரிந்து மறிந்து வீழ்தாடி

உருத்த கடுஞ்சினத்து ஓடாமறவர்' (கலி.45)

என்னும் சங்கப்பாடல் வரிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

### 4.3.1 பாலை நில மகளிர் தோற்றம்

சங்ககால மகளிர் இறை நம்பிக்கை அதிகம் உடையவர்களாகவே இருந்துள்ளனர். மகளிர் உயிரை விடவும் நாணத்தை விடவும் கற்புடைமைக்கே முக்கியத்துவம் அளித்துள்ளனர். தான் விரும்பியவனையே மணம் முடித்துக் கொள்ள வேண்டும் என்பதில் உறுதியாக இருந்துள்ளனர். இதற்காக உடன்போக்கும் மேற்கொண்டனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

பாலை நிலம், வழிப்போக்கற்கு வருத்தத்தைத் தருவதைப் போல அந்நில மகளிரும் கடுமையான மொழி பேசக் கூடியவர்களாகவே இருந்துள்ளனர். வெண்மையான பற்களை உடைய இவர்கள் இலைகள் விரவித் தொடுத்த மாலையை அணிந்துள்ளனர். மான்தோலால் ஆகிய படுக்கையைப் பயன்படுத்தியுள்ளதையும்,

'மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி

யின்பிண வொழியப் போகி நோன்கா

ழிருப்புதலை யாத்த திருந்துகணை விழுக்கோ

-------------- ----------- ------------- ----------- --------------

-------------- ------------ ------------- ---------- ---------------

துண்புலடக்கிய வெண்பலெயிற்றியர்' (பெரும்.89-94)

என்னும் பெரும்பாணாற்றுப்படை பாடல்வரிகள் மூலம் பாலை நில மகளிரின் தோற்றம் பற்றித் தெரிந்து கொள்ள முடிகின்றது.

### 4.3.2 பாலை நில மக்களின் குடில் அமைப்பு

பண்டைத் தமிழர்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை வாழ்ந்தனர். ஆகவே தாங்கள் வாழும் நில அமைப்பில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு, வாழும் நில அமைப்பிற்கு ஏற்ப குடில்களை அமைத்துக் கொண்டதைக் காணமுடிகிறது.

பாலை நில மக்களாகிய எயினர்கள் எலி, அணில் போன்ற விலங்குகள் வீட்டின் உள்ளே வராதபடி கூர்மையான முனையை உடைய ஈந்தின் இலையால் தங்கள் குடில்களை அமைத்திருந்துள்ளனர். தங்கள் குடிலின் மேற்கூரையாக இலைதழைகளையும் ஊகம்புல் மற்றும் ஈந்தின் இலையைப் பயன்படுத்தியும் வேய்ந்திருந்துள்ளனர். மேலும் இக்குடிலின் தோற்றம் வேல் போன்ற நுனியையுடைய ஈந்தின் இலையால் வேயப்பட்ட நெடிய மேட்டினையும் பன்றியின் முதுகு போன்ற புறத்தினையும் உடையதாக இருந்துள்ளதை,

**'நீள் அரை இலவத்து அலங்குசினை பயந்த**
**பூளைஅம் பசுங்காய் புடை விரிந்தன்ன**
**வரிப்புற அணிலொடு கருப்பை ஆடாது**
**யாற்று அறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்**
**வேற்றலை அன்ன வைந்நுதி நெடுந்நகர்**
**ஈந்து இலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை'** (பெரும்.83-88)

என்னும் பெரும்பாணாற்றுப்படை பாடல்வரிகள் மூலம் அறியமுடிகின்றது. எயினர்களின் குடிலில் குட்டிபோட்ட செம்மறிஆடு இருந்துள்ளது. அதுமட்டுமின்றி தகர் ஆட்டிற்கு மணலின் படிவு போல் அலைஅலையாய் படிந்த மயிர் மற்றும் கொழுத்த மடல்கள் இருந்துள்ளன என்பதையும் சங்கப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

கு.வெ.பாலசுப்பிரமணியன் கூறும்போது, ‘‘ஊகம் புல்லால் வேய்ந்த உயர்ந்த சுவர்களையும் மலையில் தொடுக்கப்பட்ட தேனடை போன்ற அம்புக்கட்டுகளும் அவை தொங்கவிடப்பட்டத் திரண்ட காலை உடைய பந்தலையும் சங்கிலியால் கட்டப்பட்ட நாய்களைக் காவலாகக் கொண்ட வீட்டினையும் உடையது’’[6]எனத் தனது நூலில் கூறுகிறார்.

எனவே பாலை நில மக்களின் குடில்கள் எளிமையாக மட்டுமின்றி தக்க பாதுகாப்புடனும் அமைந்திருந்துள்ளன என்பதை அறிய முடிகின்றது.

## 4.4 பூவகைகளும் மரங்களும்

ஒவ்வொரு நிலஅமைப்பிற்கும் அதனுடைய சூழல் அமைப்பிற்கும் ஏற்ப அந்நிலத்தில் பூக்களும் மரங்களும் அமைந்திருக்கும். சில மலர்கள் மற்றும் மரங்கள் நீர் வளம் இருக்கும் இடத்தில் மட்டுமே வளரக் கூடியவை. சில மரங்களும் பூக்களும் வறட்சியைத் தாக்குப் பிடிக்கும் தன்மை உடையவனாக இருக்கும். பாலை நிலமோ வறட்சியான தன்மை உடையது. எனவே அத்தகைய தன்மையிலும் ஒரு சில பூக்களும் மரங்களும் இருந்துள்ளன.

### 4.4.1 இலவம் பூ இலவமரம்

பாலை நிலங்களில் நீர் வற்றிப்போன கிளைகளும் இலையில்லாமலும் முள் பொருந்திய அடிப்பகுதியையுடையனவும், “காற்றின் வேகத்தால் கீழே சிதறிய இலவ மலர்களை உடைய இலவ மரங்கள் இருந்துள்ளதை”[7]அறிய முடிகின்றது.

இலவமரத்தின் அறிவியல் பெயர் ‘பாம்பாக்ஸ் மலபாரிக்கம்’ ஆகும். இம்மரம் உயரமாக வளர்ந்த நெடிய கிளைகளை உடையது. இம்மரத்தின் பூக்கள் செந்நிறத்தில் இருக்கும். இம்மரத்தின் காய் முற்றிய பின்பு அதிலிருந்து வெளிப்படும் பஞ்சு, மெத்தை மற்றும் தலையணை செய்யப் பயன்படுத்தப்படுகின்றது. பிற்காலத்தில் எழுந்த நீதி நூலான ஆத்திச்சூடியில் ஔவையார்,

**“இலவம் பஞ்சில் துயில்”**[8]

என்று கூறுகிறார். அதாவது மெத்தையில் உறங்குவதாக இருந்தால் இலவம் பஞ்சு மெத்தையில் படுத்து உறங்கவேண்டும் என்று கூறுகிறார். இதற்குக் காரணம் பருத்திப்பஞ்சு உடம்பிற்குச் சூட்டினை அளிக்கும். இலவம் பஞ்சு உடம்பிற்குக் குளிர்ச்சியைத் தரும் என்பதே ஆகும். இம்மரம் மலர்களால் மறைந்திருக்கும் தோற்றத்தினை,

**‘அம்காட்டு இலையில் மலர்ந்த முகையில் இலவம்’** (அகம்.11)

என்ற அகப்பாடல் வரி அடிமொழியும். மேலும் முள்ளிலவத்திற்குத் தடித்த சிவந்த பூவிதழ்கள் உண்டு. இந்த இதழ்களை மனிதரின் நாக்கிற்கு ஒப்பிடுவதை,

**'இலவ மலர் அன்ன அம்செந்நாவின்'** (அகம்.142)

என்ற அடியின் மூலம் அறியப்படுகிறது.

### 4.4.2 இருப்பைப்பூ இருப்பை மரம்

இருப்பைப் பூவைப் பேச்சுவழக்கில், தற்காலத்தில் இலுப்பைப் பூ என்று கூறுகின்றனர். இப்பூவானது அடுக்கு மல்லியினைப் போன்ற தோற்றத்தை உடையது. இம்மலர் கொத்துக் கொத்தாகப் பூக்கும். இதனைச் சங்க இலக்கியமும் கூறுகிறது.

"இருப்பை மலர், பல அம்புகள் தூணில் இருப்பது போன்று பலபூக்கள் கொத்தாக மலரும். அம்மலர் காம்பிலிருந்து உதிரும் போது செந்நிலத்தில் முத்துப் போன்று உதிரும்"[9] என்கிறது அகநானூறு.

இருப்பைமரம் வான்வரை உயர்ந்து வளரக்கூடியது. இதன் கிளைகள் வேனிற்காலத்திலும் நன்கு செழுமையாக வளர்ந்திருக்கும். இதன் அடிமரம் பருத்திருக்கும். எனவே இது 'பராரை' எனப்படும். அதுமட்டுமின்றி இரும்பு எவ்வாறு கடினத்தன்மை உடையதோ அதைப் போன்று இருப்பை மரமும் கடினத்தன்மை உடையது என்பதனை,

**'எவனோ? வாழி, தோழி! பொரிக்காய்**
**பொருட்டரை இருப்பைக் குவிகுலைக்கடின்தே'** (அகம்.95)

‘கடுங்கோட்டிருப்பை வெண்பூ’ (அகம்.247)

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் உறுதிப்படுத்துகின்றன.

சின்னத் தலை கொண்ட இறால் மீனைப் போன்று இருப்பைப்பூ இருக்கும் வேனிற்காலத்தில் வெண்மையான நிறத்தில் இப்பூ மலர்ந்திருக்கும் என்பதனை,

‘அந்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகை மீன் பெறீஇயர்’

(நற்.111)

எனும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இருப்பைப்பூ மிகுந்த மணம் உடையது. இப்பூ **“குடஇதழ்ப்பூ”**[10]வகையைச் சார்ந்தது என்கிறார் கோவை இளஞ்சேரன். இந்த இருப்பைப் பூவை,

‘கான இருப்பை வேணல் வெண்பூ’ (குறுந்.329)

என்று குறுந்தொகை கூறுவதன் மூலம் முதுவேனில் காலத்தில் அதாவது கோடை காலத்தில் பூக்கும் பூ வெண்பூ என அறியப்படுகிறது. இது மட்டுமின்றி இப்பூவின் **“அகவிதழ்கள் கூடிக் குவிந்திருக்கும்”**[11]. இருப்பைப் பூ மிகுந்த இனிப்புச் சுவை உடையது. இதில் இருந்து வரும் சாறு பிசுபிசுப்புத் தன்மையுடன் இருந்திருக்கும். ஆகவே இப்பூவை யாரும் மாலையாகக் கோர்த்துச் சூடியிருக்கமாட்டார்கள் என்பதனையும் அறிய முடிகிறது.

### 4.4.3 ஓமை

ஓமை மரங்கள் உயர்ந்து வளரக் கூடியவை. படர்ந்த கிளைகளை உடையவை. வெயில் காலத்தில் இந்த மரத்தின் இலைகள் உதிர்ந்து இம்மரம் முழுவதும் குச்சி குச்சியாய் காட்சி தரக் கூடியதாக இருக்கும். இதன் அடிப்பகுதி சிறியதாக இருக்கும். நீர் வறண்ட நிலங்களில் வளரக் கூடியது ஓமைமரம். இது தன் பட்டைகளில் நீர்ச்சத்தினை நிரப்பி வைத்திருக்கும். இதனைப் பாலை நிலத்திலே வாழும் உயிரினங்கள் நீர்த் தேவைக்காகப் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகிறது. இம்மரத்தின் கிளைகளை யானைகள் பிடித்து இழுக்கும். மேலும் மரத்தையே குத்தி அதைச் சாய்க்க முற்படும் அளவிற்கு வலிமையுடையது என்பதை,

**'கானயானை தோனயந் துண்ட**
**பொரிதான் ஓமை வளிபொருநெடுஞ்சினை'** (குறுந்.79)

என்று குறுந்தொகையும்,

**'எளிதென உணர்ந்தனள் கொல்லோ முளிசினை**
**ஓமை குத்திய உயர்கோட்டு ஒருத்தல்'** (நற்.84)

என்னும் நற்றிணையின் பாடல் அடிகள் மூலம் உவர்மண் நிறைந்த புழுதிக் காட்டில் ஓமை மரங்கள் வளரும் தன்மை உடையன எனும் செய்தியை அறியமுடிகின்றது.

### 4.4.4 பாலை

பாலை நிலத்திலே பாலை என்ற பெயருடைய தாவரவகை இருந்துள்ளதை இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனால் பாலையால் நிலம்

பெயர் பெற்றிருந்தாலும் பாலைப்பூ பெரும்பாலும் “உரை ஆசிரியர்களால் பாலை நிலத்திற்கு உரியனவாக குறிக்கப்படவில்லை”[12] என்பதைக் கோவை இளஞ்சேரன் கூற்றுவழி அறிய முடிகிறது. அவர், “பாலைப்பூவை விட பாலை மரச் செய்திகள் அதிகமாக கிடைக்கின்றன”[13] என்றும் கூறுகிறார்.

பாலை மரம் மட்டுமின்றி கொடியுமாகும் என்பதைப் பிங்கலநிகண்டு, “சிவந்திக் கொடிக்கும் பாலை”[14] என்று கூறுகிறது.

திருப்பரங்குன்ற மலையைப் பெண்ணாக வருணிக்கும் பரிபாடலில்,

**‘நிரை ஏழ் அடுக்கியநீள் இலைப் பாலை**
**அரை வரை மேகலை’** (பரி.21)

என மலைக்குத் தழை உடையாகப் பாலையைக் குறிக்கின்றது.

பாலை மரம் ஏழு இலைகளைக் கொத்தாகக் கொண்டிருக்கும் என்று கோவை இளஞ்சேரன் கூறுகிறார்.

இதனை மேற்கூறிய பரிபாடலின் வரியும் “நிரை ஏழ் அடுக்கிய”[15] என்னும் அடி மூலம் உறுதிசெய்வதைக் காணலாம்.

யானையால் தாக்கப்பெற்று நாரின்றி வெண்மையாகத் தோன்றும் கிளைகளையும் குறடு போன்ற காய்களையும் உடையது பாலை மரம் என்பதனை,

‘மரற் புகாவருந்திய மாவெருத்திரலை
உரற் புகா லியானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ வரநிழல் துஞ்சும்’ (குறு.232)

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

பாலையின் அடிமரம் வெண்மையாகத் தோன்றும். எனவே இதனை ‘‘தந்தப்பாலை’’[16] என்றும் கூறுவர் எனத் தமிழ்ப்பேழை கூறுகிறது.

### 4.4.5 மராஅம்

மராஅம் மரம் பூவைத் தரும் பெரியமரமாகும். இம்மரம் ஆலமரத்தினைப் போன்று மிகவும் வலிமை உடையது என்று கலித்தொகை கூறுகிறது.

**‘ஆலமும் தொல்வலி மராஅமும்’** (கலி.101)

என்ற பாடல்வரி மூலம் ஆலமரத்திற்கு ஈடு இணையான வலிமையுடன் மராஅ மரம் விளங்கியது என்பதைத் தெளிவாக உணர முடிகின்றது. மராஅ மரத்தை ‘‘வெண்கடம்பு’’[17]என இலக்கியம் ஒரு பூக்காடு என்னும் நூல் கூறுகிறது.

இம்மரத்தின் வலிமையைக் கூறும் பொருட்டு ஐங்குறுநூறு, ‘‘மராஅ மரம் மள்ளர் போல வீரமாக நிற்கும். அதில் மகளிர் போல ஏறிபடரும் இவ்வாறு மராஅம்பூ பூக்கும் காலம் வேனிற்காலமாகும்’’[18] என்கிறது.

மராஅம் மரத்தின் அடிப்பகுதி கருமையாகவும் மேல்பகுதி செம்மை நிறத்துடனும் இருக்கும் என்பதை,

'------------------ --------- செங்கோல்

கருங்கால் மராஅத்து' (அகம்.127)

என்று மராஅம் மரத்தின் தண்டு மற்றும் கிளையின் தோற்றத்தையும் நிறத்தையும் அகநானூறு காட்டுகின்றது.

"மராஅம்பூ எனப்படும் வெண்கடப்பம்பூ அளவில் சிறியது"[19] "இப்பூ வெண்மையான நிறமுடையது இதனை வெண்மையான சுண்ணாம்புக்கு உவமையாகக் கூறுகிறார் மாமூலனார்"[20]

"மராஅம் பூவின் வெண்மையான நிறத்தை கதிரவன் ஒளியோடு வடமோதங்கிழார்"[21] என்பவர் ஒப்புமைப்படுத்திக் கூறுகிறார்.

மேலும் தண்ணீர்த் தாகம் கொண்டயானை மராமரத்து மலர்கள் உதிர்வதை மழைத்துளி விழுவதாக எண்ணி அங்குமிங்கும் அலைந்தது என்பதனை,

'கதரைபாய் வெண்திரைகடுப்ப பல உடன்
நிரைகால் ஒற்றலின் கல்சேர்பு உதிரும்
வரைசேர் யானைநீர் ஊழ் மலர்பெயல் செத்து
உயங்கல் யானை நீர் நசைக்கு அலமர' (அகம்.199)

என்று கல்லாடனார் கூறுகிறார்.

மேற்கூறியது மட்டுமின்றி,

'ஒருதழை ஒருவன் போல் இணர்சேர்ந்த மராஅமும்' (கலி.26)

என்ற கலித்தொகைப் பாடல் வரிமூலம் மராஅம் பூவை ஒரு காதணி கொண்ட வெண்மை நிறமுடைய பலராமனோடு ஒப்புமைப்படுத்திக் கூறுவதை அறிய முடிகின்றது.

மராஅம் மரத்தின் வெண்மையான பூக்கள் யானை மராமரத்தை உராய்கின்ற போதெல்லாம் மழைபெய்வதைப் போலக் கீழே சிதறி உழவரின் வெண்மையான நெல்லின் விதைபோலக் காய்ந்து கிடப்பதை,

**‘தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை**
**வேனில் ஓர்இணர் தேனோடு ஊதி**
**ஆராது பெயரும் தும்பி**
**நீர் இவ்வைப்பின் சுரன் இறந்தோரே’** (குறுந்.211)

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் மூலம் அறிய முடிகிறது.

மராஅம் பூ நெல்லினைப் போன்று மிகச்சிறிய பூ. இப்பூவானது மரத்தில் கொத்துக் கொத்தாகப் பூத்திருக்கும் என்பதனையும், இப்பூ உதிரும் போது மழை பெய்வது போன்று காட்சியளிக்கும் என்பதனையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

## 4.5 விலங்குகளும் பறவைகளும்

இயற்கை அமைப்பின்படி ஒவ்வொரு சூழலுக்கும் ஏற்ப நிலப்பரப்பில் உயிரினங்கள் வாழ்கின்றன. உதாரணமாக காடுகளில் வாழும் உயிரினங்கள் அடர்ந்த மலைப்பகுதிகளில் பெரும்பாலும் காணப்படுவதில்லை. பாலை நிலத்திற்குரிய விலங்காகக் கூறப்பட்டுள்ளனவற்றுள் யானை மற்றும் புலி ஆகியன குறிஞ்சித் திணையிலும் கூறப்பட்டுள்ளன. எனினும் பாலை

நிலத்திலே மட்டும் குறிப்பிட்ட விலங்குகளும் பறவைகளும் இருந்ததைக் காணமுடிகிறது.

### 4.5.1 செந்நாய்

இந்தியக் காடுகளில் பரவலாகக் காணப்படுவது செம்மை நிறம் கொண்ட நாய். இதனைச் செந்நாய் என்று சங்கஇலக்கியம் கூறுகிறது. இதன் விலங்கியல் பெயர் ‘கான் அல்பினஸ்’ என்பதாகும். இதன் உருவ அமைப்பினைச் சங்க இலக்கியங்கள் பலவாறு விளக்குகின்றன.

‘‘கழுத்தில் கவிழ்ந்து தொங்கும் படியான அடர்த்தியான மயிரினை உடையது செந்நாயாகும்’’[22] இதன் பற்கள் கூர்மையான ஊசியைப் போன்றும் ஒளியுடனும் காணப்பட்டதாகவும், பொன்னால் செய்ததைப் போன்று மின்னும் தன்மை உடையதாகவும் இருக்கிறது என்பதை,

**‘திரங்கு மரல் கவ்விய கையறு தொகுநிலை**
**அரம் தின் ஊசித் திரள் நுதி அன்ன**
**திண்நிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்’** (அகம்.199)

என்று கல்லாடனாரும்.

**‘பொன் வார்ந்தன்ன வைவால் எயிற்றுச்**
**செந்நாய் வெரீஇய புகர் உழை ஒருத்தல்’** (அகம்.219)

என கயமனாரும் கூறியிருப்பதன் வழிக் காணமுடிகிறது.

மேலும் செந்நாயின் கண்களானது பசுமையான கண்களை உடையது என்று அகநானூற்று வரிகள் கூறுகின்றன.

4.5.2 யானை

யானைகள் பெரும்பாலும் மலைப்பாங்கான பகுதிகளிலேயே வாழ்பவையாகும். அதனால் தான் யானை வாரணம், ஒருத்தல், களிறு எனப் பல பெயர்களில் அழைக்கப்படுகிறது எனலாம்.

யானையின் நிறம் கருமையானது என்பதைச் சூரியனைப் பாம்பு விழுங்கினால் எவ்வாறு இருளாக இருக்குமோ அதைப் போன்று கரிய நிறத்துடன் இருக்கும் என்றும், இடி போன்ற கடுமையான குரலை உடையது என்றும் அகம்.323 கூறுகின்றது.

யானைகள் அகலத்திலும் உயரத்திலும் பெரியவை என்பதால் அவற்றைச் சங்கப் புலவர்கள் மலை, குன்று ஆகியவற்றுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளனர்.

**'பிடி மடிந்து அன்ன குறும்பொறை மருங்கின்'** (அகம்.269)

என்னும் பாடல் வரி வழி யானையைக் குறும்பாறையுடன் ஒப்புமைப்படுத்திக் கூறியிருப்பதை அறிய முடிகிறது.

பாலை நிலத்தில் இருக்கும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட நடுகல்லுடன் யானையின் தும்பிக்கையை ஒப்பிட்டுக் கூறுவதை,

**'எழுத்துடை நடுகல் அன்ன விழு பிணர்**
**பெருங்கை யானை'** (ஐங்.352)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல்வரிகள் அடிமொழிகின்றன.

“யானையின் மருப்பு கூர்மையான முனையுடன் வெண்மை நிறத்தில் இருக்கும். இது சற்று மேல்நோக்கி வளைந்திருக்கும் தன்மையைப் பார்க்கும் போது பிறைநிலவைப் போல் காட்சி தரும்”[23] என அகமும் எடுத்துரைக்கின்றது.

### 4.5.3 புலி

இந்தியாவின் தேசிய விலங்கு புலியாகும். இது தற்பொழுது அழிந்து வரும் விலங்கினங்களுள் ஒன்றாக இருக்கிறது. இதனை இலக்கியங்கள் வேங்கை எனக் குறிப்பிட்டிருக்கின்றன. இப்புலியானது பூனைக் குடும்பத்தைச் சார்ந்த மிகப்பெரிய விலங்கினமாகும். இதன் விலங்கியல் பெயர் ‘டைக்-ரிச்’ என்பதாகும். இதில் வங்கப் புலி, சைபீரியன்புலி என பல வகைகள் காணப்படுகின்றன.

உணவுத் தேவைக்காக இது யானை, மான், காட்டுப் பன்றி போன்றவற்றை வேட்டையாடிக் கொன்ற நிகழ்வுகளைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. இவற்றுள் பெரும்பாலும் யானையுடன் புலி போராடிய இடங்களே அதிகமாக நற்றிணையில் பாடல் எண் 158,36 கூறப்பட்டிருக்கின்றன எனலாம்.

“வீரர்களைக் கண்டு அஞ்சாத புலியானது இனிய குட்டிகளை ஈன்றதால் சோர்ந்து பெண் புலியின் பசியினைப் போக்குவதற்காக நெற்றியில் புள்ளிகளை உடைய யானையினை ஆண்புலி பாய்ந்து கொல்லும்”[24] என்பதனைக் கள்ளம் பாளனார் கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது.

“ஆராவாரம் செய்யும் அலையைப் போல ஒலி எழுப்பும் தன்மையது புலி”[25] என விவரிக்கப்பட்டுள்ளது.

### 4.5.4 கழுகு

யாமரம் மற்றும் மராஅம் மரத்தின் உயர்ந்த கிளைகளில் கூடுகட்டி வாழும் பறவையினம் கழுகாகும்.

எருவை என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் Eagle என்று அழைப்பர். இது “அக்சி பிட்ரிடே” குடும்பத்தைச் சேர்ந்ததாகும். தற்காலத்தில் இருக்கும் கொன்றுண்ணிப் பறவைகளில் கழுகே பெரியது எனலாம். பெரிய கண்களும் கூரிய நுனியுடைய வளைந்த அலகும், வலுவான நகம் கொண்ட கால்களும், நீண்ட அகலமான இறக்கைகளையும் உடையது. தற்காலத்தில் அழிந்து வரும் பறவையினங்களில் ஒன்றாக கழுகு இருந்து வருகிறது. பாலை நிலத்தின் பறவைகளில் கழுகு சிறப்பிடம் பெறுகிறது.

ஆறலைத்தல் செய்பவரோடு போரிட்டுச் செத்தவர்களின் குருதியைக் குடித்துச் சிவந்த வாயினையும், வானத்தில் உள்ள சூரியன் மறையும் போது தோன்றும் இளஞ்சிவப்பு நிறச் செவியினையும் உடையது எருவை. இது யாமரத்தின் கிளைகளிலே இருக்கும் தன் குஞ்சுப் பறவைகளுக்கு உண்பிக்கும் ஊண் துண்டுகளில் இருந்து கீழே விழுபவை அவ்வழியே செல்லும் முதுமையான நரிகளுக்கு உணவாகும் என்று அகம் (193) கூறுவதிலிருந்து இதனை அறிந்து கொள்ள முடிகிறது.

### 4.5.5 குடிஞை

குடிஞை என்பது, 'ஆந்தை, கோட்டான்' என்ற பறவையைக் குறிப்பதாகும்.

ஆந்தை வட்டவடிவமான முகத்தையும், சிறிய அலகுகளையும், உருண்டையான பெரிய கண்களையும் உடைய பறவை இனமாகும். இதன் ஒலி கேட்போர் அஞ்சும் வண்ணம் இருக்கும். இப்பறவை இரவு நேரங்களில் மட்டுமே இரை தேடும். ஏனெனில் பகலில் இப்பறவைக்கு கண்ணின் பார்வை தெளிவாகத் தெரியாது.

வெகுண்டு எழும் குரலுடைய குடிஞைச் சேவலின் ஒலிகள் புற்கள் நீங்கிய வெடிப்பிடங்கள் தனித்திடச்சென்று, மலையிலிருந்து கற்கள் உருண்டு விழும் போது எழும் ஓசை போல மாறி ஒலிக்கும் என்பதனை,

**'உருத்தெழு குரல் குடிஞைச் சேவல்**
**புல் சாய்விடரகம் பலம்பவரைய**
**கல்லெறி இசையின் இரட்டும் ஆங்கண்**
**சிள் வீடு கறங்கும் சிறியிலை வேலத்'** **(அகம்.89)**

என்ற அகநானூற்றுப் பாடல்வரிகள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

எலி போன்ற உயிரினங்களை இப்பறவை உணவாக உட்கொள்ளும். மரம் மற்றும் கிணற்றின் பொந்துகளில் தற்காலத்தில் வசித்து வருகிறது.

ஆந்தை 'ஸ்ட்றைஜிபோர்மெஸ்' வரிசையைச் சேர்ந்தது ஆந்தைகளில் சில முழு இருட்டிலும் கூட ஒலியை அவதானித்து வேட்டையாடக் கூடியவையாகும்.

4.5.6 புறா

சமாதானம், காதல் இவற்றின் அடையாளச் சின்னம் புறாவாகும். இதனால் இதனை "காதல் மிக்க பறவை"[26] என்று ஆ.திருமலை முத்துசுவாமி அவர்கள் கூறியிருக்கிறார்.

வெப்பம் மிகுந்த பாலை நிலத்தில் இலை உதிர்ந்த மரங்கள் இருக்கும். இச்சூழ்நிலையில் அன்புகொண்ட இளைய பெண் புறாவானது வெப்பத்தால் தளர்ந்து துன்புற்று நிற்பதைப் பார்த்து பொறுத்துக் கொள்ளாத ஆண் புறாவானது தன் சிறகால் நிழல் கொடுத்து அதன் வருத்தத்தை ஆற்றும் என்பதனை,

'அன்பு கொள் மடப்பேடை அசை இயவருத்தத்தை
மென் சிறகால் ஆற்றும் புறவு' (கலி.11)

என்ற கலித்தொகைப் பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

களர் நிலத்தில் ஓங்கிய கள்ளியின் தலையில் சுள்ளிகளை அடுக்கி அக்கூட்டில் முட்டையிட்டு குஞ்சுபொரித்த பேடையாகிய புறாவிற்கு உணவு உண்ணும் பொருட்டு முதிர்ந்த பாழ்நிலத்திலே தானே விளைந்து உதிர்ந்த நெற் கதிர்களை ஆண் புறா கொண்டு வந்து ஊட்டுவதை,

'பைப் புறப் புறவின் செங்காற் சேவல்
களரி ஓங்கிய கவை முடக்கள்ளி
முளரி அம்குடம்பை ஈன்ற இளைப்பட்ட
உயவு நடைப்பேடை உணீஇய மன்னர்
முனைகவர் முதுபாழ் உகுநெற்பெறூஉம்' (நற்.384)

என்று பாலைப் பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார்.

புறா ‘கொலம்பிடே’ குடும்பத்தைச் சார்ந்தது. உலகெங்கும் அதிகமாகக் காணப்படும் பறவை இனங்களில் ஒன்றாகும். உருண்டை வடிவமான தலைப்பகுதியையும் முன்புறத்தில் கூர்மையான அலகும் உடையவை. இதன் வால்பகுதியில் எண்ணெய்ச்சுரப்பிகள் உண்டு. இவை விதைகள், பழங்கள், தானியங்கள் போன்றவற்றை உண்ணும். மன்னர்கள் புறாக்களைக் கடிதப் போக்குவரத்திற்காக உபயோகப்படுத்தியதை அறிய முடிகிறது. இவை செல்லப்பறவையாகவும் வளர்க்கப்படுகின்றன.

### 4.5.7 கணந்துள்

கணந்துள் பறவை மனிதர்களுக்கு அஞ்சும் தன்மை உடையது. அழகிய சிறகினையும் நெடிய காலினையும் உடையது. கணந்துள் பறவை பற்றிய செய்திகள் சங்கப் பாடல்களில் இரண்டு பாடல்களில் மட்டுமே கூறப்பட்டுள்ளன. (நற்.212, குறு.350)

பறவைகள் மற்றும் விலங்குகளைப் பிடிக்க வைத்திருக்கும் வலையில் அகப்படாமல் இருக்கக் கணந்துள் ஒலியெழுப்பும். அத்தகைய ஒலியைக் கேட்டு பாலைநிலத்தின் வழியே செல்வோர் எயினர்கள் இருக்கும் இடங்களை அறிந்து அதனை விட்டு விலகிச் செல்வர் என்பதனை,

**‘ஆற்று அயல் இருந்த இருந்தோடு அம்சிறை**
**நெடுங்கால் கணந்துள் ஆள் அறிவுறீஇ**
**ஆறு செல் வம்பலர் படைதலை பெயங்கும்**
**மலையுடைக் காணம் நீந்தி**
**நிலையாப் பொருட் பிணிப் பிரிந்திசினோரே’** (குறுந்.350)

என ஆலந்தூர் கிழார் கூறுவதில் இருந்து அறியமுடிகின்றது.

இத்தகைய கணந்துள் பறவை பயந்து எழுப்பும் ஓசையானது அச்சுரத்தின் வழியே செல்வோர் களைப்புத் தெரியாமல் இருக்க இசைக்கும் இசையோடு சேர்ந்து ஒலிப்பதை,

> **‘பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ**
> **நெடுங்கால் கணந்துள் அம்புலம்பு கொள்தெள்வின்**
> **சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்**
> **நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்’** (நற்.350)

என குடவாயிற் கீரத்தனார் கூறுவதில் இருந்து அறியமுடிகின்றது.

ஆகவே கணந்துள் பறவை மிகவும் பயந்ததன்மை உடையது என்பதனையும், தற்காலத்தில் இதனை ஆள்காட்டிப் பறவை என்று மக்கள் கூறுவதையும் அறிய முடிகின்றது.

## 4.6 திருமணமுறைகள்

பாலை நில மக்களின் திருமண முறைகள் பற்றிச் சங்க இலக்கியங்களில் நேரடியாகச் சுட்டப்படவில்லை. ஒன்றிரண்டு இடங்களில் மட்டுமே சில குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. எனினும் பாலை நில மக்களாகிய எயினர்களும், மழவர்களும், மறவர்களும் ஒருதார மணத்தையே விரும்பியுள்ளனர் என்பதைத் தான் விரும்பிய தலைவியுடன் உடன்போக்குச் சென்றதை வைத்து அறியமுடிகின்றது. அதுமட்டுமின்றி மருத நிலத்தில் காணப்படும் பரத்தை பற்றிய செய்திகள் பாலை நிலத்தில் கூறப்படவில்லை. ஆகவே பாலைநில மக்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலையிலேயே

வாழந்துள்ளனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் நமக்குப் பறை சாற்றுகின்றன எனலாம்.

குறுந்தொகையில் பாடல் எண் 229இல் சிறுவயதில் விளையாடிய தலைவனும் தலைவியும் ஊரார் பார்க்கும் படி திருமணம் செய்து கொண்டனர் என்பதை,

**'இவனி வளைம்பர்ல் பற்றவும் இவளிவன்**
**புன்றலையோரி வாங்குநாள் பரியவும்**
--------- -------------- ----------- -------------
------- ----------------- ------------ -------------
**துணை மலர்ப் பிணைய வன்னிவிவர்**
**மண மகிழ் இயற்கை காட்டியோயே'** (குறுந்.229)

எனக் கூறுகிறது. தலைவன் தலைவியின் கூந்தலைப் பிடித்து இழுக்கவும் இவள் இவனது தலைமுடியை வளைத்து இழுத்தபின் ஓடவும் செவிலித்தாய் இடைமறித்து தடுக்கவும் சிறுசிறு சண்டைகள் போட்டவர்கள். மலர்கள் பிணைந்த இரட்டை மாலை போன்று இருவரும் மணம் முடித்து வாழும் வாழ்க்கை உண்டாக்கினாய் கடவுளே என்று கூறுவதில் இருந்து அறியமுடிகின்றது.

மற்றொரு பாடலில் தலைவி தலைவனுடன் கொண்ட நட்பானது கோசரது நன்மையை உடைய மொழி, உண்மையாவதைப் போல, முரசு முழங்கவும், சங்கு ஒலிக்கவும், மணம் செய்தலால் இவர்களின் நட்பு உண்மை ஆகியதை,

‘பறைபடப் பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல’ (குறுந்.15)

என்று அவ்வையார் கூறுவதில் இருந்து திருமணத்தின் போது முரசு மற்றும் சங்கு போன்ற இசைக்கருவிகள் வாசித்த நிகழ்வை அறியமுடிகின்றது.

தலைவி தான் விரும்பிய தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்டாள். இதனை அறிந்த செவிலித்தாய் தன் மகள் தன் தலைவனை நேசிப்பதை முன்பே சொல்லியிருந்தால் சுற்றத்தார் எல்லோரும் பார்க்கும்படி திருமணம் செய்து கொடுத்திருக்கலாமே என்று புலம்புவதை,

‘தன்னமர் ஆயமொடு நன் மணநுகர்ச்சியின்
இனி தாங் கொல்லோ தனக்கே பனிவரை’ (ஐங்.379)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் எடுத்துரைப்பதன் வழி காணமுடிகிறது.

### 4.7 சமையல் முறை

அறுபத்தி நான்கு கலைகளுள் சமையல் கலையும் ஒன்றாகும். ஒவ்வொருவர் சமையலிலும் வேற்றுமைகள் காணப்படும். பாலை நில மக்களாகிய எயிற்றியர், குரம்பை எனப்படும் கூரைக் குடிசை வீடுகளில் வாழ்பவர்கள். அவர்கள் கரம்பை நிலத்தைக் குத்தி எடுத்த புல்லரிசியை எடுத்துக் கொண்டு தன் குடிசைக்கு வந்த எயிற்றி, தன் வீட்டில் உள்ள முற்றத்தில் விளாமரத்து நிழலில் உள்ள நிலப்பாறையில் அமைந்திருந்த உரலில் நெல்லைப் போட்டு உலக்கையால் குற்றி அதனை அரிசியாக்கி பயன்படுத்தி இருக்கிறார்கள். அதன் பின்பு அம்மரத்தின் மற்றொருபக்கத்தில் விரிக்கப்பட்டிருந்த வலையில் விழுந்த பறவையைப் பிடித்து சுத்தம் செய்து

பக்குவமாகச் சமைத்திருக்கிறார்கள். மேலும் நீண்ட கல்லூற்றுக் கிணற்றைத் தோண்டி முகந்த ஊற்று நீரில் உலைவைத்து, முரமுரப்பான வாயை உடைய பழைய பானை அதனை விறகடுப்பில் ஏற்றி புலவு மற்றும் அரிசியை ஒன்றாகச் சேர்த்து பக்குவமாகச் சமைத்திருக்கின்றனர். இதனை,

**'பார்வை யாத்த பறைதாள் விளவி**
**னீழன் முன்றினி லவுரற் பெய்து**
**குறுங்கா முலக்கை யோச்சி நெடுங்கிணறு**
**வல்லூற்றுவரி தோண்டித் தொல்லை**
**முரவு வாய்க் குழிசி முரியடுப் பேற்றி**
**வாராதட்ட வாடுன் புழுக்கல்'** (பெரும்.95-100)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் தெளிவுப்படுத்துகின்றன.

தற்காலத்திலும் இடத்திற்கு இடம் நாட்டிற்கு நாடு உணவு வேறுபடுவதைக் காணமுடிகின்றது. தமிழ்நாட்டில் பெரும்பாலும் அரிசி வகை உணவுகளே முக்கியத்துவம் பெறுகின்றன.

### 4.7.1 பாலை நில மக்களின் உணவு

மனிதன் உயிர் வாழ இன்றியமையாத பொருள் உணவாகும். பண்டைய மனிதனின் முதல் தேடல் உணவுத் தேடலாகவே இருந்தது. மனிதன் முதலில் பழங்கள் மற்றும் காய்கறிகளைச் சமைக்காமலே உண்டான். நெருப்பினைக் கண்டறிந்தபின் சமைத்து உண்ணக் கற்றுக் கொண்டான். இதற்குப் பின்பே பல்வேறு வகையான உணவுகள் தோன்றின எனலாம்.

ஓய்மாநாட்டு பாலை நில எயினர்கள் இனிய புளியங்கறி கலந்த சோற்றையும் ஆமாவின் சுட்ட இறைச்சியையும் உண்டார்கள் என்பதை,

**‘எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு**
**தேமாமேனிச் சில்வளை ஆய்மொடு**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவீர்’** (சிறுபாண்.175-177)

என சிறுபாணாற்றுப்படை வரிகள் மொழிகின்றன.

### 4.7.2 புல்லரிசி உப்புக் கண்டம்

தொண்டை நாட்டுப் பாலைநிலமக்கள் புல்லரிசிச் சோறுடன் உப்புக் கண்டத்தையும் சமைத்து உண்டதை,

**‘வாரா தட்டை வாடுன் புழுக்கல்’** (பெரும்.100)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் மூலம் அறியமுடிகின்றது.

### 4.7.3 சிவந்த சோறும் உடும்புப் பொரியலும்

எயினர்கள் மேட்டு நிலத்தில் விளைந்த ஒருவகை நெல்லிலிருந்து அரிசி எடுத்துச் சோறாக்கி அதனுடன், நாய் பிடித்து வந்த உடும்பின் பெரியலோடு உண்டனர் என்பதை,

**‘சுவல் விளை நெல்லின் செவ்வ விழ்ச் சொன்றி**
**ஞமலி தந்தமனவுச் சூலுடும்பின்’** (பெரும்.130-133)

எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

பாலை நில மக்களாகிய மறவர்கள், புலி வேட்டையாடி உண்ட யானையின் ஊனைக் கம்புகளில் மாட்டி, பாலைநில வழியே செல்லுபவர்கள் சமைத்த பின் விட்டுச் செல்லும் தீயில் சுட்டு உண்டதை,

‘புலி தொலைத்துஉண்ட பெருங்களிற்று ஒழிஊன்
குலி கெழு மறவர் காழ் கோத்து ஒழிந்ததை
ஞெலி கோற் சிறு தீ மாட்டி ஒலி திரைக்’ (அகம்.169)

எனத் தொண்டியாமூர்ச் சாத்தனார் கூறுவதில் இருந்து அறிய முடிகின்றது. மேலும் இவர்கள் முள்ளம் பன்றியை உணவாக்கிக் கொண்டதை,

‘முளமா வல்சி எயினர் தங்கை’ (ஐங்.364)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிமூலம் அறியமுடிகிறது.

### 4.7.4 விருந்தோம்பல்

தமிழரின் உயரிய பண்பாடு விருந்தோம்பல் முறையாகும். வருபவர் யாராக இருப்பினும் அவருக்கு இக்காலத்திலும் வாழை இலையில் விருந்து வைத்து உபசரிப்பதைத் தமிழக மக்களிடம் காணமுடிகின்றது. மனிதநேயத்தின் வெளிப்பாடாகப் பசியென வருபவருக்கு உணவளித்தலை,

‘நீர் இன்றி அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே’ (புறம்.18)

என்ற புறநானூற்று வரிகள் உணர்த்துகின்றன.

வீட்டிற்கு வரும் விருந்தினரை வரவேற்றலும் வழியனுப்புதலும் சிறப்புடன் கொண்டாடப்பட்டன. இதனை வள்ளுவர்,

'செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பார்
நல் விருந்து வானத்தவர்க்கு' (குறள்.86)

என்று விளக்குகிறார்.

பாலை நிலம் வறட்சியானது. உணவுப் பொருட்கள் குறைவாக கிடைப்பதற்கான வாய்ப்புகள் அதிகம். எனினும் பாலை நிலமக்கள் தங்களுக்குக் கிடைத்த உணவுப் பொருள்களை அவ்வழியே வரும் பாணர்களுக்குக் கொடுத்து உபசரித்துள்ளனர். செந்நெல் அரிசியால் சமைத்த சோற்றுடன் முள்ளம்பன்றிக் கறிக்குழம்பும், உடும்புப் பொரியலும் பாணர்கள் உண்டதைப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது. இதனை.

'களர் வளரீந்தின் தாழ்கண்டன்ன
சுவல் வினை நெல்லின செவ்வழிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச் சூலுடும்பின்
வறைகால் யாத்தது வயின்றொறும் பெறுகுவீர்' (பெரு.130-133)

எனக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுகிறார். இதில் கூறப்படும் செந்நெல் அரிசி என்பது மேட்டுநிலத்தில் விளையும் ஒருவகை நெல். இது களர் நிலத்தில் விளையும் ஈந்தின் விதை போன்று இருக்கும்.

புல்லரிசிச் சோறுடன் சமைத்த உடும்புக் கறியையும் பாலை நில மக்கள் தேக்கு இலையில் வைத்து, வரும் விருந்தினருக்குக் கொடுத்துள்ளதை,

'செவ்வரை நாடன் சென்னிய மெனினே
தேய்வ மடையிற் றேக்கிலைக் குவைஇநும்
பைதீர் கடும்பொடு பதமிகப் பெறுகுவீர்' (பெரும்.103-105)

என்னும் பெரும்பாணாற்றுப்படைப் பாடல்வரிகள் கூறுவதில் இருந்து பாலை நிலமக்கள் வரும் விருந்தினரை உபசரிக்கும் தன்மையை அறியமுடிகிறது.

தமிழர் பண்பாட்டில் விருந்தோம்பல் முறை சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இருந்து வந்துள்ளதை இதன் மூலம் அறியமுடிகின்றது.

### 4.8 விழாக்கள்

விழாக்கள் மனித சமூகத்தின் மகிழ்ச்சியைப் பறைசாற்றுபவை. அவர்களின் பண்பாடு, கலாச்சாரம் ஆகியன அவர்கள் கொண்டாடும் விழாக்களின் மூலமே தென்படுகின்றன. ஒரு சமுதாயத்தில் கொண்டாடப்படும் விழாக்களால் ஒற்றுமை பலப்படுவதோடு அந்தச் சமூகத்தைப் பற்றி முழுவதும் தெரிந்து கொள்வதற்கான வாய்ப்புகளும் ஏற்படுகின்றன.

தற்காலத்தில் மட்டுமின்றி சங்ககாலம் முதற்கொண்டு பல்வேறு விழாக்கள் கொண்டாடப்பட்டு வந்துள்ளன. உதாரணமாக தைந்நீராடல், கார்த்திகை விழா, உள்ளி விழா எனப் பல விழாக்களைக் கூறலாம். இதைப்போன்றே சங்க காலத்தில் பாலைநில மக்களும் பங்குனி விழா, கார்த்திகை விழா, காமன் விழா, பூந்தொடை விழா எனப் பல்வேறு விழாக்களைக் கொண்டாடியதற்கான குறிப்புகள் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் காணக்கிடைக்கின்றன.

#### 4.8.1 பூந்தொடை விழா

பூந்தொடை விழா என்பது இக்காலத்தில் பரதநாட்டியம் அரங்கேற்றுவதைப் போன்று பண்டைக் காலத்தில் வில் பயற்சி பெற்ற

வீரர்களுக்குக் குறிபார்த்து அம்பு எய்யும் விழாவை நடத்தியுள்ளனர். இதுவே பூந்தொடை விழா என்றழைக்கப்பட்டுள்ளது.

பாலை நில மறவர்கள் வீரம் மிக்கவர்களாகத் திகழ்ந்துள்ளனர். அத்தகைய வீரர்களின் விழாவாகப் பூந்தொடைவிழா காணப்பட்டுள்ளது. பாலை நில மறவர்களின் இளம் பிள்ளைகளும், போர்ப் பயிற்சி பெற்ற வீரமறவர்களாய்ச் சிறந்து விளங்கியுள்ளனர். அவ்வாறு பயிற்சி பெற்ற பின்பு அதனை அரங்கேற்றும் விழாவைக் கொண்டாடியுள்ளனர். இதுவே பூந்தொடை விழா என்று அழைக்கப்பட்டது. இதற்கான தலைநாள் எனப்படும் முதல் நாளில் அரங்கேற்றம் நிகழும் இடம் வெகுசிறப்பாக அலங்கரிக்கப்பட்டுப் பொலிவுற்றுத் திகழ்ந்திருக்கிறது. அவ்விடத்தின் எழிலை,

**‘வார் கழற் பொலிந்த வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநாளன்ன**
**தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றம்’ (அகம்.187)**

என்ற அகநானூற்றுப் பாடல்வரிகள் விளக்குகின்றன.

சினந்து எழுந்து வெம்மையான போர்முனையை அழித்த குதிரைகளையும், நீண்ட கழலால் பொலிவுற்ற கால்களையும் தறுகண்மையுடைய மழவர்கள் கொண்டாடும் பூந்தொடை திருவிழாவின் தலைநாள் போன்று நம்மணல் பரப்பிய முற்றம் உள்ளது எனத் தலைவி கூறுகிறாள்.

இவ்விழாவை வில் ஏந்திய வீரர்கள் விஜயதசமி நாளில் கொண்டாடினர் என்று கம்பர் தன்னுடைய நூலான சிலையெழுபதில் ‘தமிழர்கள் விஜயதசமி நாளில் அம்பு தொடுக்கும்’என்று நிகழ்வைக்

குறிப்பிடுகிறார். கருணாகரத் தொண்டைமான் விஜயதசமி நாளில் வில்லேந்திச் சென்றார் என்று ஆசிரியர் கூறுகிறார்.

**“வின் மங்கலம் பொருந்தும் விறற்றசமி நாட்கொளினே”**[27]

என்ற சிலையெழுபதுவரி கூறுகிறது.

இன்றளவும் இந்தப் பூந்தொடைவிழாவைக் ‘கொங்கு ஒடுவங்க நாட்டு’ தொல்குடி வேட்டுவ இனத்தினர் வீரப் பூந்தொடை விழவு என்னும் வீர வில்விழாவை விஜயதசமி நன்னாளில் கொண்டாடுவதாகச் செவிவழிச் செய்திகள் காணப்படுகின்றன. முன்னோர்கள் பயன்படுத்திய வில், வாள், அம்பு போன்ற கருவிகளுக்குப் பூசை மற்றும் வழிபாடுகள் செய்து வணங்கியதையும் கேள்வியுற முடிந்ததையும் அறிய முடிகிறது.

### 4.8.2 இளவேனிற் விழா

பண்டைய காலத்தில் இளவேனிற் காலத்தில் காமனுக்கு விழா கொண்டாடியுள்ளனர். இதுகுறித்த செய்திகள் கலித்தொகையில் காணக்கிடைக்கின்றன. தற்காலத்தில் காதலர்கள் காதலர்தினம் கொண்டாடுவதைப் போன்று சங்ககாலத்தில் இளவேனில் விழாவைக் கொண்டாடியுள்ளனர். இளவேனிற் காலம் என்பது பங்குனி மாதத்தின் தொடக்கத்தைக் குறிக்கும். இக்காலத்தில் காமனுக்கு விழா கொண்டாடியுள்ளனர். **“காமன் காதலின் கடவுளாகப் பார்க்கப்படுபவர்”**[28]எனப் பரிபாடல் கூறுகிறது.

தலைவன் விரைந்து வந்ததை அறிந்த தோழி, தலைவியிடம், ‘‘தாங்கள் இவ்விழா நடைபெறுவதைக் கண்டு மிகுந்த துன்பம் கொள்வீர்கள் என அறிந்தே தலைவர் தேரினை விரைவாகச் செலுத்தி வந்ததாக’’[29] கூறுகிறாள். இதனை வில்விழா என்று கலித்தொகை 35வது பாடல் வரி கூறுகின்றது.

### 4.8.3 பங்குனி விழா

பங்குனி மாதத்தில் பங்குனி விழா கொண்டாடியதற்கான குறிப்புகள் அகநானூற்றில் கூறப்பட்டுள்ளன. இன்றளவும் பங்குனி மாதத்தில் பங்குனி உத்திரம் விழா கொண்டாடப்படுவதைக் காணமுடிகின்றது. இதனை,

**‘பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்’** (அகம்.137)

என்ற அகநானூற்றுப் பாடல் வரி மூலம் காணமுடிகிறது.

### 4.8.4 துடிக் கூத்து

மனிதன் மகிழ்ச்சியாக இருக்கும் போது அதன் வெளிப்பாடாக நடனம் ஆடுகிறான். இதுவே பிற்காலத்தில் கூத்துக்கலையாக வளர்ச்சி பெற்றது எனலாம். ஆடல்கள், பார்ப்பவரை மகிழ்ச்சி அடையச்செய்யும். இதில் ஆடல் மட்டுமின்றி ஏதேனும் ஒரு கதையும் தழுவி வரும். பாலை நிலமக்கள் துடிக்கூத்து ஆடியதைப் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது.

பாலை நில மறக்குலத் தலைவன் ஒருவன் துடிக்கூத்தாடியதை,

**‘கேளா மன்னர் கடாபுலம்புக்கு**
**நாளாத நது நளவு தொலை தெலைச்சி**

இல்லடு கள்ளின் தோப்பி பருகி
மல்லின் மன்றத்து மதவிடை கெண்டி
மடிவாய்த் தன்மை நடுவர் சிலைப்ப
பகன் மகிழ்தூங்கும் தூங்கா விருக்கை' (பெரும்.140-146)

என்ற பாடல்வரிகள் விளக்குகின்றன.

மறக்குலத் தலைவன் பகைவரை, அவர்களது காவலுடைய நிலத்திலேயே வைத்துத் தோற்கடித்து, அவர்களின் ஆநிரையைக் கவர்ந்து சென்று கள்ளிற்கு விலைபேசி விற்று, அதில் வலிமையுள்ள ஏற்றை அறுத்துத் தின்று தோலை மடித்து மத்தளம் செய்திருக்கிறான். அதனை இடத்தோளில் எடுத்து முழக்கி வலப்பக்கம் வளைந்து பகற்பொழுதிலேயே மகிழ்ச்சியுடன் ஆடியிருக்கிறான் என்று கூறுகிறது. மேலும் துடிக் கூத்தானது இசைக் கருவியைத் தழுவி ஆடும் கூத்து எனவும் பகற்பொழுதில் பாலைநில வெற்றிமறவர்கள் ஆடியது எனவும் அறியமுடிகின்றது.

இதனைத் தொல்காப்பியம், புறத்திணையியலில் போர்க்கூத்து வகையைக் சார்ந்தது எனவும், துடி எனும் கருவியை இசைத்து ஆடுவது எனவும் கூறுகிறது. இதனை,

'மறங்கடைக் கூட்டிய துடிநிலை' (தொல்.புறத்.47)

எனக் கூறுவதில் இருந்து அறியமுடிகின்றது.

இன்றளவும் ஒருசில இடங்களில் தெருக்கூத்து நிகழ்த்தப்படுவதைக் காணமுடிகிறது. ஊடகங்களும் தெருக்கூத்து என்னும் கலையை மக்கள் மத்தியில் கொண்டு செல்லும் பணியைச் செய்வதை அறியலாம்.

உதாரணமாக மக்கள் தொலைக்காட்சியில் நடைபெறும் தெருக்கூத்து என்ற நிகழ்ச்சியைக் கூறலாம்.

### 4.8.5 கார்த்திகை விழா

தமிழர்கள் வாழ்வில் விளக்கு முக்கிய இடம் வகிக்கிறது. தமிழர் பண்பாட்டின் ஓர் அடையாளமாகவும் விளங்குகிறது. தமிழர்களின் வழிபாட்டு முறைகளில் மங்கள அறிகுறியாக விளக்கு உள்ளது. மனைவி இல்லத்தின் விளக்காக விளங்குவதைப் புறநானூறு கூறுகிறது. இதனை,

**'மனைக்கு விளக்காகிய வாள்நுதல்'** (புறம்.314)

என ஐயூர் முடவனார் கூறுகிறார்.

கார்த்திகைத் திருவிழா கார்த்திகை மாதம் முழுமதி ஆனது, அறுமீனைச் சேர்ந்த நாளில் நள்ளிரவில் தெருவெங்கும் விளக்குகளை வரிசையாக ஏற்றிவைத்து மலர் மாலைகளைத் தொங்கவிட்டு வழிபட்டுள்ளனர் என்பதை,

**'மழை கால் நீங்கியமாக விசும்பிற்**
**குறுமுயல் மறுநிறங்கிளிர மதிநிறைந்து**
**அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்**
**மருகு விளக்குறுத்து மாலை தூங்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவுடன் அயர வருகதில் லம்ம'** (அகம்.141)

என்ற நக்கீரரின் பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன. இதன் வழி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் மக்களால் சீரும் சிறப்புடன் கார்த்திகை விழா கொண்டாடப்பட்டு வந்துள்ளதை அறியமுடிகின்றது.

பண்டைத் தமிழ் மக்கள் கொண்டாடி வரும் இத்தகைய விளக்கு விழாவிலிருந்து அவர்கள் இறைவனை ஒளி வடிவமாகக் கொண்டு வழிபட்டுள்ளனர் என்பதை அறியமுடிகிறது. கார்த்திகை விழா சங்ககால மக்களின் வழிபாடாக இருந்ததனை,

**‘இலை இல மலர்ந்த முகைஇல் இலவம்**
**கலிகொள் ஆயம் மலிபுதொகுபு எடுத்த**
**அம்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி’** (அகம்.11)

என ஔவையாரும்,

**‘பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்**
**இலை இல மலர்ந்த இலவமொடு’** (அகம்.185)

எனப் பாலைபாடிய பெருங்கடுங்கோவும் கூறுகிறார்கள்.

இலவ மரத்தில் இலையே இல்லாமல் மலர்கள் மட்டும் பூத்துள்ளன. இத்தகைய காட்சியானது கார்த்திகை விளக்குகளை ஏற்றி வைத்ததைப் போன்று காட்சி தருகிறது என்று கூறுவதில் இருந்து பண்டைய கால மக்கள் கார்த்திகை விழாவினைக் கொண்டாடியுள்ளதைக் காண முடிகிறது.

கார்த்திகை நாளில் விளக்கேற்றி வைத்தால் எங்கிருந்து பார்த்தாலும் வரிசையாகவே இருக்கும் என்பதனை, நீண்ட விளக்குகளின் வரிசைபோல கோங்கு மரங்களின் பூக்கள் வரிசையாகவும் ஒழுங்காகவும் காட்சியளிப்பதை,

'அறுமீன் பயந்த அறம் செய்திங்கள்
செல் சுடர் நெடுங்கொடி போல
பல் பூங் கோங்கம் அணிந்த காடே' (நற்.202)

எனப் பாலைப் பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார்.

இதன் மூலம் பண்டைய கால பாலை நில மக்கள் கார்த்திகை விழாவினைச் சிறப்புடன் கொண்டாடியுள்ளதை அறிய முடிகின்றது. மேலும் அகநானூற்றில் 141வது பாடலில் இவ்விழா 'மூதூர்' மக்களால் கொண்டாடப்பட்டதற்கான குறிப்புகளும் காணப்படுகின்றன.

4.9 பழக்கவழக்கங்கள்

பழக்கம், பழக்கவழக்கம் என்ற சொற்கள் இன்றளவும் மனிதரிடையே பெரிதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. பழக்கவழக்கம் என்பது தனி மனிதனின் செயற்பாடாகும். இதனை மற்றவரும் பின்பற்றுவார்கள். ஓர் இனத்தில் வாழும் மக்களின், பலருடைய மனம் பலவிதமான விருப்பு, வெறுப்புகளைக் கொண்டமைகிறது. ஒரு மனிதனுடைய சொந்த விருப்பு, வெறுப்புகளே பழக்கவழக்கம் ஆகின்றன. அதே போன்று ஒரு குழுவில் வாழும் மக்களின் விருப்பு வெறுப்புகள் ஒன்று போல் காணப்படுவதற்கும் வாய்ப்புகள் அதிகமாக உள்ளன. உதாரணமாகச் சிலர் காலையில் எழுந்த உடன் பல்துலக்குவர். சிலர் காபி அல்லது தேநீர் அருந்திய பிறகு பல்துலக்குவதை வழக்கமாகக் கொண்டிருப்பர். இவ்வாறு சமூகத்தில் ஒற்றுமையான மற்றும் வேறுபட்ட பழக்கவழக்கங்களை மனிதர்கள் கொண்டிருப்பதை அறிய முடிகிறது.

வழக்கம் என்ற சொல் தொல்காப்பியத்தில் பல்வேறு இடங்களில் இடம்பெற்றுள்ளது. சான்றாக,

'முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை' (தொல்.நூற்.980)

கடல் கடந்து செல்லும் வழக்கம் பண்டைக் காலத்தில் கிடையாது என்பதைத் தொல்காப்பியர் கூறுகிறார். அதனைச் சங்க இலக்கியங்களிலும் காண முடிகின்றது. தலைவியை விட்டுத் தலைவனே பொருள் தேடவும், போர் செய்யவும் பிரிந்து சென்றுள்ளான். மகளிர் அவ்வாறு செல்லாததற்கான வழக்கத்தை அச்சமுதாயம் மட்டுமின்றி பிற சமுதாயங்களும் கடைபிடித்திருக்கலாம் என்பதை அறிய முடிகின்றது.

இக்காலத்திலும் சரி பெரும்பாலும் நாடுவிட்டு நாடு ஆடவர்களே வேலைபாக்கச் செல்கின்றனர். மகளிர் குறைவாகவேச் செல்லுவதற்கான வாய்ப்புகள் உள்ளன. இத்தகைய பழக்கவழக்கங்கள் சமுதாயத்தின் பண்பாட்டை வெளிப்படுத்தும் வாயில்களாக அமைந்துள்ளன எனலாம்.

பாலை நில மக்களிடமும் இவ்வாறான பழக்கவழக்கங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் முதன்மையானதாகக் கருதப்படுவது இறந்தோரை இலைதழைகள் மற்றும் கற்களைக் கொண்டு மூடி பதுக்கையமைத்தலாகும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு நிலங்களில் காணப்படாத ஒரு பழக்கம் பாலை நில மக்களிடம் மட்டுமே காணப்படுகின்றது. சான்றாக

'கொடுமரம் தோய்த்தார் பதுக்கை' (கலி.12)

எனப் பாலைக்கலி கூறுகின்றது.

வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு நடப்படும் நடுகல்லைத் தெய்வமாக எண்ணி அதற்குக் காட்டு மல்லிகைப் பூக்களைக் கொண்டு நாட்பலியிட்டு வழிபாடு செய்துள்ளனர் ஆறலைக் கள்வர்கள். இதனை,

'உயர்பதுக்கு இவர்ந்த ததர்கொடி அதிரல்

நெடுநிலை நடுகல்நாட் பலிக் கூட்டும்' (அகம்.289)

என அகநானூறு கூறுகிறது. இறந்தவர்களைத் தெய்வமாக எண்ணி வழிபடும் பழக்கத்தைப் பாலைநிலமக்களிடமே காண முடிகின்றது. இதற்குப் பின்பு வந்தவர்களும் இதனையே வழக்கமாகக் கொண்டிருக்க வேண்டும். இன்றளவும் இறந்தவர்களைத் தெய்வமாக நினைத்து அவர்களுக்கு விருப்பப்பட்ட உணவு, உடை ஆகியவற்றை வைத்து வழிபடுவதைத் தமிழக மக்களிடம் காணமுடிகிறது. தற்காலத்தில் நடைபெறும் சிறுதெய்வவழிபாடுகளும் இதனை ஒட்டியே அமைந்துள்ளன.

பாலைநில மக்கள் வழிப்போக்கரிடம் இருந்து கொள்ளை அடித்த பொருட்களைத் தாம் மட்டும் வைத்துக் கொள்ளாமல் அதனைச் சுற்றத்தார் அனைவருக்கும் பங்கிட்டுக் கொடுத்துள்ளதை அவர்களது பழக்கமாக வைத்திருந்துள்ளதை,

'அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிக்

கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ' (அகம்.167)

என கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவதில் இருந்து காண முடிகின்றது.

வீரக்குடிகளாய் பிறந்த பாலை நில மறவர்கள், “தாங்கள் நோய்வாய்ப்பட்டு இறப்பினும் குழந்தை இறந்தே பிறந்தாலும் வாளால் மார்பில் கீறி புதைப்பதையே வழக்கமாகக் கொண்டிருந்தனர்”[30]

தலைவன் தலைவியின் மார்பில் தொய்யில் எழுதுவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தனர். “தலைவியின் மார்பில் மலர்களை அப்பிவிட்டதைப் போன்று இருந்தது, தலைவன் தொய்யில் எழுதியது”[31] என்று தோழியிடம் தலைவி கூறுகிறாள்.

### 4.10 நம்பிக்கைகள்

மனிதனுக்கு அடிப்படையான குணங்களில் ஒன்றுதான் நம்பிக்கை. நம்மால் இதனைச் செய்து முடிக்க முடியும் என்று நம்புவதே அவன் வாழ்வில் வெற்றியடையச் சிறந்த வழிமுறையாகும். சமூகத்தால் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்பட்டு வரும் சில செயல்கள் சமூகத்தின் எழுதாதச் சட்டமாக உள்ளன. மனிதர்கள் இக்கால கட்டத்தில் மட்டுமின்றி பண்டையக் காலத்தில் இருந்தே கடவுள் மீதும் விதி மீதும் நம்பிக்கை உடையவர்களாகவே இருந்து வருகின்றனர். தனக்கு நடக்கும் நன்மை தீமை ஆகியவற்றிற்கு விதியே காரணம் என நம்புகின்றனர். மேலும் இறந்தவர்கள் தெய்வத்திற்குச் சமமானவர்கள் என்ற நம்பிக்கையும் சங்ககாலம் முதல் தற்காலம் வரை இருக்கின்றது.

#### 4.10.1 கடவுள் பற்றிய நம்பிக்கை

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்கிறாள். இதனை அறிந்த செவிலித்தாய் தன்மகள் வீரமிக்க ஆடவனுடன் கொலைத்

தொழிலைச் செய்யும் மறவர்கள் இருக்கும் வழியே செல்கிறாள். அவ்வாறு நடுகல் இருக்கும் காட்டுவழியே செல்லும் போது அவர்களை நடுகல் தெய்வமே காப்பாற்ற வேண்டும் என வேண்டுகிறாள் என்பதனை,

**'நெறி இருங் கதுப்பின் என் பேதைக்கு**

**அறியாத் தேஎத்து ஆற்றிய துணையே'** (அகம்,35)

எனக் குடவாயிற் கீரனார் கூறுவதில் இருந்து பாலை நில மக்கள் கடவுள் நம்பிக்கை கொண்டிருந்ததைக் காணமுடிகின்றது.

### 4.10.2 ஊழ்வினை பற்றிய நம்பிக்கை

ஒருவனுக்கு இப்பிறவியில் நடக்கும் நன்மை மற்றும் தீமை ஆகிய காரணங்களுக்கு அவன் ஊழ்வினையே காரணம் என மக்கள் நம்புகின்றனர். ஓர் உயிரினம், போன பிறவியில் செய்த நன்மை, தீமைகளை வைத்தே அவன் மனிதனாகவோ அல்லது விலங்காகவோ, பறவையாகவோ பிறக்கிறான் என மக்கள் இன்றளவும் நம்பிக்கை கொண்டுள்ளனர். சங்க இலக்கியத்திற்குப் பின்பு தோன்றிய காப்பிய இலக்கியமான சிலப்பதிகாரம்,

**'ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்'** (சிலம்பு. வழக்குரைத்தக் காதை.57)

என்று கூறுகிறது. ஒருவர் ஒருபிறவியில் செய்யும் தீமையானது ஏழு பிறவிகளிலும் அவரைத் தொடர்ந்து வரும் என்பதே மக்களின் நம்பிக்கையாக இருக்கின்றது.

இன்றைய காலத்தில் மட்டுமின்றி சங்ககாலத்திலும் இத்தகைய ஊழ்வினை நம்பிக்கை உடையவர்களாகவே மக்கள் இருந்துள்ளனர். செவிலித்தாய் ஒருத்தி தலைவன் மற்றும் தலைவி சிறுவயதில் கொண்ட

நட்பானது ஊரார் அனைவரும் காணும்படி திருமணத்தில் முடிந்ததற்கு அவர்களது ஊழ்வினையே காரணம் என்று கூறுவதை,

‘நல்லை மண் றம்ம பாலே மெல்லியல்
துணைமலர்ப் பிணைய லன்னவிவர்
மணமகிழ் இயற்கை காட்டியேயே’ (குறுந்.229)

என்ற குறுந்தொகைப் பாடல்வரிகள் ஊழ்வினையின் வலிமையால் தான் இவர்கள் தலைவன் தலைவி ஆயினர் என்று கூறுவதில் இருந்து பாலைநிலமக்கள் ஊழ்வினையின் மீது கொண்டிருந்த நம்பிக்கையைக் காணமுடிகின்றது. இத்தகைய ஊழ்வினை பற்றிப் பிற்காலத்தில் எழுந்த நீதி நூலான திருக்குறளில் ஓர் அதிகாரமே உள்ளது (அதிகாரம்.38:ஊழ்). ஊழ் வினையைக் காட்டிலும் இவ்வுலகில் பெரிய வினை எதுவும் இல்லை என்கிறார் வள்ளுவர்.

“ஊழின் பெருவலி யாஉள மற்று ஒன்று
சூழினும் தான் முந்துறும்”[32] (குறள்.380)

என்னும் குறள் ஊழைக் காட்டிலும் பெரிதும் வலிமையானவை யாவை உள்ளன. மற்றொன்றை வலியது என்று கருதினாலும் அங்கும் ஊழே முன்வந்துநிற்கும் என்று கூறுகிறது. ஒருவர் செய்யும் எந்தவொரு நன்மை, தீமை ஆகிய நிகழ்வுகளுக்கும் ஊழ் வினையே காரணம் என்று கூறுகிறது.

### 4.10.3 சகுனம் பார்த்தல்

நல்லகாரியம் எதைச் செய்யக் கிளம்பினாலும் சகுனம் பார்ப்பது இன்றளவும் மக்களிடம் நிலவுகிறது. தாம் செய்யப் புறப்படும் காரியம் வெற்றியைக் கொடுக்குமா அல்லது தோல்வியைத் தருமா என்பதைச் சகுனம்

மூலமாகவே தெரிந்து கொள்ளலாம். உதாரணமாக ஒருவர் ஒரு காரியத்தைச் செய்யப் புறப்படும்போது சவ ஊர்வலம் எதிரே வந்தால் போகும் காரியம் வெற்றியடையும் என மக்கள் நம்புகின்றனர். அதைப் போன்று பாலை நில மக்களும் பல்வேறு சகுனங்களைப் பார்த்துள்ளதை இலக்கியங்கள் சுட்டுகின்றன.

தற்காலத்தில் சகுனம் பார்த்தல் என்று கூறுவதைச் சங்ககாலத்தில் நிமித்தம் பார்த்தல் என்று கூறியுள்ளனர். சங்ககால மக்கள் பல்வேறு நிமித்தங்களைப் பார்த்துள்ளனர். பறவை, பல்லி போன்றவற்றின் நிமித்தங்களைப் பார்த்துள்ளனர். அதுமட்டுமின்றி நாள் நிமித்தம், மரநிமித்தம் போன்ற நிமித்தங்களையும் பார்த்துள்ளனர்.

பண்டையக் காலத்தில் "நன்னாளில் மணம் முடிக்கப் பெற்றத் தலைவனும் தலைவியும் எக்காரணத்திலும் பிரியாது அவர்களை நாள் மீன் இணைத்து வைக்கும்"[33] என்ற நம்பிக்கை இருந்ததைக் கலித்தொகை காட்டுகிறது. இத்தகைய நாள் நிமித்தம் பற்றிக் குறுந்தொகையிலும் கூறப்பட்டுள்ளது.

### 4.10.4 புள் நிமித்தம்

பறவைகளின் ஒலி இயக்கம் இடப்பெயர்ச்சி ஆகியவற்றைக் கொண்டு நிமித்தம் பார்த்துள்ளனர். புள் என்பதற்குப் பறவை என்னும் பொதுப்பெயரும் உண்டு. காகம் கரைதல், குயில் கூவுதல் போன்றவை நன் நிமித்தங்களாகவும், ஆந்தை அலறல், கோட்டான் குழறுதல் போன்றவை தீய நமித்தங்களாகவும் கருதப்பட்டன.

பொருள் தேடுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்தான். அப்பொழுது தலைவி தோழியிடம், தனக்குஇரவு தோறும் இனிய கனவுகள் தோன்றுகின்றன. அதைப்போன்று, **“இல்லத்திலே புள் நிமித்தங்களும் நல்லவாக உள்ளன”**[34] என்று கூறுகிறாள். இதைப்போன்று குறுந்தொகைப் பாடலிலும் புள்நிமித்தம் பற்றியச் செய்திகள் காணப்படுகின்றன.

### 4.10.5 மர நிமித்தம்

சங்க காலத்தில் மன்னர்கள் போர் செய்யப் போகும் முன்பு உன்னமரம் என்ற மரத்தை வைத்து நிமித்தம் பார்த்துள்ளனர். உன்னமரம் நன்கு செழித்து வளர்ந்திருந்தால் போர் வெற்றிபெறும் என்றும் மரம் வாடியிருந்தால் போர் தோல்வி அடையும் என்றும் நம்பியுள்ளனர்.

‘‘பனை, ஆல், கடம்பு போன்ற மரங்களில் கடவுள் உறைவதாகப் பழந்தமிழர் நம்பினர். அம்மரங்கள் தழைத்தால் வெற்றியும் வாடினால் தோல்வியும் கிடைக்கும் என நினைத்தனர். வேங்கை மரம் பூத்துக் குலுங்குவது மணநாளை அறிவிக்கும் நன்நிமித்தம் என்பது சமூகத்தாரது நம்பிக்கையாக இருந்து வந்துள்ளது’’[35]

### 4.10.6 கழங்கிட்டுப் பார்த்தல்

கழங்கினைப் பயன்படுத்தி நன்மை, தீமைகளைப் பார்த்தல் தெய்வம் தொடர்பான நம்பிக்கையில் அமைந்த ஒன்றாகும். இன்றளவும் சோவிபோட்டுப்பார்த்தல் மக்களிடையே நிலவுவதைக் காணமுடிகின்றது. அகநானூற்றில் களவு ஒழுக்கத்தில் இடையூறு ஏற்பட்டது. அதனால்

தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்று விட்டனர். இதனை அறிந்த நற்றாய்,

“உடன்போக்கில் என் மகளைக்கொண்டு சென்ற தலைவன் அவளை எம் வீட்டிற்கு முதலில் அழைத்து வருவானோ? அல்லது தன்வீட்டுக்கு முதலில் அழைத்துச் செல்வானோ? தலைவனின் மனம் எத்தகைய கருத்தை கொண்டுள்ளதோ? உன் கழங்கினால் குறி பார்த்து திட்டமான ஒன்றை எனக்குக் கூறுவாயாக”[36] என்று கயமனார் எடுத்துரைக்கின்ற வழி அறிய முடிகிறது.

### 4.10.7 பிறை தொழுதல்

பிறை என்பது சந்திரனைக் குறிக்கும். பிறைதொழும் பழக்கம் தமிழகத்தில் பழங்காலம் முதல் இன்று வரை மரபாக இருந்து வருகிறது. எக்காரியத்தையும் வளர்பிறை நாளில் செய்தால் அச்செயல் சுபமாக இருக்கும் என்று மக்கள் இன்றளவும் நம்புகின்றனர். உதாரணமாக இன்றும் கிராமப்புற மக்களிடையே வீடுகட்டத் துவங்கும் போது வளர்பிறை தினத்திலேயே துவங்குவதைக் காணமுடிகின்றது.

பயிர்கள் நன்கு செழித்து வளர்வதற்கும் நன்கு விளைச்சல் தருவதற்கும் சந்திரனின் கதிர்கள் அவசியம். கடலின் அலைகள் இரவு நேரத்திலேயே சந்திரனின் தண்மையால் அதிகமாக இருக்கும். சந்திரன் ஒரு சுயஒளி அற்ற கோள் ஆகும். இது பூமியினுடைய துணைக்கோளாக பூமியைச் சுற்றி வருகிறது. சூரியனிடம் இருந்து ஒளியை வாங்கி

பிரதிபலிக்கிறது. ‘நிலவு அம்புலி, திங்கள், மதி, நிலா’ போன்றவை சந்திரனின் வேறுபெயர்கள் ஆகும்.

பிற்காலத்தில் எழுந்த நீதிநூலான சிலப்பதிகாரத்தின் தொடக்கத்தில் ஞாயிறு, மழை ஆகியவற்றோடு **“திங்களைப் போற்றுதும்”**[37] எனச் சந்திரனுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாடியுள்ளதைக் காணமுடிகின்றது. ஒள்ளிய அணிகளை அணிந்த மகளிர் உயர்ந்த பிறைச் சந்திரனை வணங்கும் செய்தியை,

**‘ஒள்இழை மகளிர் உயர்பிறை தொழுஉம்**
**புல்லென் மாலை’** (அகம்.239)

என்னும் அகநானூற்றுப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

### 4.10.8 தோள்வளை இறுகுதல் பற்றிய நம்பிக்கை

பெண்களின் உடலில் ஏற்படும் சில மாற்றங்களை அவர்கள் நன்நிமித்தமாகவே கருதினர் என்பதை, தமிழ் இலக்கியங்கள் விளக்குகின்றன. பெண்களின் தோள்வளையல் இறுகுதலை நன் நிமித்தமாகவே கருதினர். தோள்வளை என்பது சங்ககாலமகளிர் அணியும் அணிகலன்களுள் ஒன்றாகும். தோள்வளை என்பதைத் தோள்காப்பு என்று தற்காலத்தில் கூறப்படுகின்றது. இத்தகைய தோள்வளை இறுகினால் நன்நிமித்தமாகவே கருதப்பட்டுள்ளது.

அக்கால மகளிர் தலைவனைப்பிரிந்த தலைவிக்குத் தோள்வளை இறுகுவதால் தலைவன் விரைவில் வருவான் என்ற நம்பிக்கை மூலம் இதனை நன்னிமித்தமாகக் கருதினர் என்பதை,

‘அரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்

வருவர் கொல்வாழி தோழிபொருவார்’ (குறு.260)

என்ற பாடல் அடிகளால் அறியமுடிகிறது. ஆனால் இத்தகைய நிமித்தங்கள் ஆண்களுக்குக் கூறப்படவில்லை. இக்காலத்திலும் பெண்களின் இடதுகண் துடித்தல், தாய், சேய் எதிர்வருதல் மற்றும் பெண் நிறைகுடத்து நீருடன்வருதல் போன்றவை நன்நிமித்தமாகவே கருதப்படுகின்றன.

### 4.10.9 ஓந்தி பற்றிய நம்பிக்கை

ஓந்தி என்பது ஓணான் மற்றும் பச்சோந்தியைக் குறிக்கும். பாலை நிலவழியே செல்பவர்கள் கருக்கரிவாளைப் போன்ற முதுமையுடைய முதிய ஆண் ஓந்தியானது வழிச்சென்றால் மனிதர்கள் நிமித்தமாகக் கருதுவதை,

‘வேதின வெரிநின் ஓதிமுது போத்து

ஆறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்தும்’ (குறுந்.440)

என அள்ளூர் நன்முல்லையார் கூறுகிறார். மேலும் நற்றிணை பாடல்எண்:92 மற்றும் பாடல்எண் 186 ஆகியப் பாடல்களிலும் காணப்படுகின்றன.

ஓந்தி பற்றிய நம்பிக்கை பாலைத் திணைப்பாடல்களில் மட்டுமே காணக்கிடைக்கின்றன. நற்றிணை பாடல் எண் 186 இல் நிறம் மாறும் பச்சோந்தி பற்றிக் கூறப்பட்டுள்ளது.

### 4.10.10 பல்லி பற்றிய நம்பிக்கை

சங்க இலக்கியத்தில் பல்லியின் ஒலியினைக் கல்லில் அம்பினைத் தீட்டும் ஒலியோடு ஒப்புமைப்படுத்தியுள்ளனர் (குறுந்.16). பாலை நில மக்கள் பல்லியின் ஒலியினை நன்நிமித்தமாகக் கருதியதை இனிய கூறும் பல்லி

(நற்.246), நல்லதைக் கூறும் பல்லி (நற்.333), நிகழ்வதைக் கூறும் பல்லி (அகம்.151), முதுவாய்ப் பல்லி (அகம்.387), கணிவாய்ப் பல்லி (அகம்.151) எனக் கூறியிருப்பதன் மூலம் அறிய முடிகிறது.

பாலை நிலத்தில் பல்லி கள்ளியில் இருப்பதாகக் கூறப்படுகின்றது. இதன் கால் செந்நிறமானது. இது தன் துணையை அழைக்கும் ஓசைக்குக் கானவர் தம் விரல் நகத்தால் அம்பை நெருடிப் பார்க்கும் ஓசையைப் பாலைப் பாடிய பெருங்கடுங்கோ உவமையாகக் கூறுவதை,

**'உள்ளார் கொல்லோ தோழி கானவர்**
**பொன்புனை பகழி செப்பங் கொண்மார்**
**உகிர் நுதி புரட்டும் ஓசை போலச்**
**செங்காற் பல்லி தன் துணைபயிரும்**
**அங்காற் கள்ளியங் காடிறந்தோரே'** (குறுந்.16)

என்ற பாடல் மூலம் பல்லியானது பாலை நிலத்தில் தன் துணையை அழைக்கும் ஒலியினைப் பாலை வழியே செல்லும் தலைவன் கேட்டு உன்னை அப்போது நினைப்பார். பல்லி தன் துணையைச் சேர நினைப்பதைப் போல தலைவர் உன்னைச் சேரவருவார். ஆகையால் பல்லி சொல் 'நன்னிமித்தமாகவே' அமையும் எனத் தோழி தலைவிக்கு ஆறுதல் கூறுவதிலிருந்து தெளிய முடிகிறது.

இன்றைய நிலையில் பல்லியின் சொல்லைக் கேட்கும் வழக்கமும் அவற்றின் பலன் கண்டு செயல்களைத் தொடங்குவதும் கிராமப்புற மக்களிடையே வழக்கில் இருந்து வருவதைக் காணமுடிகின்றது.

## 4.11 இசையும் இசைக் கருவிகளும்

இசைக்கலை தொடர்பான செய்திகள் சங்கப்பாடல்களில் அதிகம் காணப்படுகின்றன. முத்தமிழான இயல், இசை, நாடகத்தில் ஒன்றாக இசை உள்ளது. இசை மனிதனை அதன் வயப்படுத்தக்கூடிய ஒன்று. மனிதன் எவ்வளவு கவலையுடன் இருந்தாலும் இசையைக் கேட்டால் மகிழ்ச்சியடைகிறான். சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களிலும் இசை பற்றிய செய்திகளும் இசைக்கருவிகள் மற்றும் இசைக்கலைஞர்கள் பற்றிய செய்திகளும் காணப்படுகின்றன.

**‘கல் எறி இசையின் இரட்டும் ஆங்கண்’** (அகம்.89)

**‘மடிவீடு வீளை கடிது சென்று இசைப்ப’** (அகம்.274)

**‘பல்லியும் பாங்குஒத்து இசைத்தன’** (கலி.11)

ஆகிய சங்க இலக்கியப் பாடல்களில் மட்டும் இல்லாமல் நற்றிணை, பரிபாடல், பத்துப்பாட்டு போன்ற நூல்களிலும் இசை பற்றிய செய்திகள் காணக்கிடைக்கின்றன.

இசையில் முக்கிய இடம்பெறுவது இசைக்கருவிகள். விளரி, யாழ், துடி, முரசு, தூம்பு, குழல், முழவு போன்ற இசைக்கருவிகளை இசைக்கலைஞர்கள் பயன்படுத்தியுள்ளனர். அவ்வாறு பயன்படுத்திய இசைக்கருவிகளைத் தோல்கருவி, நரம்புக்கருவி, துளைக்கருவி என்று வகைப்படுத்திக் காணலாம்.

### 4.11.1 தோற்கருவிகள்

முரசு, பறை, துடி, முழவு போன்றவை தோற்கருவிகளாகும். இவற்றின் மேற்பகுதி தோலால் மூடப்பட்டிருக்கும். பெரும்பாலும் சங்க இலக்கியங்களில் பறை, முரசு போன்ற தோற்கருவிகள் பற்றிய செய்திகள் அதிகம் காணப்படுகின்றன.

ஐந்திணைகளுக்கும் யாழ் என்னும் கருவி போல, பறை என்னும் கருவியும் இருந்துள்ளது. சங்க இலக்கியங்களில் போர்ப்பறை, வெறியாட்டுப்பறை போன்ற பறைக்கருவிகள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. பறை தகவல் தொடர்பிலும் பெரும் பங்கு வகித்ததையும் காணமுடிகின்றது.

சங்ககால மக்களின் பொழுதுபோக்குகளில் ஒன்று கூத்தாடுதல். கூத்தாடுதல் நிகழ்ச்சியை மக்களுக்கு அறிவிப்பதற்காகவும், மக்களை ஓரிடத்தில் கூடச் செய்வதற்காகவும் பறை அறைந்துள்ளனர். இதனை,

> ‘ஆடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்ப’ (அகம்.45)

என்னும் பாடல் வரி தெளிவுறுத்துகின்றது.

இச்செய்தி அகநானூறு(151) குறுந்தொகை(7) ஆகிய பாலைத்திணைப் பாடல்களிலும் இடம் பெற்றுள்ளன. தற்போது திரைப்படம் மற்றும் மருத்துவ முகாம் போன்றவை நடைபெறுவதை ஒலிப்பெருக்கி மூலமும் விளம்பரங்கள் மூலமும் அறிவிப்பதைப் போன்று, சங்க கால மக்கள் பறை ஒலி மூலம் இத்தகைய நிகழ்வைப் பற்றிய தகவல்களைத் தெரிவித்துள்ளனர்.

4.11.2 துடி

தோற்கருவிகளில் ஒன்றே துடி ஆகும். பாலை நிலத்தில் வில்லேந்திய மறவர்கள் பாலை நிலவழி வந்த வணிகர்களை வெட்டி அவர்களின் தலைகளைத் துண்டித்து வெற்றிக்கு அறிகுறியாகத் துடியைக் கொட்டியுள்ளனர். இதனை,

'படுபுலாக் கமழும் ஞாட்பில் துடி இருத்து
அருங்கலம் தெறுத்த பெரும்புசல் வலத்தல்' (அகம்.89)

என்னும் பாடல்பகுதி குறிப்பிடுகின்றது.

"நடுகல்லிற்கு பீலிசூட்டி துடி என்னும் இசைக்கருவியை இசைத்துள்ளனர்"[38]

மேலும் துடி பற்றிய செய்தி அகநானூற்றில் 19வது பாடலிலும் கூறப்பட்டுள்ளது. கலித்தொகையில் 11வது பாடலிலும் துடி பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. துடியை உடுக்கை என்றும் அழைப்பர். இதனை வழிபாட்டில் பயன்படுத்தியுள்ளனர்.

4.11.3 முரசு

சங்ககாலத்தில் பயன்படுத்தப்பட்ட இசைக்கருவிகளில் முரசும் ஒன்றாகும். போர்க் காலங்களில் முரசின் பயன்பாடு அதிகம் என்பதையும் காணமுடிகின்றது. போரில் வெற்றி பெற்ற மன்னன் எதிரிநாட்டின் காவல்மரத்தை வெட்டி முரசு செய்ததையும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. ஊனூரை ஆட்சி செய்த தழும்பனின் முரசு, தமிழின் பெருமையை இவ்வுலகிற்கு அறிவிக்கும் பொருட்டு முழங்கியதை,

**‘தமிழ் அகப்படுத்த இமிழ் இசை முரசின்’** (அகம்.227)

என்னும் அகநானூற்றுப் பாடல்வரி கூறுகிறது.

போரை அறிவிப்பதற்கும் முரசைப் பயன்படுத்தியுள்ளதை அகநானூற்றில் 251வது பாடல் மூலம் அறியமுடிகின்றது.

முரசு அரைவட்ட வடிவினைக் கொண்டது. இதன்மேல்பகுதி தோலால் மூடப்பட்டிருக்கும். நடுவில் கண் போன்ற அமைப்பினை உடைய கருப்புநிற வட்டவடிவில் பெரிய புள்ளி அமைந்திருக்கும். மன்னர்கள் முரசிற்கு என்று தனியாக முரசுக் கட்டிலை அமைத்திருந்தனர் என்பதையும் இலக்கியங்கள் சுட்டுகின்றன.

4.11.4 யாழ்

யாழ், நரம்பு இசைக்கருவி வகையைச் சார்ந்தது. பேரியாழ், சீறியாழ் என இரண்டு வகை யாழ் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. யாழினைப் பெரும்பாலும் பாணர்கள் உபயோகித்து உள்ளதையும் காண முடிகின்றது.

சீறியாழ் சங்க இலக்கியத்தில் ‘கருங்கோட்டு’ என்ற அடைமொழியுடன் குறிப்பிடப்பட்டுள்ளதை,

**‘அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்’** (அகம்.33)

என்னும் பாடல்வரி தெளிவுபடுத்துகின்றது.

பேரியாழ், பத்தர், வறுவாய், பச்சை, போர்வை, ஆணி, திவவு, மருப்பு, யாப்பு, உந்தி, பண்நரம்பு, கவைக்கடை, கண்கூடு என்னும் உறுப்புகளை உடையது எனப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

“பசுமையான கண்களை உடைய குரங்கு பாம்பின் தலையைப் பிடிக்கும்போது அப்பாம்பு நெழியும். அவ்வாறு இல்லாமல் மருப்பு நேராக அமைந்திருந்தது”[39] எனச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

“யாழின் இசையைக் கேட்டு நிறம்மாறும் ஓணான், யாமரத்தில் ஏறுவதை மறந்து நிற்கின்றது”[40] என நற்றிணை கூறுகிறது. அதைப்போன்று தலைவியின் மொழிக்கு யாழின் இசை உவமையாகக் கூறப்பட்டுள்ளதை அகநானூற்றில் 109வது பாடல் கூறுகிறது.

“யாழின் இசையானது குயில் மற்றும் கணந்துள் ஆகிய இருபறவைகளின் ஓசைக்கு ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளதை”[41] சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

### 4.11.5 குழல்

மனிதன் ஊது கருவியான குழலினை முதலில் மூங்கிலில் ஓரிரு துளைகளையிட்டு ஊதினான். இதுவே பிற்காலத்தில் புல்லாங்குழல் என்று அழைக்கப்பட்டது எனலாம். பொது மன்றங்களில் கொன்றைக் குழலை இசைத்துள்ளதை,

**‘கொன்றை அம்சினைக் குழற்பழம் கொழுதி’** (அகம்.15)

என்ற பாடல்வரி தெளிவுப்படுத்துகின்றது.

“மூங்கிலில் வண்டு துளைத்ததனால் விழுந்த துளைகளில் காற்றுப் புகுந்து எழும் ஒலியைக்கேட்டுதான் மூங்கிலால் குழலைச் செய்யத் தொடங்கினான்”[42]என்பதை அகநானூறு கூறுகிறது.

மூங்கில் குழலினைப் போல வண்டுகள் பாடும் என்றும் வண்டின் ஒலிக்குக் குழல் ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளதை அகநானூற்றில் 245வது பாடல் மற்றும் கலித்தொகையில் 33வது பாடல் கூறுகிறது. மேலும் “தலைவனைப் பிரிந்த தலைவியின் விம்மலுக்கும் குழலின் ஓசை ஒப்புமைப்படுத்தப்பட்டுள்ளது”[43]என ஐங்குறுநூறு கூறுகிறது. மூங்கில்களில் மட்டுமின்றி விளாங்கனியிலும் வண்டுகள் துளைத்ததால் காற்றுபுகும் போது குழலோசை எழும்புவதை அகநானூற்றுப் பாடல் எண் 219 கூறுகிறது.

### 4.11.6 தூம்பு

சங்ககாலத்தில் பயன்பாட்டிலிருந்த துளைக்கருவிகளில் ஒன்று தூம்பு எனும் இசைக்கருவியாகும். நீண்ட துளையுடைய குழாய் போன்றது என்பதால் தூம்பு என்று அழைக்கப்பட்டுள்ளது. இதனை **“வெண் கூதாளம்”**[44] எனக் குறுந்தொகை கூறுகிறது.

கோடியர்கள் மன்னரைப் புகழ்ந்து பாடும்போது உடன் தூம்பை இசைத்துள்ளனர். பாடும்போது குழு இசையில் இத்தூம்பு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதனை அகநானூற்றின் 111வது பாடல்வரிகள் கூறுகின்றன. மேலும் தூம்பு என்னும் இசைக்கருவி பற்றிய செய்திகள் அகநானூற்றுப் பாடல் எண் 301 மற்றும் 359ல் காணப்படுகின்றன.

## 4.12 பாலை நில மக்களின் தொழில் முறை

சங்ககால மக்கள் இயற்கையோடு இயைந்த பண்பட்ட வாழ்க்கையை வாழ்ந்து வந்துள்ளனர். அவர்கள் வாழ்ந்த நில அமைப்பிற்கும் அதன் சூழல் தன்மைக்கும் ஏற்றவாறே, அவர்களின் உணவுமுறைகளும், தொழில் முறைகளும் இருந்துள்ளன. சான்றாக மருதநிலம் செழுமைவாய்ந்த நிலமாக இருந்ததால் அங்குள்ள மக்கள் உழவுத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். பாலைநிலம் மிகவும் வறட்சியான நிலம் என்பதால் அங்குள்ள மக்கள் ஆறலைத்தல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இதனடிப்படையில் பாலை நிலத்தொழில் முறையை,

1. ஆடவருக்குரிய தொழில்
2. மகளிருக்குரிய தொழில்

என இரண்டாகப் பகுத்துக் கொள்ளலாம்.

### 4.12.1 ஆடவருக்குரிய தொழில்

பண்டைக் காலத்தில் வினையே ஆடவர்களுக்கு உயிராகக் கருதப்பட்டது. தம் முன்னோர் சேர்த்து வைத்த சொத்தில் தாம் வாழ்வதை இளிவாகக் கருதினர் என்பதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. இதனை,

**'வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே'** (குறுந்.135)

என்ற குறுந்தொகைப் பாடல்வரிகள் விளக்குகின்றன.

பாலைநிலம் மழையின்றி நீர்வளம் இல்லாத எந்தவகைத் தொழிலும் செய்ய முடியாத சூழ்நிலையில் உள்ள பகுதியாகும். எனவே அங்குள்ள பாலைநில ஆடவர்கள் ஆறலைத்தல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். அதற்கு அஞ்சியவர்கள் பொருள் தேடி வேறு பகுதிகளுக்குச் சென்றதையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

### 4.12.1.1 ஆறலைத்தல்

ஆறலைத்தல் என்பதற்கு வழிப்பறி செய்தல் என்பது பொருளாகும். இத்தொழிலில் பாலைநில மழவரும் எயினரும் ஈடுபட்டிருக்கின்றனர். ஆறலைத்தலில் ஈடுபடும் பாலை நில ஆடவர்கள் அதற்கென்று சிறப்பான வழிகளையும், தாக்கும் முறைகளையும் கையாண்டிருக்கின்றனர். ஐந்திணை ஐம்பதில் 34வது பாடலில்

**“வன் கண்ணராட்டி விட்டாறலைக்கு மத்தம்”**[45]

என்ற பாடல்வரி இதனைத் தெளிவுப்படுத்துகிறது எனலாம்.

பண்டைய காலத்தில் வழிப்பறி செய்தல் குற்றமாகக் கருதப்படவில்லை. அதற்குப் பின்னரே அது குற்றமாகக் கருதப்பட்டு தண்டனைகளும் வழங்கப்பட்டுள்ளன. பண்டைய காலத்தில் இதற்குத் தண்டனைகள் வழங்கப்பட்டதற்கான எவ்விதச் சான்றுகளும் சங்க இலக்கியங்களில் காணப்படவில்லை.

ஆறலைத்தல் தொழில் செய்யும் ஆறலைக்கள்வர்கள் தங்கள் தொழிலை, உழவுத்தொழில் போலச் சிறப்புறச் செய்ததற்கான சான்றுகள் பாலைத் திணைப்பாடல்களில் காணப்படுகின்றன. இத்தகைய ஆறலைக்

கள்வர்கள் ஆறலைத்தலில் ஈடுபடுவதற்கு முன்பு தாம் செய்யும் வேலைக்கான முன் ஆயத்த நிலைகளிலும் ஈடுபட்டுள்ளதை அறியமுடிகின்றது.

### 4.12.1.2 ஆறலைக்கள்வரின் இயல்பு

ஒரு பொருளின் உண்மைத் தன்மையை உள்ளவாறு வெளிப்படுத்துவது இயல்பு எனப்படும். உதாரணமாக உயிர்களிடையே அன்பு தோன்றுவது இயல்பான ஒன்றாகும். இலக்கண நூல்கள் வழக்குப் பற்றிக் கூறுமிடத்தில் இயல்பு வழக்குப் பற்றிக் கூறுகின்றன.

முதலில் எழுந்த இலக்கண நூலான தொல்காப்பியம் சொல்லதிகாரத்தில் இயல்பு வழக்கும், தகுதி வழக்கும் அமையும் வகை பற்றிக் கூறுகிறது

**“தகுதியும் வழக்கும் தழீஇயன ஒழுகும்**
**பகுதிக் கிளவி வரைநிலை யிலவே”**[46]

என்ற நூற்பா வரிகள் சொற்களை இயல்பாக அமைந்தவை தகுதியால் அமைந்தவை என இருவகைப்படும் என்று கூறுகிறது. இயல்பு வழக்கு என்பது ஒரு பொருளுக்கு அமைந்துள்ள சொல்லால் அப்பொருளை வழங்குவது என்பதனை,

**“இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல்”**[47]

எனக் கூறுகிறது.

இவ்வுலகில் இயற்கையாக உள்ள பொருள்களை அதன் தன்மையில் இருந்து மாற்றாமல் கூறுவதே இயல்பு எனப்படும்

இயல்பு என்னும் கிளவிக்கு, **“**ஒருவரின் குணம், தன்மை, சுபாவம், தகுதி, ஒழுங்கு”[48] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

இயல்பு என்பது **“ஒருவரின் தன்மை”**[49] என்று விளக்கம் சொல்கிறது சைவசித்தாந்த அகராதி.

ஒருவரின் இயல்பு அவரின் மரபை மற்றவர்களுக்குத் தெரிவிக்கிறது. அவ்வியல்பு ஒரு சமூகத்தில் தனிமனிதருக்கு மட்டும் உரியதாக இருக்க முடியாது. ஒரு சில இயல்புகள் அந்தக்குழுக்களுக்கே உரியதாக அமையும். இவ்வாறாக ஒருவரிடம் இருக்கும் சில குணங்கள் ஒரு கூட்டத்திற்கோ அல்லது ஓர் இனத்திற்கோ உரியதாக அமையும். அந்த வகையில் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் ஆறலைக்கள்வரின் இயல்புகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஆறலைக் கள்வர்களின் பொதுவான குணம் பிறஉயிர்களிடம் இரக்கம் காட்டாமையே ஆகும். இதனைப் பிற்காலத்தில் எழுந்த நீதி நூலான திருக்குறளும் உறுதிப்படுத்துகிறது.

**“அருள் கருதி அன்புடையார் ஆதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார் கண்இல்”**[50]

என்னும் குறள் பொருளைத் தேடி அடையும் எண்ணத்துடன் பிறரை எதிர்பார்க்கும் கள்வர்களிடம் அன்பையும், அருளையும் எதிர்ப்பார்க்க

இயலாது என்கிறது. இதனைப் பாலைத்திணைப் பாடல்களிலும் காணமுடிகின்றது.

அறியாமையும், அஞ்சாமையும் உடைய ஆறலைக் கள்வர்கள் அன்பில்லாத வாழ்க்கையினை உடையவர்கள். எந்த உயிர்களிடத்தும் அன்பும் இரக்கமும் காட்டாதவர்கள். கொடுமையான கொலைத்தொழில் அன்றி வேறு தொழிலைக் கற்றறியாத ஆறலைக் கள்வர்கள் செய்யும் கொலைத் தொழிலுக்குச் சிறிதும் இரங்காதவர்கள் என்பதனை,

**'செல் சாத்து எறியும் பண்பு இல் வாழ்க்கை'** (அகம்.245)

**'அன்பில் ஆடவர் அலைத்தலின் பலருடன்'** (நற்.352)

என்ற சங்க இலக்கியப் பாடல்வரிகள் மூலம் காணமுடிகின்றது.

பாலை நில மக்களாகிய ஆறலைக்கள்வர்கள் தாம் அம்பு விடும் திறனைச் சோதிக்கும் பொருட்டு பாலை நில வழியே செல்பவர்களிடம் அணிகலன்களோ மற்ற பொருட்களோ இல்லை என்றாலும் அவர்களைக் கொன்று அவர்களுடைய உடலைப் பறவைகள் உண்பதற்காக இட்டுச் செல்வர். இத்தகைய கொடுமையான குணம் உடையவர்களாக ஆறலைக்கள்வர்கள் இருந்துள்ளதை,

**'அம்பு தொடை அமைதி காண்மார் வம்பலர்**
**கலன் இலர் ஆயினும் கொன்று புள் ஊட்டும்**
**கல்லா இளையர்'** (அகம்.375)

என்ற வரிகளிலிருந்து பாலைநில ஆறலைக்கள்வர்கள் கல்வி அறிவு இல்லாதவர்கள் என்பதையும் பிறரை வருத்தும் குணம் படைத்தவர்கள்

என்பதையும் காணமுடிகின்றது. இவர்கள் தாங்கள் செய்யும் கொலைத் தொழிலுக்குச் சிறிதும் இரங்காமல் அம்புகள் செலவானதற்காக வருத்தப்படக்கூடியவர்கள் என்பதனை,

'சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்

கோல் கழிபு இரங்கும் அதர' (அகம்.327)

என்று அகநானூறு கூறுகிறது. பிற உயிர்களிடம் சிறிதும் அருள் இல்லாத ஆறலைக்கள்வர்கள் பிற உயிர்களுக்குக் கொடுமை செய்யும் பார்வையினை உடையவர்கள். கொலைத் தொழில் புரியும் கூற்றுவன் போன்று எப்பொழுதும் தங்கள் கைகளில் நெடிய வேலினை உடையவர்கள். கொலைத்தொழிலை மட்டுமே விரும்பும் ஆறலைக் கள்வர்கள் மழை வளத்தை விரும்ப மாட்டார்கள் மழையின்றி வறண்ட பூமியையே விரும்பக் கூடியவர்கள் என்பதை,

'குலா அவலவில் கொடுநோக்கு ஆடவர்' (அகம்.265)

'கூற்றத்தன்ன கொலை வேல் மறவர்' (குறுந்.283)

'வானம் வேண்டா வில் ஏர் உழவர்' (அகம்.193)

என்ற வரிகள் உணர்த்துவதன் வழி அறியமுடிகிறது.

எந்த உயிர்களிடத்தும் அன்பில்லாத இக்கள்வர்கள் வயிறு நிறைய கொழுப்புடைய ஊனைத்தின்று தங்களுடைய தோள்கள் பூரிக்க வழிவரும் வணிகரைக் கொல்வார்கள். அங்கு வரும் வழிப்போக்கர்களிடம் பொருள் இல்லை என்றால் தம் செயல் பயனற்றுப் போனது என்று கருதி தன்கையை நொடித்துக் கொண்டு அம்புகள் செலவானதற்கு வருத்தப்படக்கூடியவர்கள்.

தான் வைத்த குறி தப்புமானால் தன் விரல் நகத்தைக் கடிக்கக் கூடியவர்கள். வழிப்போக்கர்களிடம் பொருள் இல்லை என்றாலும் அவர்களைத் தங்கள் மகிழ்ச்சிக்காகக் கொன்றுவிடும் தன்மை உடையவர்களாகப் பாலை நில ஆறலைக்கள்வர்கள் காணப்பட்டனர் என்பதனை,

'விளர் ஊன் தின்ற வீங்கு சிலை மறவர்
மைபடு திண் தோள் மலிரவாட்டி
பொறை மலிகழுதை நெடுதரை தழீஇய
திருந்துவாள் வயவர் அருந்தலை துதித்த
படுபுலாக் கமழும் ஞாட்டில் துடி இகுத்து
அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தார்' (அகம்.89)

என்கிறார் மதுரைக்காஞ்சிப் புலவர். மேலும் கலித்தொகையில்,

'கொள்ளும் பொருள் இலர் ஆயினும் வம்பலர்
துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்து உயர் வெளவலின்'
(கலி.4)

என்கிறார் சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ. மேற்கூறியவை மட்டுமின்றி வழிப்போக்கர் யாரும் வரவில்லை எனினும் காட்டு உயிரையாவது கொன்று தங்களின் வீரத்தினைத் தெரிவிக்கும் குணம் உடையவர்களாக இருந்துள்ளனர் என்பதை,

'----------- தொடர்ந்து உயிர்வெளவலின்
புள்ளும் வழங்காப் புலம்புகொள் ஆர் இடை' (கலி.4)

என்ற கலித்தொகைப் பாடல் வரிமூலம் அறியமுடிகின்றது.

பண்டைக் காலத்தில் ஐவகை நிலப்பாகுபாட்டிற்கு ஏற்ப அந்நிலத்தில் வாழும் மக்களின் இயல்புகள் காணப்பட்டுள்ளதைப் பண்டைய இலக்கியங்கள் சுட்டுகின்றன. மழையின்றி வறண்ட நிலமான பாலைநிலத்தில் வெப்பம் அதிகமாக இருக்கும். அதன் கொடுமையும் அதிகமாக இருக்கும். அதைப்போன்றே அங்கு வாழ்ந்த மக்களான ஆறலைக்கள்வர்களின் குணமும் மிகவும் கொடுமையான தன்மை உடையதாகவே இருந்ததைச் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் காட்டுகின்றன. ஆகவே ஒருமனிதன் அல்லது ஓர் இனக்குழு வாழும் இடத்தை வைத்து அவர்களின் இயல்புகள் வேறுபடும் என்பதையும் ஒரு மனிதனின் இயல்புகள் அவன் வாழும் சமுதாயத்தின் சூழலை மற்றவருக்கு எடுத்துக்காட்டும் வண்ணம் உள்ளதையும் காணமுடிகிறது.

### 4.12.1.3 ஆறலைக் கள்வரின் செயல்

ஒரு மனிதனின் இயல்புடன் தொடர்புடையது செயலாகும். ஒரு மனிதனின் இயல்பான குணத்தை வைத்தே அவன் செய்யும் செயல்கள் அமையும். உதாரணமாக ஒரு மனிதனிடம் தீயகுணங்கள் அதிகமாக இருந்தால் அவனிடம் தீமையான செயல்களே அதிகம் காணப்படும். ஆகவே ஒருவனின் செயல்கள் அவனின் இயல்பைப் பொறுத்தே அமைகின்றன எனலாம்.

செயல் என்ற கிளவிக்கு,“செய்கை, வலிமை, நிலைமை, பொருள் தேடும் தொழில், ஒழுக்கம், காவல்”[51]எனக் கழகத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

பாலைநில மக்களான ஆறலைக்கள்வரின் செயல்களும் அவர்களின் இயல்புகளைப் பொருத்தே அமைந்துள்ளன. வழிச்செல்லும் வணிகர் கூட்டத்தை வருத்தும் ஆறலைக்கள்வர்கள், வழிப்போக்கர்களை எதிர்பார்த்துக் காத்திருப்பர். பின்னர் வழிப்போக்கர்கள் வரும்போது அவர்களைத் தாக்குவர். அவர்களிடம் உள்ள பொருள்களை எடுத்துச்செல்வர். கள்வர்களின் இச்செயலால் பாலை நிலத்தில் சென்ற வழிப்போக்கர்கள் இறந்துபட்டனர் என்பதை அறியமுடிகிறது. இறந்துபட்ட அவர்களின் உடலில் இருந்து பெருகிய குருதியைக் காகங்கள் குடித்தன. அதன்பின்பு இறந்த உடல்களைக் கற்குவியலைக் கொண்டு கள்வர்கள் மூடினர் என்பதனை,

‘நீங்கா வம்பலர் கணைஇடத் தொலைந்தோர்
வசி படு புண்ணின் குருதி மாந்தி
ஒற்றுச் செல் மாக்களின் ஒடுங்கிய குரல
இல்வழிப் படூஉம் காக்கைக்
கல் உயர் பிறங்கல் மலைஇறந்தோரே’ (அகம்.313)

எனப் பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுவதில் இருந்து உணரமுடிகின்றது.

உயர்ந்த காட்டில் உள்ள கவர்ந்த வழிகளை மட்டும் விரும்பும் ஆறலைக் கள்வர்கள், வழிப்போக்கர்கள் மீது எறிந்த அம்பு மற்றும் பிற ஆயுதங்களைப் பாலை நிலத்தின் சிறுகுட்டைகளில் உள்ள நீரில் சுத்தம் செய்ததை,

‘நெறி செல் வம்பலர் கொன்ற தெவ்வர்
ஏறிபடை கழீஇய சேயரிச் சில்நீர்’ (அகம்.113)

என இப்பாடலின் ஆசிரியர் கல்லாடனார் உரைக்கிறார்.

மேலும் தேனை உண்ணும் வண்டுகள் ஒலிக்கின்ற ஓசையைப் போன்று ஒலியெழுப்பிக் கொண்டு பாய்ந்து செல்லும் அம்பினை உடைய ஆறலைக்கள்வர்கள், புலியானது கொன்று விட்டுப் போன பெரிய யானையினது ஊனைத் தம் கோலில் கோத்துக் கொண்டு செல்வர் என்பதை,

**'புலி தொலைத்த உண்ட பெருங்களிற்று ஒழிஊன்**

**கலி கெழு மறவர் காழ்க் கோத்து ஒழிந்ததை'** (அகம்.169)

என்னும் அகநானூற்று வரிகள் உணர்த்துகின்றன.

வலிமையான வளைந்த வில்லினை உடைய ஆறலைக் கள்வர் இனிமையாக முழங்கும் எழுச்சி கொண்ட எருதினைக் கொன்று கொழுப்புடன் கூடிய அதன் தசையை நெருப்பிலிட்டுச் சுட்டு கண்டாரை வருத்தும் பேய்களைப் போல் அதன் வெண்ணிறமான ஊனைத் தின்பர். அதனால் உண்டான நீர்வேட்கை நீங்க, தோப்பிக் கள்ளினைக் குடிப்பர். இத்தகைய ஆறலைக் கள்வர்கள் எப்பொழுதும் 'கிடின்' என்னும் ஓசையுடன் வழிப்போக்கரைத் தாக்கும் தன் செயல்களில் ஆயத்தமாக இருப்பர். இதனை,

**'கிடின் என இசைக்கும் கோல்தொடி மறவர்'** (நற்.48)

என்று நற்றிணை மறவர்கள் இசைக்கும் செயல் பற்றிக் கூறுகிறது.

**'இன்சிலை எழில் ஏறு கெண்டி புரைய**

**நிணம் பொதி விழுத்தடி நெருப்பின் வைத்துஎடுத்து**

------------------------ ---------------- ------------- -----------------------

-------------------- --------------- -------------- -------------------------

புலா அல்கையர் பூசா வாயர்

ஓராஅ உருள் துடிகுடுமிக் குரலொடு

மராஅஞ்சீறூர் மருங்கில் நூங்கும்' (அகம்.265)

என மாமூலனார் கூறுவதில் இருந்து நிணத்தையும் கள்ளையும் உண்ட ஆறலைக்கள்வர்கள் புலால் நாறும் கையினராய், கழுவாத வாயினராய், இடைவிடாது குழறும் கோட்டானின் குரலுடன் தாங்களும் சத்தம் போட்டுக் கொண்டு கூத்தாடும் செயலைச் செய்ததை அறிய முடிகிறது.

### 4.12.1.4 ஆறலைக் கள்வர் தாக்கும் முறை

ஆறலைக் கள்வர்கள் வழிப்பறி செய்தவற்குச் செல்லுமுன் பல உத்திகளைக் கையாண்டுள்ளனர். அதிலும் வழிப்போக்கர்களைத் தாக்கி அவர்களின் பொருட்களை ஆறலைத்தல் செய்வதில் மூன்று முறைகளைப் பின்பற்றி உள்ளனர். அவை

1. முன் ஆயத்த நிலை
2. காத்திருக்கும் முறை
3. தாக்கும் முறை

என்பனவாகும்.

### 4.12.1.5 முன் ஆயத்த நிலை

ஒருவரைத் தாக்குவதற்கு முன்பு தயாராகுவது, முன் ஆயத்த நிலையாகும். ஆயத்தம் என்ற பதத்திற்கு "முன்னேற்றம், சித்தம்"[52] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி. ஆறலைக் கள்வர்கள் தாக்குவதற்கு முன்பு ஆயுதங்களைச் சரிபார்த்தல், வழிகளைத்

தேர்ந்தெடுத்தல் போன்றவற்றைச் செய்துள்ளமையை பாலைத் திணைப்பாடல் வரிகள் மூலம் அறிய முடிகின்றது.

ஆறலைக்கள்வர்கள் வழிப்பறி செய்வதற்குப் பல்வேறாக பிரியும் வழிகளையே தேர்ந்தெடுத்துள்ளனர். தேனை உண்ணும் வண்டுகள் ஒலிக்கின்ற ஓசைபோன்று ஒலியெழுப்பிக் கொண்டு பாய்ந்து செல்லும் அம்பினை நடுகல்லில் தீட்டியிருக்கின்றனர். அவ்வாறு தீட்டிய அம்புகளின் நுனியைச் சோதித்து அறியும் பொருட்டு தன் விரல் நகத்தால் அதனை நெருடிப் பார்த்துள்ளனர் என்பதனை,

> 'பொன் புனை பகழி செப்பம் கொண்மார்
> உகிர்நிதி புரட்டும் ஓசை போல' (குறுந்.16)

எனக் குறுந்தொகையில் பாலை பாடிய பெருங்கடுங்கோ அவர்கள் கூறுகிறார்.

எந்த ஒரு செயலைச் செய்வதற்கும், முன் ஆயத்தநிலை தேவை. இல்லையேல் அக்காரியம் முழுமையான வெற்றியைத் தராது. உதாரணமாக ஒரு விளையாட்டு வீரர் போட்டிகளில் பங்கேற்பதற்கு முன்பே பயிற்சி பெற்று முன் ஆயத்தமாக இல்லாவிட்டால் அவர் அப்போட்டியில் தோல்வியையே சந்திக்க நேரிடும். ஆகவே எந்த ஒரு செயலைச் செய்தவற்கும், முன்பே தயார்படுத்துதல் என்பது அவசியமான ஒன்றாகும்.

### 4.12.1.6 காத்திருக்கும் முறை

கொலைத்தொழிலையே விரும்பும் ஆறலைக் கள்வர்கள் பதுங்கி நின்று வழிப்போக்கரைக் காண்பதற்கு யாமரம் அல்லது ஆலமரத்தின் மேல் பரண் அமைத்துக் காத்திருத்திருக்கின்றனர்.

அயலூரிலிருந்து புதிதாக வரும் மக்களைக் கொள்ளையடிக்கும் பொருட்டு வழியில் சில ஆறலைக்கள்வர் சிவந்த அம்போடும் சினத்தோடும் காத்திருந்திருக்கின்றனர். சிலர் நீரற்ற பெரிய பொய்கைகள் உள்ள இடங்களில் சிவந்த அடியை உடைய மராமரங்கள் மிகுந்திருக்கும் பக்கத்தில் வளைந்த வில்லோடு காத்திருந்தனர். வேறு சிலர் முன்னிடத்தில் உள்ளதாகிய வெப்பம் மிகுந்த கடுமையான நிலத்தைச் சார்ந்திருக்கும் பெரிய மன்றத்தில் வழிப்பறிக்காக வழிப்போக்கர்கள் வரும் வழியைப் பார்த்துக் காத்திருக்கின்றனர் என்பதை,

'வம்ப மாக்கள் வருதிறம் நோக்கிச்
செங்கணை தொடுத்த செயிர் நோக்கு ஆடவர்' (நற்.298)
'செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி' (நற்.148)

'முனி அரில் புலம்பப் போகி முனாஅது
முரம்பு அடைத்திருந்த முரி மன்றத்து' (அகம்.103)

என்னும் சங்க இலக்கிய அடிகள் மூலம் அறியமுடிகிறது.

வழிப்போக்கர்கள் வந்தால் அவர்களிடமுள்ள பொருட்களைப் பறிப்பதற்காக இறால் மீனின் முட்டைகளைப் போன்ற செறிந்த உகா மரத்தினது பழங்கள் உதிரும்படியாக விடுகின்ற அம்பை வில்லோடு பிடித்து வழியிலே வருபவரைப் பார்க்கும், தறுகண்மை உடையவர்களாக ஆறலைக் கள்வர்கள் இருந்தனர் என்பதனை உருத்திரனார்,

'விடுகணை வில்லொடு பற்றிக் கோடிவர்பு
வருநர்ப் பார்க்கும் வன் கண் ஆடவர்' (குறுந்.274)

என்ற குறுந்தொகைப் பாடல் அடிகள் மூலம் விளக்குகிறார். மேலும் இச்செய்திகள் மூலம் வழிச்செல்வோரைத் தாக்குவதற்கு முன் வழி மற்றும் ஆயுதங்களைத் தயார்படுத்திக் கொண்டனர் என்பதையும் பார்க்க முடிகின்றது.

4.12.1.7 தாக்கும் முறை

சுர வழியே வரும் வழிப்போக்கர்களை எதிர்பாத்துக் காத்திருக்கும் ஆறலைக்கள்வர் மரத்தின் மேலிருந்து கற்களைக் கொண்டுத் தாக்கி வழிப்போக்கர் கூட்டத்தைக் கலைப்பர். அதன் பின்பு வழிப்போக்கர் அறியாதவாறு அவர்களைப் பின்னின்று கொன்று விடுவர். இவ்வாறு கொல்லுதலைச் செய்யும் ஆறலைக் கள்வர்கள், வேல் கொண்டு எறிந்தமையால் விழுப்புண்பட்டு வீழ்ந்து கிடக்கும் வழிப்போக்கர்களின் உடலை உண்பதற்காக வளைந்த வாயினையும் கூர்மையான நகத்தையும் உடைய பருந்து தன் சுற்றத்தை அழைக்கும் என்பதனை,

**'கல் எடுத்து எறிந்த பல்கிழி உடுக்கை'** (அகம்.285)

**'சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்'** (அகம்.327)

**'கொலை வெங்கொள்கைக் கொடுந்தொழில் மறவர்'** (அகம்.363)

என்னும் அகநானூற்றுப் பாடல்வரிகள் உணர்த்துகின்றன. இதனால் வழிச்செல்வோரைக் கடுமையாகத் தாக்கி வருத்தும் இயல்பினை உடையவர்கள் ஆறலைக் கள்வர்கள் என்பதை,

**'அத்தம செல்வோர் அலறத் தாக்கிக்**
**கைப் பொருள் வெளவும் களவேர் வாழ்க்கை'** (பெரும்.39-40)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் மூலம் அறியமுடிகிறது.

மேலும் பின்னிய விழுதுகளைக் கொண்ட ஆலமரத்தின் அசைகின்ற கிளைகளில் ஏறியிருந்து ஊக்கத்துடன் எழுந்து வந்து வில்லில் வைத்த மூட்டுவாய் பொருந்திய அம்பினை எய்தும் திறமை உடையவர்கள் இவர்கள். இதனால் வழிப்போக்கர்கள் உடல்சுருங்கி உடல்நீர் வறண்டு நாக்கு உலர்ச்சியால் வாடியிருக்கின்றனர். அவர்களிடம் உள்ள பொருள்களைப் பறித்துக் கொண்டு அதற்குப் பதிலாக வழிப்போக்கர்களுக்குப் புண்ணைக் கொடுத்து அனுப்பி இருக்கின்றனர். இதனை,

**‘சுரை அம்பு முழ்கச் சுருங்கி புரையோர் தம்**
**உள் நீர் வறப்பப் புலர் வாடு நாவிற்கு**
**தண்ணீர் பெறாஅத் தடு மாற்று’** (கலி.6)

என்ற கலித்தொகைப் பாடல்வழி உணரமுடிகின்றது.

ஆறலைக் கள்வராகிய கொலைஞர்கள் வில்லால் வழிப்போக்கரைக் கொல்வார்கள். கரியநிறத்தையும் நீலமணி போன்ற கண்களையும் உடைய காக்கைகள் அந்தக் கொழுப்பமைந்த ஊனைக் கவர்ந்து உண்ணும். விசை கொண்ட வில் ஏந்திய ஆறலைக் கள்வர்கள் வழிச் செல்லும் வணிகர் கூட்டத்தைக் கொன்று அவர் பொருளைக் கொள்ளையாகக் கொண்டு உண்பதை,

**‘சேக்குவம் கொல்லோ நெஞ்சே சாத்து எறிந்து**
**அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழி’** (அகம்.167)

என்கிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார். மேலும்,

'வாங்கு தொடை பிழையா வண் கண் ஆடவர்

விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி' (அகம்.175)

என்ற பாடல்வரிகள் மூலம் தறுகண்மை உடைய ஆறலைக் கள்வர்கள் அம்பினை விரைவாகச் செலுத்தும் தன்மை உடையவர்கள் என்பதையும் அம்பானது அவர்களின் தோளின் நுனியை உரசிச் செல்லும் போது ஒருவித ஓசையை எழுப்பும் தன்மை உடையது என்பதையும் அறியமுடிகிறது.

4.12.1.8 ஆறலைக்கள்வர் பயன்படுத்தும் வழி

வழி என்ற சொல்லுக்கு, "இடம் ஏழனுருபு, காரணம், திரட்சி, மலைப்பக்கம், கிளை, நெறி"[53] என்று பலபொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

ஆறலைக் கள்வர்கள் எப்போதும் பயன்படுத்தும் கவர்த்த வழி என்பது பல்வேறாகப்பிரிந்து செல்கின்ற வழிகளைக் கொண்ட பெருவழியாகும். இவ்வழிகளில் உள்ள பொய்கைகள் நீரற்றுச் செம்மையிழந்து நீண்ட நெறிகளைக் கொண்டதாக இருக்கும். இதனை,

'கயனறக் கண்ணிழிந்து உலறிய பன்மாநெடுநெறி' (நற்.224)

என்கிறார் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

ஆறலைக் கள்வர்கள் பயன்படுத்தும் வழிகளில் உப்பு வணிகர்களின் கழுதைக் கூட்டம் போன்று குறும்பாறைகள் அதிகமாகக் காணப்படும் (அகம்.337). மேலும் குளமும், சுரமும் நீர் அற்று வறட்சி அடைந்து காய்ந்து

காணப்படும் இடங்களிலேயே கள்வர்கள் நடமாடுவர். இவ்வழிகளில் புதிதாகக் கொல்லப்பட்ட பிணங்கள் கிடந்ததை,

**'வம்பலர் தொலைந்த அஞ்சுவரு கவலை'** (நற்.352)

என்ற நற்றிணைப் பாடல்வரி கூறுகிறது.

ஆறலைக் கள்வராகிய கொடியோர் நிறைந்திருக்கும் பெரிய குன்றம் குறுகிய வழிகளை உடையது (அகம்.287). வளைந்த வில்லினைக் கையில் கொண்டவரான எயினர்கள் தம் அம்புகளைத் தீட்டுவதற்குரிய கவர்ந்த வழிகளை உடைய பாலை நிலம் (குறுந்.12). இவ்வழிகள் கொடுமையான உலர்ந்து போன மூங்கில்களும், உலர்ந்து போன நீரற்ற அருவியும் உடையது. பாலைநில வழிகள் (குறுந்.331) (அகம்.245). இத்தகைய பாலைநில வழியின் கொடுமை குறித்துச் சங்க இலக்கியங்கள் மேலும் பல செய்திகளைத் தருகின்றன.

தங்கள் மகிழ்ச்சிக்காக வழிப்போக்கரைக் கொல்லும் ஆறலைக் கள்வர்கள் அலைந்து திரியும் வழிகளைக் கொண்ட அருஞ்சுரத்தில் உள்ள கவர்த்த வழியானது ஆறலைக் கள்வர் வயப்பட்டமை அறிந்து அவ்வழியே வழிப்போக்கர்கள் யாரும் செல்லவில்லை என்பதனை,

**'கள்வர் பகைமிகு கவலைச் செல்நெறி'** (அகம்.257)

**'கொடியோர் குறுகும் நெடி இருங்குன்றத்து'** (அகம்.288)

என்னும் அகநானூற்று வரிகள் எடுத்துரைக்கின்றன.

சினம் மிக்க நாயினை உடைய வடுகர்கள் வழிப்போவோரை வில்லால் கொன்று சினம் தணிந்து கொள்ளும், அச்சம் தரும், கவர்ந்த வழிகளையே ஆறலைத்தற் பொருட்டு பயன்படுத்தியதை,

**‘சுற்று உரிக் குடம்பைக் கதநாய் வடுகர்**

**வில்சினம் தணிந்த வெருவரு கவலை’** (அகம்.381)

என்கிறார் மதுரை இளங்கௌசிகனார்.

“கொள்ளை கொள்வதற்குப் பதுங்கிக் கிடக்கும் ஆறலைக் கள்வரின் வழி காட்டின் கொடுமையால் வருவோர் போவோர் இன்றி வெயில் நிலை பெற்ற சுரவழிகளை உடையது”[54]

பார்ப்பவர்களுக்கு அச்சம் தரும் அகன்ற இடத்தையும் பல குன்றுகளையும் உடையது பாலைநில வழி. எனவே அவ்வழி ‘அஞ்சுவருகவலை’ என்று அழைக்கப்பட்டது. மேலும் இத்தகைய வழி பன்மா நெடுநெறி, நெறிபடு கவலை, பொழிவிழந்த வழி, வெருவரு கவலை என்று அழைக்கப்பட்டதை,

**‘துன்னருங் கவலை அருஞ்சுரம்’** (நற்.387)

**‘அருஞ்சுரக் கவலைய’** (அகம்.17)

**‘வருநர்ப் பார்க்கும் வெருவருகவலை’** (அகம்.127)

**‘வில்சினம் தணிந்த வெருவருகவலை’** (அகம்.381)

'வெம்முனை அருஞ்சுரம்' (ஐங்.329)

என்னும் சங்க இலக்கிய வரிகள் மூலம் காணலாகிறது.

இக்காலம் மட்டுமின்றி பண்டையக் காலத்திலும் மக்கள் தாங்கள் செய்யும் தொழில் முறைக்கு ஏற்பவே வழிகளைப் பயன்படுத்தியுள்ளதை அறியமுடிகின்றது. தற்காலத்திலும் வழிப்பறி செய்பவர்கள் பெரும்பாலும் ஒருவர் அல்லது இரண்டுபேர் போகும் பாதையிலேயே வாகனங்களில் சென்று முகவரி கேட்பது போல் பணம் மற்றும் அணிகலன்களைக் கொள்ளையிட்டுச் செல்வதை ஊடகங்கள் மூலம் அறிய முடிகின்றது.

### 4.12.1.9 தொழில் சிறப்பு

ஒவ்வொருவரும் தாங்கள் செய்யும் தொழிலில் சிறப்புற்று விளங்க வேண்டும் என்றே நினைப்பர். அதற்கான சில உத்திகளையும் கையாள்வர். அதனைப் போன்றே ஆறலைக் கள்வர்களும் தாங்கள் செய்யும் தொழிலில் சிறப்புடன் இருந்துள்ளதைப் பாலைத் திணைப் பாடல்கள் கூறுகின்றன. ஒரு தொழிலின் சிறப்பு என்பது அவ்வேலையைச் செய்யும் வேலையாட்களைப் பொறுத்தே அமையும். எனவே ஆறலைத்தலின் சிறப்பும் அதனை மேற்கொள்ளும் பாலைநில உழவர்களும், எயினர்களுமாகிய ஆறலைக் கள்வர்களைப் பொறுத்தே அமைந்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

ஆறலைக் கள்வர் களவுத்தொழிலை, உழவுத்தொழில் போன்று செய்தனர் என்ற செய்தி நற்றிணை மற்றும் அகநானூறு நூல்களில் காணப்படுகின்றன. உழவுத்தொழிலில் ஒவ்வொரு வேலையையும் படிப்படியாக

செம்மையுறச் செய்தால் மட்டுமே அதில்சிறப்பான பலனைப்பெற முடியும். அதைப் போன்றே மற்ற தொழில்களிலும் ஒவ்வொரு உத்தியையும் சிறப்புறச் செய்தால் மட்டுமே சிறப்பான பலன்களைப் பெறமுடியும்.

ஆறலைக் கள்வர்கள் உழவுத் தொழிலுக்கு எவ்வாறு நிலத்தை உழுது, எவ்வித இடையூறும் இன்றி செடிகள் நன்குவளரச் செய்யமுடியுமோ அதேபோல், கள்வர்கள் தங்கள் வழிகளில் இடையூறு இல்லாமல் பார்த்துக் கொண்டனர். உழவர்கள் விதைப்பதற்கான விதைகளைக் கவனமுடன் தேர்வு செய்து பத்திரபடுத்தி வைப்பதுபோன்று இவர்கள் வில், அம்பு மற்றும் வேல் முதலியவற்றைக் கவனமுடன் தேர்வு செய்து நடுகற்கள் மற்றும் பாலைநிலத்தில் உள்ள பாறைகளில் உரசி அதன் கூர்மையைச் சோதித்துப் பார்த்துள்ளனர். பயிர்களுக்கு நடுவே உள்ள வேண்டாத களைகளை எடுப்பது போன்று, ஆறலைக் கள்வர்கள் மரத்தின் மீது இருந்து கற்களைக் கொண்டு எறிந்து வழிப்போக்கரைத் தனித்தனியே பிரித்து அவர்களிடம் உள்ள பொருள்களைக் கவர்ந்தனர். உழவர்கள் உழவுத்தொழிலில் கிடைக்கும் தானியங்களைப் பாதுகாப்பதுப் போன்று வழிப்போக்கரிடம் உள்ள பொருள்களை ஒன்றுவிடாமல் கைப்பற்றியுள்ளனர். எஞ்சியவற்றை உழவர்கள் எருதுகளுக்கு உணவாக வழங்குவது போன்று கொன்ற வழிப் போக்கர்களின் உடலைக் காக்கைக்கும் பருந்திற்கும் இரையாக்கிய செய்தியைச் சங்கஇலக்கியங்கள் மூலம் அறிய முடிகின்றது. இதனை,

**‘வில்லேர் உழவர் வெம்முனைச் சீறூர்’** (நற்.3)

**‘வில் ஏர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்’** (அகம்.35)

‘கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த’ (அகம்.91)

‘வானம் வேண்டா வில் ஏர் உழவர்
பெருநாள் வேட்டம் கிளைஎழ’ (அகம்.193)

என்னும் சங்க இலக்கிய வரிகள் தெளிவுபடுத்துகின்றன.

கரிய நிறமுடைய கலைமான்கள் தங்கும், பரல் உயர்ந்த கற்குவியலின் கண்ணே, அஞ்சாமையுடைய மழநாட்டார் உழவு போலும் களவுத்தொழில் செய்தற்கு இடமாக அமைந்தது, ஒடுங்காடு என்னும் ஊர் ஆகும். வில்லை ஏராக உடைய உழவராம் ஆறலைக் கள்வர்கள் உயர்ந்த காட்டில் உள்ள கவர்த்த வழிகளை மட்டுமே பயன்படுத்துவர். உழவு போல் களவுத் தொழில் செய்து ஆறலைத்து விற்போரால் உண்ணுபவர்கள் என்பதனை,

‘இரலை சேக்கும் பரல் உயர் பதுக்கைக்
கடுங்கண் மழவர் களவு உழவு எழுந்த
நெடுங்கால் ஆசினி ஒடுங்காட்டு உம்பர்’ (அகம்.91)

என மாமூலனார் கூறுவதில் இருந்து ஆறலைக் கள்வர்கள் உழவு போல் களவுத் தொழிலைச் செய்தமையை அறியமுடிகின்றது.

### 4.12.1.10 ஆறலைக்கள்வர்கள் திருடிய பொருள்கள்

பாலைநில மக்களாகிய ஆறலைக் கள்வர்கள் பாலை நில வழியே செல்லும் வணிகர்கள் மற்றும் வழிப்போக்கர்களிடம் உள்ள பொருள்களைப் பறித்து அதனை வைத்து வாழும் வாழ்க்கை உடையவர்கள் என்பதனை இலக்கிய வரலாறுகள் கூறுகின்றன.

பாலை நில மக்களாகிய ஆறலைக் கள்வர்கள் எவ்விதமான பொருள்களை வழிப்போக்கரிடம் இருந்து பறித்துள்ளனர் என்பதற்கான தெளிவான விளக்கம் சங்கப்பாடல்களில் கொடுக்கப்படவில்லை. ஆனால் ஒரு சில இடங்களில் அணிகலன்களை வழிப்போக்கரிடம் இருந்து பறித்ததற்கான செய்தி மறைமுகமாகக் கூறப்பட்டுள்ளது. அகநானூற்றில் பாடல்எண் 89 மற்றும் பாடல்எண் 375 ஆகிய இரு பாடல்களிலும் ஆறலைக்கள்வர்கள் அணிகலன்களை வழிப்பறி செய்ததற்கான செய்திகள் காணப்படுகின்றன.

வணிகரிடம் இருந்து பெற்ற அணிகலன்களைக் குவித்துப் புனைகழல் மறவர்கள் விற்கள் பொருந்திய அரணிடத்தே அவரவர்க்குரிய பங்குகளாக தமக்குள் பிரித்துக் கொண்டதை,

**'அருங்கலம் தெறுத்த பெரும்புகல் வலத்தார்**

**வில்கெழு குறும்பில் கோள் முறைபகுக்கும்'** (அகம்.89)

என்ற அகநானூற்றுப்பாடல் வழி அறியமுடிகின்றது. இதில் கொடுக்கப்பட்டுள்ள அருங்கலம் என்பது அணிகலனைக் குறிக்கும். மேலும் அகநானூற்றில் 375வது பாடலில் வழிப்போக்கரிடம் அணிகலன் இல்லை என்றாலும் அவர்களைக் கொல்லுவர் எனக் கூறப்பட்டுள்ளது. இதிலும் அணிகலன் பற்றிய செய்திகள் வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இதனை,

**'கலன் இலர் ஆயினும் கொன்று புள் ஊட்டும்'** (அகம்.375)

என இடையன் சேந்தங் கொற்றனார் கூறுவதில் இருந்து காணமுடிகின்றது.

ஆறலைக்கள்வர்கள் அணிகலன்கள் மட்டுமின்றி பொன் மற்றும் பொருளையும் கொள்ளையடித்துள்ளனர். அகநானூற்றில் 337 வது பாடல் ஆறலைக் கள்வர் ஓலைச் சுருளுடன் வந்த பார்ப்பான் கையில் உள்ளது பொன் எனக் கருதி அவனை அவ்விடத்திலேயே கொன்றனர் என்பதன் மூலம் ஆறலைக்கள்வர்கள் பொன்னைப் பறித்துள்ளதை அறியமுடிகின்றது. இதனை,

**'உண்ணா மருங்குல் இன்னோன் கையது**

**போன் ஆகுதலும் உண்டு என கொன்னே'** (அகம்.337)

என பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார்.

கலித்தொகையில் பதினைந்தாவது பாடலில் ஆறலைக் கள்வர்கள் வழிப்போக்கரிடம் இருந்து பொருள்களைப் பறித்துக் கொண்டு அதற்குப் பதிலாக புண்ணைக் கொடுத்ததை,

**'உருதத் கடுஞ்சினத்து ஓடா மறவர்**

**பொருள் கொண்டு புண் செயின்'** (கலி.15)

என்ற கலித்தொகைப் பாடல் வரிகள் கூறுகின்றன.

பிற்காலத்தில் எழுந்த சமய நூலான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார் என்பவர் கள்ளர் சாதியைச் சார்ந்தவர். அவர் திருமணம் செய்த பெண் விதித்த நிபந்தனைக்காக வழிப்பறி தொழிலில் ஈடுபட்டார். நான்கு தேர்ந்த கூட்டாளிகளை உடன்வைத்துக் கொண்டு வழிப்பறி செய்தார் என்பதை அறிய முடிகின்றது. திருமங்கை ஆழ்வாரைச் சோதிப்பதற்காக திருமால் மணக்கோலத்தில் திருமணங்கெல்லை என்னும் இடத்தில் உள்ள அரசமரத்தடியில் வரும்போது திருமங்கையாழ்வார் அவர்களைச் சூழ்ந்து

கொண்டு கழட்டு எல்லா நகைகளையும் என்று கத்தியைக் காட்டி மிரட்டினார். எல்லா நகைகளையும் பகவான் கழட்டிக் கொடுத்தார். காலில் உள்ள ஆபரணத்தைக் கழட்ட முடியாமல் போகவே இதையும் விடமாட்டேன் என்று குனிந்து வாயால் கடித்து துண்டித்து எடுத்தார் என திருமங்கையாழ்வாரின் வரலாற்றுச் செய்தி கூறுகிறது. இதிலிருந்து கள்வர்கள் ஆபரணங்கள் மற்றும் பொன் போன்ற பொருள்களை அதிகமாக கொள்ளை அடித்ததைத் தெரிந்து கொள்ள முடிகின்றது.

### 4.12.2 மகளிருக்கு உரிய தொழில்கள்

தற்காலத்தைப் போல் அன்றி பண்டையக் காலத்தில் எல்லாத் தொழில்களையும் பெண்கள் செய்யவில்லை. பொருள் தேடுதல் ஆடவருக்கு உரியதாக இருந்தது. வீட்டைக் கவனித்துக் கொள்ளுதலும் வரும் விருந்தினரை உபசரித்தலும் தான் வாழும் நிலப்பகுதியில் கிடைக்கும் பொருள்களைச் சேகரித்தல் மற்றும் அதனை விற்றல் போன்றவையே மகளிருக்கு உரியனவாக இருந்தன. பொருள்வயின் பிரிந்து வேறு நாட்டிற்குச் செல்வது ஆடவருக்கு உரியதாகவே கருதப்பட்டதைப் பண்டைய இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

பாலைநிலம் மிகவும் வறட்சியான நிலம். ஆகவே அங்குள்ள மகளிர்,

1. புல்லரிசி திரட்டல்
2. ஊன் உலர்த்தல்
3. பூவிற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளனர்.

#### 4.12.2.1 புல்லரிசி திரட்டல்

புல்லரிசி ஆங்கிலத்தில் ‘ரை’(Rye) என்று அழைக்கப்படுகிறது. இது நீர் வளம் அதிகம் இல்லாத பகுதிகளில் வளரக் கூடிய தாவரமாகும். இது ஒருவித்திலைத் தாவர வகையைச் சார்ந்ததாகும். இந்தப் புல்லரிசியை எறும்பு மற்றும் கரையான்கள் தங்கள் புற்றுகளில் சேர்த்து வைக்கும். குரம்பை வீட்டில் வசிக்கும் எயிற்றி தன் கையில் இரும்பினால் செய்யப்பட்ட அம்பை, நுனியில் சொருகிய கோல் ஒன்றை எடுத்துக் கொண்டு புல்லரிசியைத் திரட்டுவதற்குக் கரம்பை நிலத்தை மேலும் கீழும் குத்தி புழுதி பறக்கக் கிண்டினாள் எனும் செய்தியை,

**‘மான் றோற் பள்ளி மகவொடுமுடங்கி**
**யின் பிண வொழியப் போகி நோன்கா**
**ழிரும்புதலை யாத்த திருந்து கணை விழுக்கோ**
**லுளிவாய்ச் சுரையின் மிளிர மிண்டி**
**யிரு நிலக் கரம்பைப் படுநீ றாடி**
**நுண்புலடக்கிய வெண்ப லெயிற்றியர்’** (பெரும்.89-94)

என்ற பெரும்பாணாற்றுப்படை வரிகள் மூலம் எயிற்றியர் புழுதியால் இருமல் வராமல் இருக்கவும் பற்கள் கரையாகாமல் இருக்கவும் அந்தக் கரம்பை நிலத்தில் விளைந்திருந்த ஒருவகையான புல்லைத் தங்கள் வாயில் அடக்கியிருந்த செய்தியை அறியமுடிகின்றது.

#### 4.12.2.2 ஊன் உலர்த்தல்

ஊன் உலர்த்துதல் என்பது, தான் சமைத்தது போக எஞ்சியுள்ள மாமிசத்தை உப்பு, மிளகு, வற்றல் ஆகியவற்றை மிதமான தீயில் வறுத்து

உரலில் இட்டு இடித்து மாமிசத்தின் மேல் தடவி அதனை வெயிலில் காயவைப்பர். இந்நிகழ்வை இன்றும் கிராமப்புறங்களில் காணமுடிகின்றது. இதனை உப்புக்கண்டம் என்று கூறுவர்.

பாலை நில மக்களும் இத்தகைய செயலைச் செய்துள்ளனர். விலங்குகளைக் கொன்று தன் தமையன்மார் கொண்டு வந்த நிணமுடைய ஊனை எயிற்றியர் பகற்பொழுதில் வெயிலில் காய வைப்பர் என்பதையும், அதனை உண்ணவரும் பறவைகளை ஓட்டுவர் என்பதனையும்,

'கணமா தொலைச்சித் தன்னையர் தந்த
நிணவுன் வல்சிம் படுபுள்ளோப்பும்
நலமா ணெயிற்றி' (ஐங்.365)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் பாலைநில எயினர்கள் பகற்பொழுதில் விலங்குகளை வேட்டையாடச் சென்றதைக் காணலாகிறது.

### 4.12.2.3 பூவிற்றல்

மகளிருக்குப் பிடித்தமானவற்றுள் பூவும் ஒன்றாகும். பூவை வைத்து மிகுதியான வருணனைகளை மகளிருக்குக் கொடுத்துள்ளனர் சங்கப்புலவர்கள். ஓரிடத்தில் மலரும் பூ மற்றொரு நாட்டில் மலர்வதில்லை. நிலம் மற்றும் அதன் காலச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு இடத்திலும் பூக்கள் வேறுவேறு விதமாகவே காணப்படுகின்றன.

பாலைநில மகளிரான எயிற்றியர் கரடிகள் நின்று எஞ்சியுள்ள இருப்பை மரத்தின் பூக்களைத் திரட்டி மூங்கிற் குழாயில் அடைத்து தெருக்கள்தோறும் சென்று விற்பதை,

‘ஆளி நல் மான் அணங்குடை ஒருத்தல்
மீளி வேழத்து நெடுந்தகை புலம்பு
ஏந்தல் வெண்கோடுவாங்கி குருகு அருந்தும்
அஞ்சுவரத் தகுந ஆங்கண் மஞ்சு தப
அழல் கான்று திரிதரும் அலங்கு கதிர் மண்டிலம்’ (அகம்.381)

என மதுரை இளங்கௌசிகனார் கூறுவதில் இருந்து காணமுடிகிறது. பண்டைய காலத்தில் மட்டுமின்றி தற்காலத்திலும் அனைத்து ஊர்களிலுள்ள பூக்களையும் ஓரிடத்தில் குவித்து விற்கப்படும்,பூ சந்தையையும், தெருக்கள் தோறும் பூவிற்கும் மகளிர் மற்றும் ஆடவரையும் காணமுடிகிறது. ஆனால் பண்டையக் காலத்தில் ஆடவர் பூவிற்றதற்கான சான்றுகள் சங்க இலக்கியங்களில் கூறப்படவில்லை.

### 4.13 பாலை நில மக்கள் பயன்படுத்திய கருவிகள்

பாலை நில மக்களாகிய எயினர் மற்றும் எயிற்றியர் தாங்கள் செய்யும் வேலைக்கு ஏற்ப கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். கருவி என்பது தாம் செய்யும் தொழிலுக்கு ஆதாரமாக விளங்கக்கூடியதாகும். சான்றாக உழவுத் தொழிலுக்கு ஏர்க்கலப்பை, மண்வெட்டி போன்றவை கருவியாகப் பயன்படுத்தப்படுகின்றன. அதே போன்று பாலை நில மக்கள் செய்த தொழிலுக்கும் அவர்கள் செய்த தொழில் சார்ந்த கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர்.

பாலை நில ஆடவர்கள் பெரும்பாலும் ஆறலைத்தல் தொழிலிலேயே ஈடுபட்டனர். ஆகவே அவர்கள் வில், அம்பு, வேல் போன்ற கருவிகளைப் பெரிதும் பயன்படுத்தி உள்ளதைச் சங்க இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

அது மட்டுமின்றி கற்களை ஆயுதங்களாகப் பயன்படுத்தியதையும் காணமுடிகின்றது.

### 4.13.1 வில், அம்பு

வில் மற்றும் அம்பு ஆகிய இரண்டும் சேர்ந்தே வேலை செய்யும் கருவிகளாகும். வில்லில் வைத்தே அம்பைக் குறிபார்த்துச் செலுத்த முடியும். ஆறலைக் கள்வர்கள்,

| | |
|---|---|
| 'வளைந்தவில், கோல் வடிவிலா அம்பு' | (நற்.164) |
| 'வலிய வில் அம்பு' | (நற்.198) |
| 'கொடிதான வில், நீண்ட கூர்மையான அம்பு' | (குறு.297) |
| 'சிவந்த அம்பு' | (நற்.298) |
| 'இலை வடிவிலான அம்பு' | (நற்.352) |
| 'மூட்டுவாய் பொருந்திய அம்புகள்' | (கலி.6) |
| 'குதையினை உடைய அம்புகள்' | (அகம்.161) |

போன்ற சங்க இலக்கிய அடிகள் மூலம் ஆறலைமக்கள் வில் மற்றும் அம்பு போன்ற கருவிகளைப் பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் அறியமுடிகின்றது.

வில் என்பது ஒரு கம்பின் இரண்டு நுனியையும் ஒரு கயிற்றால் சேர்த்துக்கட்டிய வளைந்த அமைப்பினை அதாவது அரைவட்டம் போன்ற அமைப்பினை உடையதாக இருக்கும். அம்பு என்பது நேரான ஒரு திடமான குச்சியில் அதன் முனையைக் கூர்மையாக்கியோ அல்லது கூர்மையான ஆயுதங்களை அதனுடன் பிணைத்தோ வைத்திருப்பர். அதன் பின்புறம் அம்பு வேகமாகச் செல்வதற்காகப் பறவையின் இறகுகளைச் செருகி வைப்பர்.

ஆனால் தற்காலத்தில் வில் மற்றும் அம்பு போன்றவை தொழில் நுட்ப மாற்றத்தால் மிகுந்த வளர்ச்சி அடைந்துள்ளதைக் காணலாகிறது.

4.13.2 வாள், வேல்

வாள், அருகில் நின்று சண்டை போடுகையில் பயன்படுத்துவது. வேல், தூரத்தில் இருந்து குறிபார்த்து எறிவதற்குப் பயன்படுவது. நெடிய கம்பின் நுனியில் இரும்பால் ஆகிய கூர்மையான முனையுடைய இலைவடிவிலான ஆயுதத்தைக் கொண்டதாக இருக்கும் தன்மையுடையது. இதனை,

| | |
|---|---|
| 'வேலும் வாளும்' | (பெரும்.100) |
| 'திருந்து வாள்வயவர்' | (அகம்.89) |
| 'வாய் வாள் தமிழ் அகப்படுத்த' | (அகம்.227) |
| 'எ.்.கு உறு விழுப்புண்' | (அகம்.363) |

ஆகியன வேலைக் குறித்து நிற்கின்றன எனலாம்.

| | |
|---|---|
| 'கூற்றத்தன்ன கொலைவேல்' | (குறு.283) |
| 'நெறி சுரை வெள்வேல்' | (அகம்.269) |
| 'திருந்து வேல்' | (அகம்.345) |
| 'நெடுவேல் ஏந்தி' | (குறுந்.390) |

மேலே கூறப்பட்டுள்ளதில் கூற்றத்தன்ன கொலைவேல் என்பது உயிர்களின் ஆயுட்காலம் முடிந்த உடன் உயிரை எடுக்கின்றானோ, அதைப்போன்று இவ்வேல் உடம்பில் பாய்ந்த உடன் உயிரைப் போக்கக் கூடிய தன்மை கொண்டது என்பதையும் அறிய முடிகிறது.

4.13.3 **பிறகருவிகள்**

பாலைநில மக்கள் வில், வாள், வேல் மட்டும் இன்றி இயற்கையாகக் கிடைக்கும் கல் போன்றவற்றையும் கருவியாகப் பயன்படுத்தியுள்ளனர். அதாவது கற்களைக் கொண்டு வழிப்போக்கரைத் தாக்கியுள்ளனர் என்பதையும் பாலைத்திணைப் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

**'கல் எறி இசையின்'** (அகம்.89)

**'கல் எடுத்து எறிந்த'** (அகம்.285)

**'சிறு தீ மாட்டி'** (அகம்.169)

**'இரும்பு தலையாத்த திருந்துகணை'** (பெரும்.91)

என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

இக்கருவியை உளி என்றழைக்கப்பட்டதையும் காணமுடிகிறது.

**'குருங்கா முலக்கை யோச்சி'** (பெரும்.97)

**'முன்றனில வுரற்'** (பெரும்.96)

உரல் மற்றும் உலக்கையை இன்றும் கிராமப்புறங்களில் சில இடங்களில் காணமுடிகின்றது.

**'பார்வையாத்த'** (பெரும்.95)

பார்வையாத்த என்பது பார்வை வலை. சிறிய பறவைகளைப் பிடிக்க இதனைப் பயன்படுத்துவர். மேலே கூறப்பட்டுள்ளவற்றுள் 'சிறுதீமாட்டி' என்பது தீக்கடைக்கோல் ஆகும்.

#### 4.13.4 ஆறலைக் கள்வர்களால் பாதிக்கப்பட்டவர்கள்

பாலை நில மக்களாகிய ஆறலைக்கள்வர் பொருள் இருப்பவர், இல்லாதவர் ஆகிய இருவரையும் தாக்கியுள்ளனர். வழிப்போக்கர்களிடம் பொருள் இல்லை என்றாலும் மனமகிழ்ச்சிக்காகத் தாக்கியுள்ளனர். கழுதையின் மேல் பண்டச்சுமையை ஏற்றி வரும் வணிகர்களைத் தாக்கி அவர்களிடம் உள்ள பொருளைக் கொள்ளையடித்திருக்கின்றனர். இவர்கள் மட்டுமின்றி தூது செல்வோரும், ஆறலைக் கள்வரால் பாதிக்கப்பட்டுள்ளனர்.

**'கண நிரை அன்ன பல் கால் குறும்பொறை**
**தூது ஒய் பார்ப்பான் மடி வெள்ஓலைப்**
**படையுடையக் கையர் வருதொடர் நோக்கி'** (அகம்.337)

என்ற அகநானூற்றுப் பாடல்வரிகள் பலமுறை பாலைநில வழியே தூது செல்லும் பார்ப்பான் மடியில் ஓலைச்சுருளுடன் செல்லும் போது அவன் கையில் இருப்பது தங்கம் என்று கருதி அவனைக் கொன்றனர் எனக் கூறுகிறது.

### 4.14 விளையாட்டு

விளையாட்டு மனிதனை மகிழ்விக்கும் ஒன்று. பொழுது போக்கிற்காக மேற்கொள்ளப்படுவது. தற்காலத்தில் விளையாட்டிற்கு என்று தனித்துறையே இயங்கி வருகிறது. தற்காலத்தில் மட்டுமல்ல பண்டையக் காலத்திலும் விளையாட்டுகளைப் பொழுதுபோக்கிற்காக மக்கள் விளையாடி உள்ளனர். விளையாட்டை, ஆடவருக்குரியது, மகளிருக்குரியது, சிறுவருக்குரியது, சிறுமியருக்குரியது என வகைப்படுத்துவர். பெரும்பாலும் ஆடவர் விளையாடும்

விளையாட்டும் உடல் வலிமையை வெளிப்படுத்துவதாக அமையும். உதாரணமாக ஏறுதழுவுதல், சடுகுடு போன்றவற்றைக் கூறலாம்.

சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்களில் ஆடவர் விளையாடியதற்கான குறிப்புகள் காணப்படவில்லை. ஆனால் சிறுவர் விளையாடியதற்கான குறிப்பு நற்றிணையில் பாடல் எண் மூன்றில் கூறப்பட்டுள்ளது. இவர்கள் பாண்டில் என்னும் விளையாட்டை விளையாடியதை,

**'கல்லார் சிறாஅர் நெல்லிவட்டாடும்**
**வில்லேர் உழவர் வெம்முனை'** (நற்.3)

என இளங்கீரனார் கூறுவதில் இருந்து வேப்பமரத்தின் நிழலில் கல்லாத சிறுவர்கள் கட்டளைக் கல் போன்ற இட்டரங்கைக் கீறிக்கொண்டு நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு பாண்டில் எனும் விளையாட்டை விளையாடினர் என்பதை அறியமுடிகின்றது.

விளையாட்டுகள் பொழுதுபோக்கிற்காக மட்டுமின்றி மனதிற்கு மகிழ்ச்சியையும் உடல் வலிமையையும் அதிகரிக்கும் தன்மை உடையவை. விளையாட்டை 'வாழ்க்கைக்கும் பயிற்சியளிக்கும் களம்' என்று நாட்டுப்புறவியல் ஆய்வு கூறுகிறது. மக்கள் வாழும் சமூகத்தைப் பொறுத்து விளையாட்டுகள் வேறுபடும். எனினும் விளையாட்டு எக்காலத்தில் தோன்றியது என்பது இன்றும் தெரியாத புதிராகவே உள்ளது. விளையாட்டு எல்லா மனித இனங்களிலும் பண்பாட்டிலும் வாழ்வில் ஒன்றிய கலையாக உள்ளது. விளையாட்டு இன்றி இவ்வுலகில் மனிதன் வாழ்வு முழுமை

பெறாது என்று கூறலாம். அத்தகைய தன்மை உடையதாக விளையாட்டு உள்ளது.

### 4.15 பாலை நில மக்களின் சமயச்சிந்தனை

பாலை நிலத்திற்குரிய தெய்வமாகத் தொல்காப்பியர் கொற்றவையைக் கூறவில்லை. எனினும் வெட்சித்திணைக்குரிய ஒரு துறையாக கொற்றவை நிலையைக் குறிப்பிடுகிறார். அகநானூற்றில் கொற்றவையை 'கான் அமர் செல்வி' என்று கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

**'........... ............ ............. ஓங்கு புகழ்க்**
**கான் அமர் செல்வி அருளலின் வெண்கால்**
**பல்படைப் புரவி எய்திய தொல் இசை'** (அகம்.345)

என்ற அகநானூற்றுப் பாடல் கொற்றவையின் அருளே எல்லாச் செயல்களுக்கும் காரணம் என்று கூறுவதை அறிய முடிகின்றது. வையை ஆற்றில் நீராடிய பின் தன் நெற்றியில் திலகமிட்டதைக் கண்டோர் கொற்றவை போன்ற கோலம் புனைந்தாய் என்று கூறுவதை,

**'நெற்றி விழியாற்றத்தில மிட்டலயே கொற்றவை**
**கோலங் கொண்டோர் பெண்'** (பரி.11:99-100)

எனப் பரிபாடல் கூறுவதன் மூலம் அறியலாம்.

திருமுருகாற்றுப்படையில் முருகனை நக்கீரர் கொற்றவையின் மகன் என்றே கூறுகிறார்.

‘மலைமகள் மகனே மாற்றோர் கூற்றே

---------- ------------ -------------- ----------------

கொற்றவைச் சிறுவ’ (திருமுரு.257-258)

என்ற பாடல்வரிகள் மூலம் அறியலாம். மேலும் திருமுருகாற்றுப்படை கொற்றவையை வெற்றியைத் தரும் தெய்வமாகக் குறிப்பிடுகிறது. அதனை,

‘வெற்றி வேல் போர்க் கொற்றவை’ (திருமுருகு.258)

என்ற வரிகள் மூலம் காணலாம். இதனையே பிற்காலத்தில் எழுந்த காப்பியமான சிலப்பதிகாரமும் கூறுகிறது.

“வலிம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை”[55]

எனச் சிலப்பதிகாரத்தில் வேட்டுவவரி கூறுவதனைக் காணலாம்.

பதிற்றுப்பத்தில் கூறப்படும் ‘அயிரை தெய்வத்தைச் சில அறிஞர்கள் கொற்றவை என்று குறிப்பிடுகின்றனர்’ என நா.இளங்கோ அவர்கள் கூறுகிறார். அயிரை பற்றியக் குறிப்புகள் பதிற்றுப்பத்தில் மூன்று இடங்களில்,

‘கடவுள் அயிரையின் நிலைஇ’ (பதிற்.79)

‘மரபின் அயிரை பரைஇ’ (பதிற்.88)

‘உருகுவே மரபின் அயிரை பரவியும்’ (பதிற்.90)

என்று கூறப்பட்டுள்ளன. இதனைப் பதிற்றுப்பத்திற்கு உரை எழுதிய ஔவை.சு.துரைசாமிப்பிள்ளையும் கூறுகிறார். சங்க இலக்கியங்களில் கொற்றவை பற்றிய முழுமையான எந்த ஒரு குறிப்புகளும்

கிடைக்கப்பெறவில்லை என்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது. கலித்தொகை,

'பெருங்காட்டுக் கொற்றிக்குப் பேய்நொடிதாங்கு' (கலி.89)

எனத் தலைவி, தலைவனைத் திட்டும் இடத்து கொற்றவை பற்றிக் கூறுகிறாள். பண்டைத் தமிழர் கொற்றவையை வெவ்வேறு பெயரால் அழைத்ததையும் அவள் குமரிக்கோலத்தில் இருந்ததையும் சிலப்பதிகாரம் பதிவு செய்கிறது.

"மதியின் வெண் தோடு சூடுஞ் சென்னி
நுதல் கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி தவளவாள் நகைச்சி
நஞ்சுண்டு கறுத்த கண்டிடிவெஞ்சினத்து
அரவு நாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்
துளையெறிற்று ரகக் சுடை முலைச்சி
வளையுடைக் கையிற் சூலமேந்தி
கரியின் உரிவை போர்த் தணங்காகிய
அரியின் உரிவை மேகலையாட்டி
சிலம்புங் கழலும் புலம்புஞ் சீறடி
வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை"[56]

என இளங்கோவடிகள், பவளம் போன்ற வாயை உடையவள், முத்துப்போன்று ஒளிவீசும் நகையுடையவள். நெற்றியைத் திறந்து விழித்ததைப் போன்று இமையாத கண்களை உடையவள். கொடிய விஷத்தையுடைய வாசுகி பாம்பினை நாணாகப் பூட்டி நீண்ட மேருவாகிய

வில்லை வளைத்தவள். துளையுடைய பற்களைக் கொண்ட நஞ்சுடைய பாம்பினை மார்பில் கச்சாக அணிந்திருந்தவள். யானையின் தோலை உடையாக அணிந்து, சிங்கத்தின் தோலை மேகலையாக அணிந்தவள். இடதுகாலில் சிலம்பும், வலது காலில் வீரக்கழலும் அணிந்தவள். வளையல் அணிந்த கையில் திரிசூலத்தை வைத்திருப்பவள். ஒலிக்கும் சிற்றடிகளை உடைய எருமைத் தலையும் மனிதஉடலும் கொண்டு திரண்ட தோள்களை உடைய திகழ்ந்த மகிடாசுரனைக் கொன்று, அவனது தலைமேல் நிற்பவள் என்று கொற்றவையின் உருவத்தைக் கூறுகிறார்.

குறுந்தொகையில் 218 வது பாடலில் பாலை நில மக்கள் கொற்றவையை வழிபட்ட செய்தியை,

**‘விடர் முகையடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்**
**கடனும் பூணாங் கைந்நூல் யாவாம்**
**புள்ளும் ஓராம் விரிச்சியு நில்லாம்**
**உள்ளலு முள்ளா மன்றே தோழி’** (குறுந்.218)

என்னும் பாடல் வரிகளில் பிளப்பையும், குகைகளையும் உடைய மலைப்பக்கத்தில் உள்ள வெற்றி பொருந்திய கொற்றவைக்குப் பலி கொடுத்து, தங்களுடைய நேர்த்திக் கடனைச் செலுத்தியுள்ளதையும், அதற்காக கையில் காப்பு நூலைக் கட்டமாட்டேன், நிமித்தமும் பார்க்க மாட்டேன், நற்சொல்லும் கேட்கமாட்டேன் என்று தலைவி கூற்றாகக் கொற்றனார் கூறுவதில் இருந்து அறியாலாகிறது.

தற்காலத்தில் கொற்றவை, துர்க்கை, காளி எனப் பலபெயர்களால் அழைக்கப்படுவதையும் காணமுடிகின்றது.

### 4.16 பாலை நில மக்களின் பெயர்கள்

ஒவ்வொருவரும் தாங்கள் செய்யும் தொழில் மற்றும் தங்களின் குணம் இருக்கும் இடம் ஆகியவற்றிற்கு ஏற்ப பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுவதைப் போன்று பாலை நில மக்களும் தாங்கள் செய்யும் வேலை மற்றும் குணம், கருவி ஆகியவற்றிற்கேற்ப பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளனர். இதனை

1. தொழில் செய்யும் தன்மையால் அமைந்த பெயர்கள்
2. உடல் உறுப்புகளின் தன்மையால் அமைந்த பெயர்கள்
3. ஆயுதங்களின் தன்மையால் அமைந்த பெயர்கள்

என அடைமொழிகளோடு அமைந்திருக்கும் வகையில் விரித்துக்காணலாம்.

#### 4.16.1 தொழில் செய்யும் தன்மையால் அமைந்த பெயர்கள்

**பாலைநில ஆறலைக் கள்வர்கள்**

**ஏவல் ஆடவர்** (ஏவின தொழிலைச்செய்யும் மறவர்)

**கொடுந்தொழில் மறவர்** (கொடுமையான கொலைத்தொழில் செய்யும் மறவர்)

**வில் ஏர் உழவர்** (உழவு போன்று களவுத் தொழில் செய்பவர்)

**கொலைஞர்** (வழி செல்வோரைக் கொல்பவர்)

**வேட்டக்கள்வர்** (வேட்டையாடும் தன்மை உடைய கள்வர்)

என அவர்தம் கொலைத் தொழிலால் அழைக்கப்பட்டனர். இதனை,

'வடி நவிள் அம்பின் ஏவல் ஆடவர்' (அகம்.215)

'கொலை வெங்கொள்கைக் கொடுந் தொழில் மறவர்'(அகம்.363)

'வானம் வேண்டா வில் ஏர் உழவர்' (அகம்.193)

போன்ற சங்க இலக்கிய வரிகளும் எடுத்துரைக்கின்றன.

4.16.2 இயல்பால் அமைந்த பெயர்கள்

ஆறலைக்கள்வரின் இயல்பினைச் சுட்டும் பெயர்களாக,

1. கொடியோர் (கொடுமை மிக்கவர்கள்)
2. கல்லா மழவர் (கல்வி அறிவு இல்லாத மழவர்கள்)
3. அன்பில் ஆடவர் (அன்பில்லாத வாழ்க்கை உடைய மறவர்)
4. புரையோர் (குற்றம் உடைய மறவர்)

ஆகியன குறிக்கப்பட்டுள்ளன. இதனை,

'கொடியோர் குறுகும் நெடி இருங்குன்றத்து' (அகம்.288)

'கல்லா மழவர் வில் இடம் தழீஇ' (அகம்.127)

'அன்பில் ஆடவர் அலைத்தலின் பலருடன்' (நற்.352)

'சுரை அம்புமுழ்கச் சுருங்கி புரையோர் தம்' (கலி.6)

என்னும் பண்டைத் தமிழ் இலக்கியப் பாடல் வரிகள் அவர்தம் இயல்பினை உணர்த்தி நிற்பனவாகும்.

### 4.16.3 உடல் உறுப்பின் தன்மையில் அமைந்த பெயர்கள்

உடல் உறுப்புகளான கண், பார்வை, தலை, கை, கால் ஆகியவற்றின் அடிப்படையிலும் பாலைநில மக்கள் பெயர் பெற்றிருந்தமையைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

**கண் மற்றும் பார்வை**

1. கொடுநோக்கு ஆடவர் (கொடுமை செய்யும் பார்வை உடையவர்)
2. கடுங்கண் மறவர் (புலிபோல் பார்வை உடையவர்)
3. கடுங்கண் மழவர்
4. செங்கண் ஆடவர் (சிவந்த கண்களை உடைய மறவர்)
5. வன் கண் ஆடவர் (தறுகண்மை உடையவர்)
6. செயிர்நோக்கு ஆடவர் (கூரிய நோக்குடைய ஆடவர்)

என்பவை கள்வரின் கொடிய கண் மற்றும் பார்வையால் ஏற்பட்ட பெயர்களாகும். இதனை,

**‘குலாஅவல் வில் கொடு நோக்கு ஆடவர்’** (அகம்.265)

**‘கடுங்கண் மறவர் மாய்தென’** (அகம்.297)

**‘கவல் மாய் பித்தை செங்கண் மழவர்’** (அகம்.101)

**‘வடியாப்பித்தை வன்கண் ஆடவர்’** (அகம்.161)

என்னும் அகநானூற்றுப் பாடல் வரிகள் வழி அறியலாம்.

தலை

'உவலை சூடிய தலையர் கவலை' (அகம்.291)

என்னும் வரி உவலை என்னும் பூவினைச் சூடிய தலையை உடையவராக ஆறலைக்கள்வர் இருந்ததையும் அத்தோற்றத்தால் அவர் சுட்டப்பட்டதையும் உணர்த்துகிறது.

கை

1. படையுடைக் கையர் (படைக்கலன்களைக் கையில் உடையவர்)
2. கருங்கை ஆடவர்
3. கோல் தொடி மறவர் (கையில் வீர வளையணிந்தவர்)

என்னும் பெயர்களால் அவர்கள் சுட்டப்பட்டதை,

'கோட்பதன் அமைந்த கருங்கை ஆடவர்' (அகம்.79)

'கிடின் என இடிக்கும் கோல்தொடி மறவர்' (நற்.48)

என்னும் வரிகள் புலப்படுத்துகின்றன.

கால்

'கறவை தந்த கடுங்கால் மறவர்' (அகம்.63)

என காலின் வலிமையையும் உறுதியையும் சுட்டும் அடைபெயராக அமைகிறது.

மேலும் பாலை நில மக்கள் வடுகர், எயினர், கொடுஞ்சிலை மறவர், கடுவினை மறவர், வாங்குசிலை மறவர். வீங்குசிலை மறவர், கலி கெழு மறவர், குறும்பினவயவர் விழுத்தொடை மறவர், செந்தொடை மறவர் என்னும் பெயர்களாலும் அழைக்கப்பட்டதை,

**'விழுத் தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்'** (ஐங்.352)
**'துவர் செய் ஆடைச் செந்தொடை மறவர்'** (நற்.33)
**'கற்று உரிக் குதம்பைக் கதநாய் வடுகர்'** **(அகம்.381)**
**'கொலைவில் எயினர் தங்கை'** **(ஐங்.363)**
**'அவ்விளம் புரீஇய கொடுஞ்சிலை மறவர்'** **(குறுந்.297)**
**'கல்லுடை குறும்பின் வயவர் வில்இட'** **(அகம்.31)**

என்னும் இலக்கிய வரிகள் எடுத்துரைக்கின்றன.

### 4.16.4 ஆயுதங்களின் தன்மையால் அமைந்த பெயர்கள்

ஆறலைக் கள்வர்கள் வழிப்பறி செய்வதற்குப் பயன்படுத்திய ஆயுதங்களை அடைமொழியாகக் கொண்டும் பெயர்கள் அமைந்துள்ளன. அவை முறையே,

1. வில்
2. வேல் ஆகியவற்றின் அடைமொழிக் கொண்டு பெயர்கள் அமைந்துள்ளன.

**வில்**

1. கொடுவிற் கானவர் (கொடுமையான வில்லை உடையவர்)
2. வல்வில் இளையர் (வலியவில்லைக் கையில் ஏந்தியவர்)
3. வில் வல் ஆடவர் (வில்லாற்றல் வாய்ந்தவர்)

4. கொடுவில் எயினர் (கொடிய வில்லினை உடைய எயினர்)
5. கொலைவில் ஆடவர் (கொடுமையான வளைந்த வில்லினை உடைய மறவர்)
6. கொடுவில் ஆடவர் (கொடுமையான வளைந்த வில்லினை உடைய மறவர்)

என அவர்கள் ஏந்திய வில் ஆயுதத்தால் அழைக்கப்பட்டதை,

'கொடுவிற் கானவர் கணை இடத் தொலைந்தோர்' (அகம்.231)

'செங்கோல் வாளிக் கொடுவில் ஆடவர்' (நற்.164)

'கொடுவில் எயினச் பகழி மாய்க்கும்' (குறு.12)

'வல்வில் இளையர் தலைவர்' (அகம்.257)

'வில்வல் ஆடவர் மேல் ஆள்ஒற்றி' (அகம்.263)

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன.

ஆறலைக்கள்வரின் கைகளில் எப்போதும் இருப்பது வேலாகும். எனவே அவர்கள்,

1. வெள்வேல் மழவர் (வெண்மையான வேலினை உடைய மறவர்)
2. கூர்ம்படை மழவர் (கூர்மையான படைக்கலன்களை உடையவர்)
3. கொலைவேல் மறவர் (கொலை செய்யும் வேலினை உடைய மறவர்)

என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டதை,

‘கூற்றத் தன்ன கொலை வேல் மறவர்’ (குறுந்.283)

‘செறி சுரை வெள்வேல் மழவர்த் தாங்கிய’ (அகம்.269)

‘கொழுப்பு ஆதின்ற கூர்ம்படை மழவர்’ (அகம்.129)

என்னும் சங்க இலக்கிய வரிகள் உணர்த்துகின்றன.

## 4.17 பாலைத்திணை மக்களின் இயல்புகள்:

சங்க இலக்கியங்கள் பாலைத்திணை மக்களை இருவகை இயல்புகள் கொண்டவர்களாகவே காட்டுகின்றன. அவை

1. அக வாழ்க்கைக்குரிய இயல்புகள்
2. புற வாழ்க்கைக்குரிய இயல்புகள்

ஆகியனவாகும்.

### 4.17.1 அகவாழ்க்கைக்குரிய இயல்புகள்:

அகம் என்பது மற்றவர்களுக்குத் தெரியாமல் கடைபிடிக்கும் ஒழுக்கமாகும். இதிலும் சில நிகழ்வுகள் செயல் முடித்தற்குப் பின்பே மற்றவர்களுக்குத் தெரியும். அவை,

1. உடன்போக்கு செல்லல்
2. நற்றாய் வருந்துதல்
3. செவிலி மகளைத் தேடிச் செல்லல்
4. செலவு அழுங்குவித்தல்

5. தலைவியை ஆற்றுவித்தல்

போன்ற ஐந்தும் அகவாழ்க்கைக்கு உரிய இயல்புகளாகப் பாலைத்திணைப் பாடல்கள் காட்டுகின்றன.

### 4.17.1.1 உடன்போக்கு செல்லல்:

உடன்போக்கு என்பது காதல் கொண்ட தலைவனும் தலைவியும் ஊரை விட்டுச் செல்லுதலாகும். இதில் தலைவி, தலைவன் உடன் செல்லுதலால் உடன்போக்கு எனப்பட்டது. உடன்போக்கு என்பதைக் களவு வாழக்கை வாழும் காதலர் எல்லோரும் அறியும்படி கற்பு வாழ்க்கை வாழ்வதற்காக ஊரை விட்டுச் சென்று விடுதல் என்றும் எடுத்துக் கொள்ளலாம்.

உடன்போக்கு என்பதற்கு, ‘‘களவு வாழ்க்கையில் ஈடுபட்ட தலைவனும் தலைவியும் வரைந்து கொள்ளும் பொருட்டுத் தமரை பிரிந்து செல்லுதல்’’[57] என நம்பிகப்பொருள் விளக்கம் தருகிறது. மேலும் உடன்போக்கின் வகைகளையும்,

**‘‘போக்கு அறிவுறுத்தல் போக்கு உடன்படாமை**
**போக்கு உடன்படுத்தல் போக்கு உடன்படுதல்**
**போக்கல் விலக்கல் புகழ்தல் தேற்றல் என்று**
**யாப்பு அமை உடன்போக்கு இருநான்கு வகைத்தே’’**[58]

என்று விளக்குகிறது.

‘போக்கு அறிவுறுத்தல்’ என்பது தலைவியின் வீட்டில் காவல் அதிகமாகி விட்டது. ஆகவே, அவளை உன்னுடன் கூட்டிச்செல் எனத்,தோழி

தலைவனிடம் கூறுவதாகும். ‘போக்கு, உடன்படாமை’என்பது தோழியிடம் தலைவன் உடன்போக்கு வேண்டாம் என்று கூறுவதாகும். அதாவது தலைவி தோழியிடம் உடன்போக்கு வேண்டாம் என்று கூறுவதாகும். ‘போக்கு உடன்படுத்தல்’ என்பது தலைவன் தலைவி இருவரையும் உடன்போக்கு செல்வதற்கான காரணத்தைக் கூறி உடன்போக்கிற்குச் சம்மதிக்க வைத்தல் ஆகும். ‘போக்கு உடன்படுதல்’ என்பது தலைவனும் தலைவியும் உடன்போக்கு செல்ல சம்மதம் தெரிவித்தலாகும். போக்கல்என்பது தலைவனும் தலைவியும் உடன்போக்கு செல்வதாகும். ‘விலக்கல்’ என்பது தலைவனும் தலைவி இருவரும் உடன்போக்கு செல்வதைக் கண்டோர் உடன்போக்கை விலக்கி எம் ஊரில் தங்கிச் செல்க என்று கூறுவதாகும். ‘புகழ்தல்’ என்பது தலைவன் மற்றும் தலைவியைப் பார்ப்பவர்கள் அவர்களின் பொறுத்தத்தைப் புகழ்ந்து கூறுவதாகும். ‘தேற்றல்’ என்பது தலைவனுடன் உடன்போக்கு செல்லும் தலைவியின் வழிநடைவருத்தத்தை அறிந்த தலைவன், தன் ஊர் அருகில்தான் உள்ளது என்று கூறித் தேற்றுவதாகும் போன்ற எட்டு வகைகளை உடன்போக்கின் வகைகளாக நம்பியகப்பொருள் கூறுகிறது. மேலும் உடன்போக்கின் விரிநிலைகளாகப் பதினெட்டைக் கூறுகிறது.

உடன்போக்கு என்பதற்கு ‘‘தலைவன் தலைவியரிடையே தோன்றிய களவு வெளிப்படுத்தற்குரிய கிளவிகளுள் ஒன்றாகக் கருதப்படுகிறது. களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவி, பெற்றோர் அறியாது தோழியின்

உதவியால் தலைவனோடு வேற்றிடம் செல்வது"[59] என வாழ்வியற் களஞ்சியம் கூறுகிறது.

தலைவனுடன் உடன்போக்கு செல்லும் தலைவி ஒருத்தி, பாலை வழியே செல்லும் போது எதிர்வரும் அந்தணரைப் பார்த்து அசைந்து அசைந்து நடக்கும் அந்தணரே, உங்களிடம் ஒன்று வேண்டுகிறேன். தாய் பாதுகாத்து வளர்த்த உடல்நலம் மேலும் அழகுற உன் மகள், அவள் விரும்பிய தலைவனுடன் சென்று கொண்டிருக்கிறாள் என்று என் உற்றார் உறவினருக்குச் சொல்லுங்கள் என்று கூறுவதை,

**'சேண் புலம் முன்னிய அசைநடை அந்தணிர்**
**நும்மொன்று இரந்தனென் மொழிவல் எம்மூர்**
**ஆய்நயந்து எடுத்த ஆய் நலம் கலின**
**ஆரிரை இறந்தனள் என்மின்**
**நேர்இறை முன்கை என் ஆயத்தோர்க்கே'** (ஐங்.384)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் தலைவி உடன்போக்கு செல்வதைத் தன் உறவினருக்குத் தெரிவிக்கச் சொல்கிறாள் என்ற செய்தியைக் காணமுடிகிறது.

தலைவன் பொருள் தேடச் செல்வதாகத் தலைவியிடம் கூறுகிறான். இதனை அறிந்த தோழி,'தலைவி உன்னைவிட்டு பிரிந்து இருக்க மாட்டாள். நீ அவளையும் உன்னுடன் அழைத்துச் செல்' என்று கூறுகிறாள். தலைவனும் அதன் படி தலைவியைத் தன்னுடன் அழைத்துச் செல்கிறான். இதனை,

‘குவளை உண் கண் இவளும் நம்மொடு
வரூஉம் என்றனரே காதலர்
வாராய் தோழி! முயங்குகம் பலவே’ (அகம்.285)

என காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனர் கூறுவதில் இருந்து களவு காலத்தில் தலைவன் தலைவியை வந்து சந்தித்துச் செல்கிறான். உடனே தோழி தலைவி உன்னை விட்டு இருக்கமாட்டாள் என்று கூற தலைவன் பாலைநிலத்தின் கொடுமையைக் கூறி அக்காட்டுவழியில் குவளை மலர் போன்ற கண்களை உடைய இவளும் நம்முடன் வருவாள் என்று தலைவன் கூறியதாகத் தோழி கூறுகிறாள்.

பாலை நிலம் வெப்பம் மிகுந்தது. ஆறலைக்கள்வர் மற்றும் விலங்குகளின் கொடுமையும் நிறைந்தது எனினும், தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்திருக்காமல் தன்னுடனேயே அழைத்துச் செல்கிறான்.

கலித்தொகையில் 9வது பாடலில், ‘அழகிய ஓர் இளம்பெண் இளைஞன் ஒருவனைக் காதலித்தாள். அவனும் அவளைக் காதலித்தான் ஆனால் அவர்கள் காதலை அப்பெண்ணின் பெற்றோர் ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால் ஒருநாள் அவர்கள் இருவரும் ஒருவரும் அறியா வண்ணம் எங்கோ சென்று விட்டனர்’ என உடன்போக்கு சென்றதற்குக் காரணம் தருகிறது.

4.17.1.2 நற்றாய் வருந்துதல்

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்டதை நினைத்து மகளைப் பெற்ற தாய் புலம்புகிறாள். நற்றாய் என்பது தலைவியைப் பெற்ற தாயைக் குறிக்கும்.

நற்றாய் ஒருத்தி உடன்போக்கு சென்ற தன் மகளை நினைத்து வருந்துகிறாள். அவள் விளையாடிய பொருட்களைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு அவளை நினைத்துக் கலங்குவதை,

**'இதுவென் பாவை பாவை இதுஎன்**
**அலமரு நோக்கின் நலம்வரு சுடர்நுதல்**
**பைங்கிளி எடுத்த பைங்கிளி என்றிலை**
**காண் தொறும் காண்தொறும் கலங்க**
**நீங்கினளோ என் பூங்க ணோளே'** (ஐங்.375)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகளில் என் கையிலிருக்கும் இந்தப் பொம்மை என்மகளாகிய பாவைக்கு விருப்பமான பொம்மை, இந்தப் பச்சைக்கிளி என் மகள் எடுத்து விளையாடிய பச்சைக்கிளி. நான் இவற்றைக் காணும் போதெல்லாம் கலங்குகிறேன். இப்படிக் கலங்கும்படி விட்டுவிட்டு என் மகள் நீங்கி விட்டாளே என நற்றாய் அழுது புலம்புகிறாள். மேலும் என்மகள் முன்பு கூறியிருந்தால் உறவினர்களுடன் பேசி நாமே திருமணம் செய்து தந்திருக்கலாம். அவ்வாறு சொல்லாமல் அவள் தான் விரும்பும் காதலனுடன் சென்று விட்டாள் எனப் புலம்புவதை,

**'இனக்களிறு வழங்கும் சோலை**
**வயக்குறு வெள்வேல் அவற் புணர்ந்து செலவே'** (ஐங்.379)

என்ற பாடல் வரிகள் மூலம் உணரமுடிகிறது.

### 4.17.1.3 செவிலி மகளைத் தேடிச் செல்லல்

செவிலித்தாய் என்பவள் தலைவியின் வளர்ப்புத் தாய் ஆவாள். தலைவி உடன்போக்கு சென்றதை அறிந்தவுடன் செவிலித்தாய் தலைவியைத் தேடிச் செல்வதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

தலைவனும் தலைவியும் பிறருக்குத் தெரியாமல் களவு வாழ்க்கை அதாவது காதல் வாழ்வு வாழ்கின்றனர். இதற்கு இடையூறு ஏற்படவே தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு ஊரை விட்டே செல்கிறான். இதனை அறிந்த செவிலித்தாய் ஒருத்தி தன் மகளைத் தேடிச் செல்கிறாள். அவள் மகளைத் தேடிச் செல்லும் வழியில் அந்தணரைப் பார்க்கிறாள். அவர்களிடம்,

**'என் மகள் ஒருத்தியும் பிறள் மகன் ஒருவனும்**
**தம்முளே புணர்ந்த தாம் அறிபுணர்ச்சியர்**
**அன்னார் இருவரைக் காணிரோ? பெரும!'** **(கலி.9)**

என்று கேட்கிறாள்.

அந்தணர்களே என்மகள் ஒருத்தியும் வேறொருத்தியின் மகனும் மற்றவர் அறியாதவாறு தமக்குக்குள் கூடினர். இன்று மற்றவர் அறியும்படி அவர்கள் இருவரும் சென்றுவிட்டனர். அவர்கள் இருவரையும் இக்காட்டில் கண்டீர்களா? என்று செவிலித்தாய் அந்தணர்களைப் பார்த்துக் கேட்கிறாள்.

என் மகள் காலில் சிலம்பு அணிந்து அவளது தந்தையின் கட்டுக்காவல் மிக்க வீட்டினுள் விளையாடும் போதே, அவள் செல்லும்

இடமெல்லாம் அவள் நிழல் போல நானும் செல்வேன். ஆனால் இப்பொழுது என்னை இவ்வாறு புலம்பும்படி விட்டுச் சென்று விட்டாள் என்பதனை,

'செல்வுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போல
கோதை ஆயமொடு ஓரை தழீஇ' (அகம்.49)

என வண்ணப்புறக் கந்தளார் கூறுகிறார். மேலும் மற்றொரு பாடலில் செவிலித்தாய் தலைவி விளையாடிய பொருள்களை வைத்து அவளை நினைத்துப் புலம்புவதை,

'நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை
இயம் புணர் தூம்பின் உயிர் நீக்கும் எத்தம்
சென்றனள் மன்ற என் மகளே
பந்தும் பாவையும் கழங்கும் எமக்கு ஒழித்தே' (ஐங்.377)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் விளக்குகின்றன. தண்ணீர் தாகத்தால் வாடும் யானை, இசைக்கருவியான கொம்பு ஊதுவது போலப் பெருமூச்சு விடும். அப்படிப்பட்ட வழியில் என் மகள் சென்று விட்டாள். அவள் விளையாடும் பந்து, பாவை, கழங்கு ஆகியவற்றை என்னிடம் அவள் நினைவாக விட்டுவிட்டுச் சென்றுவிட்டாள் எனச் செவிலித்தாய் புலம்புகிறாள்.

செவிலித்தாய் தன் மகளைத் தேடி அலைந்து சோர்ந்து விட்டாள் என்பதை,

'காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந்தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே' (குறுந்.44)

என்று வெள்ளிவீதியார் குறிப்பிடுகிறார். செவிலித்தாய் உடன்போக்கு சென்ற தன் மகளைத் தேடி, நடந்து, நடந்து அவளது கால்கள் ஓய்ந்து விட்டன. எதிர் வருவாரைத் தன்மகளா எனப் பார்த்துப் பார்த்து, கண்களும் ஒளியை இழந்துவிட்டன. நம்மகளும் அவள் தலைவனும் மட்டுமின்றி வானில் உள்ள விண்மீன்களைக் காட்டிலும் தலைவன், தலைவி பலராவர் என்று செவிலித்தாய் கூறுவதை இதன் மூலம் அறியமுடிகிறது.

மகள் அவள் விரும்பும் தலைவனுடன் உடன்போக்கு சென்றதையும் அவளை வளர்த்த செவிலித்தாய் தன் மகளைத் தேடிச் செல்வதையும் பாலைத்திணைப் பாடல்களில் மட்டுமே காணமுடிகின்றது.

### 4.17.1.4 செலவு அழுங்குவித்தல்

செலவு அழுங்குவித்தல் என்பது தலைவன் கற்புக்காலத்திலோ அல்லது களவுக் காலத்திலேயோ தலைவியை விட்டுப் பொருள் தேடப் பிரிந்து செல்வான். இதனை அறிந்த தோழி தலைவியின் நிலைமையைத் தலைவனிடம், எடுத்துக்கூறி தலைவி, நீ இன்றி இருக்கமாட்டாள் என்று கூறி தலைவன் பொருள் ஈட்டுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்வதைத் தடுப்பதே செலவு அழுங்குவித்தல் எனப்படும். இதன் மூலம் செலவு அழுங்குவித்தல் என்பது தலைவன் பயணம் செய்வதைத் தடுத்து விடல் என்று அறியமுடிகிறது.

தலைவன் தன் மனைவியை விட்டுப் பொருள்தேட எண்ணிப் பிரியக் கருதுகிறான். இதனை அறிந்த தோழி தலைவனிடம் நீ மலைகடந்து தேடும் பொருள், காடுகடந்து தேடும் பொருள், இல்லை. அருந்ததியைப் போன்று

கற்பினை உடைய தலைவியைப் பிரியாமல் இருப்பது தான் உண்மையான பொருள் என்று கூறுகிறாள். இதனை,

**‘மலை இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருள் ஆகுமோ**
---------- ------------ ----------- ------------- ------------ ---------- -----------------
**கடன் இறந்து செயல் சூழ்ந்த பொருள் பொருள் ஆகுமோ?**
------------- -------------- ------------- ------------ -------------- -------------------
**வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்**
**தடமென் தோள் பிரியாமை பொருள்’** (கலி.2)

என்று கலித்தொகைப் பாடல் வரிகள் விவரிக்கின்றன.

தோழி தலைவனிடம் தலைவியை விட்டுப் பிரிந்து நீ வாழும் வாழ்க்கை, அதாவது பொருள் தேடுவது பொருள் இல்லை என்று கூறுகிறாள். மேலும் மற்றொரு பாடலில் தோழி தலைவனிடம் நீ பொருள் தேடச் செல்வதற்ாக நினைக்கிறாய். அவ்வாறு நீ தேடிச்செல்லும் பொருள் கிடைக்கலாம் அல்லது கிடைக்காமலும் போகலாம். ஆனால் அகன்ற தோள்களை உடைய இவளை நீ பிரிந்து செல்லவேண்டாம். நீ இவளை இவ்வாறு அழும்படி விட்டுச் செல்லலாமோ? என்று தோழி கூறுவதை,

**‘அரும் பொருள் செய்வினை தப்பற்கும் உரித்தே**
**பெருந்தோள் அரிவை தகைத்தற்கும் உரியள்**
**செல்லாய் ஆயினோ நன்றே**
**மல்லம் புலம்ப இவள் அழப்பிரிந்தே’** (ஐங்.302)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் வரிகள் மூலம் காணமுடிகிறது. தலைவன் பொருளீட்டச் செல்ல நினைப்பதையும் தோழி தலைவியின் நிலைமையினைக் கூறி அதனைத் தடுத்து நிறுத்துவதையும் அறிய முடிகிறது.

4.17.1.5 தலைவியை ஆற்றுவித்தல்

தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேடவோ அல்லது வேறு காரணங்களினாலோ பிரிந்து செல்கிறான். அவன் உரிய பருவத்தில் வருவேன் என்று கூறிச் செல்கிறான். அவன் வரவை எதிர்பார்த்து இருக்கும் தலைவியைத் தோழி, தலைவன் விரைவில் வருவான் என்று கூறி ஆற்றுவிக்கிறாள். தோழி தலைவிக்கு ஆறுதல் கூறுவதன் மூலம் தலைவியின் மனம் சிறிது ஆறுதல் அடைகிறது. இதனை ஆற்றுவித்தல் என்று கூறுவர்.

குறுந்தொகைப் பாடல் ஒன்றில் தோழி தலைவியிடம் தலைவர் உன் மீது மிகுந்த அன்புடையவர். ஆகவே விரைந்து வந்து விடுவர் எனக் கூறித் தேற்றுகிறாள். இதனை,

> **‘நசை பெரிது உடையர் நல்கலும் நல்குவர்**
> **பிடிபசி களைஇய பெருங்கை வேழம்**
> **மென்சினை யாஅம் பொளிக்கும்**
> **அன்பின் தோழி அவர் சென்ற ஆறே’** (குறுந்.37)

எனப் பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுவதில் இருந்து தோழி, தலைவர் உன்மீது மிகுந்த விருப்பம் உடையவர், அவர்சென்ற வழியில் பெண்யானையின் பசியைப் போக்க ஆண்யானை யாமரத்தின் பட்டையை உரித்துக் கொண்டிருக்கும் அன்பான காட்சியைப் பார்ப்பார். அதனைப்

பார்த்ததும் உன்னை நினைத்து அவர் விரைவில் வருவார் என்று கூறி தலைவியை ஆற்றுவிக்கிறாள்.

தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேடச் செல்ல நினைக்கிறான். இதனை அறிந்த தலைவி வருத்தப்படுகிறாள் என்பதைப் பார்த்த தோழி தலைவிக்கு ஆறுதல் கூறுவதை,

**‘நீர்வார் கண்ணை நீயி வண் ஒழிய**
**யாரோ பிரிகிற் பவரே சாரற்**
**சிலம்பண கொண்ட வலஞ்சுரி மராஅத்து**
**வேனில் அஞ்சினை கமழும்**
**தேமூர் ஒண்ணுதல் நின்னொடுஞ் செலவே’** (குறுந்.22)

எனச் சேரமானந்தை கூறுகிறார். மலை வெண்கடம்ப மலரை உடைய வேனிற் காலத்தில் மலர்ந்த அழகிய கிளையுடன் நறுமணம் பரவச் செய்யும் நெற்றியை உடையாய், உன் கண்களில் நீர் சொரியும்படிச் செய்துவிட்டு உன்னைப் பிரிந்து செல்லமாட்டார் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

பாலை நிலத்தில் எவ்விதத் தொழிலும் செய்ய முடியாத சூழ்நிலையில் ஆறலைத்தல் செய்ய அஞ்சுபவர்கள் பொருள்வயின் பிரிந்து சென்றுள்ளனர். தலைவி தலைவனை எண்ணி மனம் வருந்துகிறாள். இதனை அறிந்த தோழி, ஒன்று தலைவனைப் பொருள்தேடச் செல்வதில் இருந்து தடுக்கிறாள் அல்லது தலைவிக்கு ஆறுதல் கூறுகிறாள் என்பதைச் சங்கஇலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

#### 4.17.2 புறவாழ்க்கைக்குரிய இயல்புகள்

புறம் என்பது மற்றவர்க்குத் தெரியும்படி செய்யக் கூடியவை ஆகும். தான் மற்றவருக்குக் கொடுத்து உதவுதல் போன்ற நற்பண்புகளை வெளிப்படையாக மற்றவருக்குத் தெரியும்படி கூறுதலும் அதனைச் செய்தலும் ஆகும். இதில்,

1. வினையே உயிர்
2. ஈயாமை
3. பொருள் தேடுதல்
4. அறவோர் அறிவுறுத்தல் போன்ற நிகழ்வுகள் நடைபெற்றதைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

##### 4.17.2.1 வினையே உயிர்

வினை என்பது வேலை செய்தலைக் குறிக்கிறது. இத்தகைய வினை பற்றிப் பிற்காலத்தில் எழுந்த நீதிநூலான திருக்குறள்

**"துணை நலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்**
**வேண்டிய எல்லாம் தரும்"**[60]

என்ற குறள் துணைவர்களால் உண்டாகும். நன்மை செல்வத்தை மட்டுமே தரும். ஆனால் ஒருவர் செய்யும் செயலின் தன்மையே வேண்டிய எல்லாவற்றையும் தரும் என்கிறார்.

பண்டைய கால மக்கள் இயற்கையோடு இயைந்தே வாழ்ந்தனர். ஆகவே அவர்கள் வாழ்க்கை செம்மையுற அமைந்திருந்ததையும் வினையே அவர்களுக்கு உயிராகக் கருதப்பட்டதையும்,

‘வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்

மனையுறை மகளிர்க் காடவர் உயிரென

நமக்குரைத் தோருந் தாமே’ (குறு.135)

என்ற பாடலில் பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார். இதில் பொருள் தேட தலைவன் தலைவியை விட்டுப் பிரிகிறான்.

இதனை நினைத்துத் தலைவி வருந்தும் போது, தோழி, தொழில் தான் ஆண்மக்களுக்கு உயிர் ஆகும். ஒளிபொருந்திய நெற்றியை உடைய இல்லின் கண் உறையும் மகளிர்க்கு கணவன்மாரே உயிர் ஆவரென்று நமக்கு எடுத்துரைத்தவரும் அத்தலைவரே எனத் தலைவியைத் தேற்றுகிறாள்.

4.17.2.2 ஈயாமை

ஈதல் என்பது தன்னை நாடிவரும் இரவலர்க்கு இல்லை என்று மறுக்காமல் கொடுப்பதாகும். ஈதல் பண்பு மனிதனின் பண்பாட்டை உயர்த்தும்,ஈகைக்குணம் ஒருவனை நல்வழிப்படுத்தும். இதனை வள்ளுவர்,

**“ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது**

**ஊதியம் இல்லை உயிர்க்கு”**[61]

மற்றவருக்குக் கொடுத்து வாழும் வாழ்க்கையே பயனுடைய வாழ்க்கை என்பதைக் கூறுகிறது. இதற்குபின்பு வந்த நூலான ஆத்திசூடியில்,

**“ஈவது விலக்கேல்”**[62]

பிறர்க்குப் பொருள் உதவி செய்யும் பண்பை விட்டுவிடாதே என்று கூறுகிறார் ஔவையார். ஆகவே ஈதல் பண்பானது மனிதனின் நற்குணத்தை வெளிப்படுத்துவது என்பதை அறிய முடிகின்றது.

பொருள்களை இரவலர்க்குக் கொடுத்து இன்பம் அனுபவித்தலும், பொருளில்லாத வறியவர்க்கு இல்லையென்று கருதி பொருள் செய்தற்குரிய செயல்களைச் செய்வதற்காகத் தான் பொருளீட்டச் செல்கிறேன் என்று தலைவன் கூறுவதை,

**'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கில்லெனச்**
**செய்வினை கைம்மிக எண்ணு திஅவ்வினைக்கு'** (குறு.63)

என்கிறார் உகாய்க்குடி கிழார்.

தலைவன் பிரியப் போகின்றான் என நினைக்கிறாள் தலைவி. இதனை அறிந்த தலைவன் தலைவியின் அச்சத்தைப் போக்குகிறான். உன்னைப் பிரிந்து சென்ற நான், நீண்ட நாள் தங்கி விட்டால் இரப்போர் என்னிடம் வராத நாள்கள் பல ஆகட்டும் என்று கூறுவதை,

'மெல்லியல் அரிவை நின்னல் லகம் புலம்ப
நிற்றுறந்தமைகு வெனாயின் எற்றுதந்
திரவலர் வாராவை கல்
பல வாகுகயான் செலவுறு தகவே' (குறு.137)

எனப் பாலைப்பாடிய பெருங்கடுங்கோ கூறுகிறார். இரவலர்க்குப் பொருள்வழங்க வேண்டும் என்றால் அவர்கள் வழங்குபவரை நாடி வரவேண்டும். அவர்கள் வராமல் பொருள் வழங்கும் ஒருவனை ஒதுக்கி விட்டால் அது அவனுக்குக் கொடுமையானது. ஆகவே யான் உன்னைப்

பிரிந்தால் இரவலர்க்கு வழங்கும் அறநெறி எனக்கு இல்லாமல் போகட்டும் என்று கூறுகிறான். இதனைக் கலித்தொகையும் கூறுகிறது. பொருள் இல்லை என வருபவர்க்கு ஈயாமை இழிவு என்கிறது.

**'இல் என இரந்தார்க்கு ஒன்று ஈயாமை இழிவு'** (கலி.2)

என்ற கலித்தொகைப் பாடல் வரி மூலம் காணமுடிகிறது.

### 4.17.2.3 பொருள் தேடுதல்

சங்கச் சான்றோர் தான் தேடிய செல்வத்தால் அதாவது தான் தொழில் செய்து அதன்மூலம் ஈட்டியச் செல்வத்தால் தம் இல்லறவாழ்க்கையை நடத்த வேண்டும் என்ற உயரியக்குறிக்கோள் உடையவர்களாக இருந்துள்ளனர். தம் முன்னோர் தேடிவைத்த செல்வத்தைக் கொண்டு வாழக்கூடாது என்பதில் உறுதியாக இருந்துள்ளனர் என்பதனை,

**'உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்**
**இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவுஎனச்**
**சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்**
**சென்றனர் வாழி தோழி ..........'** (குறுந்.283)

என்னும் குறுந்தொகை அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. முன்னோர் சேர்த்து வைத்த பொருளை வைத்து வாழ்வதை விட பிச்சை எடுப்பதே மேல் என்று கருதி, தலைவன் பொருள் தேடச் சென்றதை அறியமுடிகின்றது. மேலும் மற்றொரு பாடலில் தனக்கு மட்டும் இன்பம் பயக்கும் தலைவியோடு மட்டும் வாழ்வதை விட பிறர்க்குப் பயன்பட்டு வாழ்வதற்கு இன்றியமையாதது பொருள், ஆதலால் பொருளீட்டுவதன் பொருட்டு தலைவன் பிரிவதை,

‘பைங்கால் மாஅத்து அம்தளிர் அன்ன

நல்மா மேனி பசப்ப

நம்மினும் சிறந்த அரும்பொருள் தரற்கே’ (குறுந்.331)

என்னும் குறுந்தொகைப் பாடல்வரிகள் விளக்குகின்றன. தம்மைவிட தலைவர்க்குச் சிறந்தது பொருளீட்டுதல் எனத் தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

பொருள் தேடுதலையும் நேர்மையான முறையிலேயே தேடவேண்டும். தீயவழியில் தேடினால் அப்பொருள் அவரை விட்டு நீங்கும். அது இப்பிறவியல் மட்டுமின்றி மறு பிறவியிலும் அவருக்கு அது பகையாகும் என்பதனை,

‘செம்மையின் இகழ்ந்து ஓரிஇப் பொருள் செய்வார்க்கு அப்பொருள்

இம்யையும் மறுமையும் பகையாவது அறியாயோ’ (கலி.14)

என்ற கலித்தொகைப் பாடல்வரிகள் மூலம் நேர்மையாகப் பொருள்தேட வேண்டும் என்ற அறக்கருத்து வலியுறுத்தப்படுகிறது எனலாம்.

### 4.17.2.4 அறவோர் அறிவுறுத்தல்

உடன்போக்கு சென்ற தலைவியைச் செவிலித்தாய் தேடிச் செல்லும் போது வழிவரும் அறவோரிடம் தன் மகளையும் அவனுடன் செல்லும் வீரனையும் கண்டீர்களா என வினவுகிறாள். இதற்கு அறவோர் குறிப்பிட்ட பருவம் வரை பெற்றோர்க்கு உரியவள் பெண். உரிய பருவம் வந்தபோது நல்ல ஆணைத் துணையாகக் கொண்டு இல்லறம் நடத்துவதே நல்லது என்கிறார்கள். இதனை,

‘இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்

சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்

அறம் தலை பிரியா ஆறும் மற்று அதுவே’ (கலி.9)

என்ற கலித்தொகைப் பாடல் வரிகள் மூலம் உடன்போக்கில் சென்ற தலைவியைத் துன்புறுத்தாதீர் எனச் செவிலியிடம் அறவோன் கூறுவதன் மூலம் காண முடிகிறது.

4.18 பாலை நிலம் காட்டும் குடும்பம்

ஒரு தனிமனிதனின் வாழ்வு சமூகத்தாரோடு இணைவதற்கு குடும்ப அமைப்பே காரணமாகும். குடும்பத்தின் மூலம் ஏற்படுத்திக் கொள்ளும் உறவுமுறைகள் போன்றவை மனிதனைச் சமூகத்தோடு இணைக்கும். குடும்ப வாழ்வு நிலைபெற்றுத் திகழ்வதற்குக் கணவன் மனைவி இருவருக்கிடையே புரிந்து கொள்ளும் தன்மையும் விட்டுக்கொடுத்துப் போகும் தன்மையும் அவசியமான ஒன்றாகும். அதுமட்டுமின்றி நம்பிக்கை என்பதே குடும்ப வாழ்வு மட்டுமின்றி எந்த ஓர் செயல்களுக்கும் அஸ்திவாரமாகத் திகழ்கிறது.

பெரும்பாலும் பாலைத்திணைப்பாடல்களில் தலைவன் தலைவியின் வாழ்வு, காதலில் தொடங்கி கற்பில் முடிவதாகவும், தலைவன் பொருளீட்டுவதற்காகப் பிரிந்துச் செல்வதும் தலைவியின் நுகர்வும் என்னும் சிக்கல்களைக் கொண்டதாகவும் அமைந்துள்ளது.

திருமணத்திற்குப் பின்பு பொருள் தேடும் பொருட்டுத் தலைவியைப் பிரியக் கருதிய தலைவன் தனக்கு இன்பம் தரும் பொருள் தலைவியே அன்றி வேறு எதுவும் இல்லை எனக்கூறி தலைவியைப் பிரிந்து செல்வதைத் தவிர்த்த நிகழ்வினை,

**'மருந்து எனின் மருந்தே வைப்பு எனின் வைப்பே**
**அரும்பிய சுணங்கின் அம்பகட்டு இளமுலை**
**பெருந்தோள் நுணுகிய நுசப்பின்**
**கல்கெழு கானவர் நல்குறு மகளே'** (குறு.71)

என்னும் பாடல்வரிகள் மூலம் தலைவனுக்குத் தலைவியே பிணியை நீங்கச் செய்யும் மருந்தாகவும் வறுமையை நீக்கும் செல்வமாகவும் அமைகிறாள் எனக் கூறுகிறான் என்னும் கூற்றுமூலம் தலைவன் தலைவியின் மீது வைத்துள்ள பாசத்தைக் காணமுடிகின்றது.

பாலை நில மக்களிடம் ஒழுக்கமான காதல் வாழ்வைக் காணமுடிகின்றது. தலைவன், தலைவியின் வீட்டில் இருவரின் காதலுக்கும் எதிர்ப்பு வரும் போது இருவரும் உடன்போக்கு மேற்கொள்வதையும் காணமுடிகின்றது. பாலை நில மக்கள் தான் விரும்பிய ஆடவனையே மணம் முடித்துக் கொள்ள வேண்டும் என்ற மன உறுதி உடையவர் என்பதையும் காணமுடிகின்றது.

தலைவி தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்டால் தலைவன் வீட்டில் இருக்கும்போது தன் தாயை நினைப்பதை,

**'ஊஉரலரெழச் சேரி கல்லென**
**ஆனா தலைக்கும் அறனிலன்னை**
**தானே இருக்க தன்மனையானே**
**நெல்ல தின்ற முள்ளெயிறு தயங்க**
--------- ------------- ----------------------------------
----------- -------------- -------------- ------------' (குறுந்.262)

என்ற பாடலில் ஊரில் பழிமொழி உண்டாகத் தெருவில் உள்ளோர் கல்லென்று ஆரவாரிப்பர். இதனை எல்லாம் நினைக்காமல் தாய் தன் வீட்டில் என்னைப் பிரிந்து தனியே இருப்பாள். நான் நெடுந்தூரத்தில் உள்ள நாட்டில் வானத்தைத் தொடும்படி குறுக்கிட்ட மலைகளின் அடிவாரத்தில் யானையின் அடிச்சுவட்டில் உள்ள நீரைத் தலைவரோடு உண்ணுதலை நினைத்தேன் எனக் கூறுகிறாள்.

### 4.19 உறவுமுறை

குடும்ப அமைப்பில் அடிப்படையானது உறவுமுறை. இத்தகைய உறவுமுறையே குடும்பத்தில் பெரியவர், சிறியவர் என்பதைப் பிரித்துக் காட்டும் தன்மையது. பாலைநில மக்களிடையே தலைவன், தலைவி, நற்றாய், செவிலித்தாய், தமையன், தோழி, தந்தை போன்ற உறவு முறைகளைக் காணமுடிகிறது. தொல்காப்பியம் தோழியைச் செவிலியின் மகளாகக் கூறுகிறது. இதனை,

'தோழி தானே செவிலி மகளே' (தொல்.பொருள்.களவு.நூற்.34)

என்னும் நூற்பா அடிகள் எடுத்துரைக்கின்றன.

'நெடு மொழித் தந்தை அருங்கடி நீவி' (அகம்.17)
'ஆனா தலைக்கும் அறனி லன்னை' (குறுந்.262)
'அம்ம வாழி தோழி அவிழிணர்க்' (ஐங்.33)
'அன்னாய் வாழி வேண் டன்னை தோழி' (ஐங்.366)
'காடு உடன் கழிதல் அறியின் தந்தை' (அகம்.49)
'கொலை வில் எயினர் தங்கை' (ஐங்.363)

என்னும் சங்க இலக்கியப் பாடல் வரிகள் மூலம் தாய், தந்தை, தங்கை, தமையன், தோழி போன்ற உறவுகளைக் காண முடிகின்றது. மேலும் தலைவன், தோழன் உடன் நல்ல நட்பு கூறப்பட்டுள்ளது. தலைவியை விட்டுத் தலைவன் பொருளீட்டச் செல்லும் போது, தன் தோழனிடம் மணம் மிக்க பூக்கள் மலர்ந்து வழி குளுமையாக இருக்கிறது என்றாலும் அவள் இல்லாமல் தனியே காட்டுவழியில் செல்வது எனக்கு வெம்மையாக உள்ளது என்று கூறுவதை,

'மடவரல் இந்துணைஒழியக்

கடமுதிர் சோலையை காடிறத் தேற்கே' (ஐங்.328)

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல்வரிகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

அகநானூற்றிலும் தாய் மகன் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இதனை,

'பூக்கண் பறைந்த புன்தலைச் சிறாஅரொடு

அவ்வாழி கொன்றை கறை சேர்வள் உகிர்ப்' (அகம்.387)

என்ற மதுரை மருதன் இளநாகனார் கூற்று வழி அறிய முடிகிறது.

ஓர் உயிர் இவ்வுலகில் பிறப்பதன் வழியும், ஆண் பெண் திருமண உறவினாலும், அதன் வழி இவ்வுலகில் உறவுமுறைகள் அமைகின்றன. இதன் வழியே அமையாத உறவு நட்பு மட்டுமே என்பதைக் கூறலாம். எனினும் சங்ககாலத்தில் இத்தகைய நட்பும் உறவு முறைகளுக்குள்ளே அமைந்திருந்ததையும் காணமுடிகிறது.

### 4.20 சிலம்பு கழிதல்

தற்காலத்தில் திருமணத்திற்கு என்று தனி ஆடை அணிகலன்கள் இருப்பது போல் பண்டையக் காலத்திலும் தனி அணிகலன்களை அணிந்து கொள்ளும் வழக்கம் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. அவற்றில் ஒன்று தான் சிலம்பு. மகளிர் திருமணத்திற்கு முன்பு சிலம்பு அணிந்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் பலபடப் பேசுகின்றன. சிலம்பு காலில் அணியப்படும் ஒருவகை நகை. இதனை 'நூபுரம்' (கலி.83) என்றும் குறிப்பிடுவர். சிலம்பின் உள்ளே மாணிக்கம், முத்து போன்ற பரல்கள் இருக்கும் என்பதையும் சிலப்பதிகாரம் காட்டுகிறது.

பண்டையக் காலத்தில் மகளிர் திருமணத்திற்கு முன்பு சிலம்பு அணிந்திருந்ததைத் தலைவன் தலைவி உடன்போக்குப்பாடல் மற்றும் செவிலித்தாய் மகளை நினைக்கும் பாலைத்திணைப் பாடல்களில் காணமுடிகின்றது. தலைவி தந்தையின் காவல்மிக்க வீட்டைத் தாண்டி சிலம்பணிந்த கால்களுடன் உடன்போக்கு சென்றுவிட்டதைச் செவிலித்தாய் கூறுவதை,

'சிறுமுதுக் குறைவி சிலம்பு ஆர்சிறடி' (அகம்.17)

என கயமனார் கூறுகிறார். மேலும் பல பாடல்களில் தலைவி உடன்போக்கு செல்லும் பாடல்களிலேயே சிலம்பு பற்றிய செய்திகள் அதிகம் காணக்கிடைக்கின்றன.

'தோடு அமை அரிச்சிலம்பு ஒலிப்ப' (அகம்.49)

'சிலம்பு நக இயலிச் சென்ற என்மகட்கே' (அகம்.117)

இப்பாடல் அடிகள் மட்டுமின்றி அகநானூற்றில் பாடல் எண்கள் பலவற்றில் சிலம்பு பற்றியச் செய்திகள் காணக்கிடைக்கின்றன. பா.எ.147, பா.எ.177, பா.எ.249, பா.எ.257, பா.எ.315, பா.எ.321, பா.எ.205, பா.எ.219, பா.எ.389 ஆகிய அகநானூற்றுப் பாலைத்திணைப் பாடல்களில் சிலம்பு பற்றிய செய்திகள் காணக்கிடைக்கின்றன.

தலைவனும், தலைவியும் உடன்போக்கு செல்லும் போது அவர்களின் எதிரே வந்தவர்கள் தலைவி காலில் அணிந்திருந்த சிலம்பினால் இருவருக்கும் மணம் முடியவில்லை என இரங்கியதை,

'வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே நல்லோர்
யார் கொல் அளியர்' (குறுந்.7)

என பெரும்பதுமனார் பாடல் வரிகள் மூலம் காண முடிகிறது. மகளிர் திருமணத்திற்கு முன்பு காலில் சிலம்பு அணிந்திருந்ததை அறியமுடிகின்றது. தலைவன் களவு ஒழுக்கத்தின் போது பொருள் தேடுவதற்காகத் தலைவியை விட்டுப் பிரிகிறான். இதனால் உடல்மெலிந்த தலைவி நிலையில்லாத பொருளீட்டும் வாழ்க்கையை உடைய அறிவுடையீர் நீங்கள் உங்களுடைய காதலிமாரை விட்டுப்பிரியாமல் கலந்தேயிருங்கள் என்று குறிப்பிடும் இடத்தில் தலைவி காலில் சிலம்பு அணிந்திருந்ததை,

'தேம்படு சிலம்பில் தெள அறல் தழீஇய
துறுகல் அயல தூமணல் அடைகரை' (நற்.243)

எனக் காமக்கணிப் பசலையார் கூறுகிறார்.

உடன்போக்கு சென்ற தலைவிக்குத் தலைவன் வீட்டில் சிலம்பு கழிதல் நடந்ததை,

> ‘சிறப்பும் சீரும் இன்றி. சீறூர்
> நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
> ஓர் ஆயாத்த ஒரு தூண் முன்றில்
> ஏதில் வறுமனைச் சிலம்பு உடன்கழீஇ’ (அகம்.369)

என்ற நக்கீரனார் பாடல் அடிகள் மூலம் அறியமுடிகிறது. கடல்போல் பெரும் செல்வம் உடைய பெற்றோர் உனக்குத் திருமணம் செய்து வைக்க நீ விட்டுத்தரவில்லை. சீரும் சிறப்பும் இல்லாத அவன் மனை ஏழைப்பெண்கள் வாழும், புல் வேய்ந்த குடிசை, அதன் முற்றத்துத் தூணில் ஒரு பசு கட்டியிருக்கும். ஏதுமில்லாமல் வறுமையில் வாழும் அந்த மனையில் சிலம்பைக் கழற்றி வைக்கும் திருமணம் நடப்பதை என் மகள் விரும்புகிறாள் எனச் செவிலித்தாய் புலம்புகிறாள். ஐங்குறுநூற்றில் தாய் தலைவியை நினைக்கும் போது தன்வீட்டிற்கு அவள் மறுபடியும் வரவேண்டும் என நினைக்கிறாள். அப்பொழுது புகுந்த வீட்டில் சிலம்புகழி நோன்பு நடந்திருந்தாலும் நான் பிறந்த வீட்டில் திருமணச் சடங்கு நடக்கட்டுமே என்று வீரக்கழல் அணிந்த காளையைப் பெற்றெடுத்த தாய்க்கு எடுத்துச்சொன்னால் என்ன என்று மகளைப் பெற்ற தாய் நினைப்பதை,

> ‘நும் மனை சிலம்பு கழீஇ அயரினும்
> எம் மனை வதுவை நன்மணம் கழிகெனச்’ (ஐங்.399)

என ஓதலாந்தையார் கூறுவதன் மூலம் உணர முடிகிறது. உடன்போக்கு சென்ற தலைவிக்குத் திருமணத்திற்கு முன்பு தலைவன் வீட்டில் வைத்தே சிலம்பு கழி நோன்பு நடந்ததை அறியலாகிறது.

சங்க இலக்கியப் பாலைத் திணைப் பாடல்கள் மட்டுமின்றி மற்ற திணைப் பாடல்களிலும் சிலம்பு பற்றிய செய்திகள் காணக் கிடைக்கின்றன. பாலைத் திணைப் பாடல் வரிகளான,

'தண் நறுஞ் சிலம்பில் துஞ்சும்' (நற்.7)

'சிலம்பு கழீஇய செல்வம்' (நற்.279)

'நீர்திகழ் சிலம்பின் ஒராங்கு விரிந்த' (குறு.282)

'அரிஆர் சிலம்பின் அரிசி ஆர்ப்பக்' (குறுந்.369)

'சீர்திகழ் சிலம்பு அகம் சிலம்பப்பாடி' (திருமுரு.40)

'நறிமலைச் சிலம்பில் நல்நகர் நகர்த்தி' (திருமுரு.238)

'நளி மலைச் சிலம்பின் சிலம்பும் கோயில்' (நெடுநல்.100)

போன்ற சங்க இலக்கிய அடிகள் மட்டுமின்றி பிறதிணைப் பாடல்களிலும் சிலம்பு பற்றிய செய்திகள் காணக்கிடைக்கின்றன.

ஐங்குறுநூற்றில் பாடல் எண் 389இல் செவிலித்தாய் தன் மகளைத் தேடிச் செல்லும் போது அவள் காலில் சிலம்பு அணிந்திருந்ததைக் குறியீடாகக் கூறுகிறாள்.

### 4.21 பதுக்கைகள்

ஒருவர் இறந்ததற்குப் பின்பு அவர்களைக் கற்கள் மற்றும் இலைக்குவியல்களைக் கொண்டு மூடி வைக்கும் பழக்கத்தைப் பாலைத்

திணை மக்களிடம் மட்டுமே காண முடிகின்றது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நான்கு திணை மக்களிடமும் இறந்தவர்களை மூடிவைக்கும் பழக்கம் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் சுட்டவில்லை.

பதுக்கை என்ற சொல்லிற்கு, ‘‘சிறுதட்டை, சிறுதூறு, பாறை, கற்குவியல்’’[63] எனப் பொருள் தருகிறது கழகத் தமிழ் அகராதி.

பதுக்கல் என்பதற்கு, ‘‘மற்றவர்களுக்குத் தெரியாமல் பண்டங்களையோ பணத்தையோ பிறவற்றையோ மறைத்து வைத்திருப்பதைப் பதுக்கல் அல்லது பதுக்கி வைத்தல் என்பர்’’[64] என்று வாழ்வியல் களஞ்சியம் தொகுதி பன்னிரண்டு கூறுகிறது.

பதுக்கை என்பதற்கு, ‘‘பாறை சிறுமேடு, சிறுதூறு’’[65] என்று விளக்கம் கொடுக்கிறது பிங்கலந்தை நிகண்டு.

பதுக்கை என்பது ஏதேனும் ஒரு பொருளைப் பிறர் அறியாதவாறு மூடி வைப்பது ஆகும். இவ்வாறு பதுக்கி வைக்கும் பழக்கம் ஆறலைக் கள்வரிடையே காணப்பட்டதைச் சங்க இலக்கிய நூல்கள் விவரிக்கின்றன. ஆறலைக்கள்வர் வழியில் வரும் வணிகர் மற்றும் வழிப்போக்கரைத் தாக்கி அவர்களின் உடல்களைப் பதுக்கி வைத்துள்ளனர். இதனைப் பதுக்கை என்று சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. இப்பதுக்கைகள் உவல் இடு பதுக்கை என்று அழைக்கப்பட்டன. இதுவே ‘‘இறந்தவர்களைப் புதைத்து அவர்களை வழிபடுகின்ற பழக்கமாகிப் பின்னர் பெருங்கற்படைச் சின்னங்களாக உருவாகின’’[66] என்கிறார் ராஜன்

ஆறலைக் கள்வராகிய வேடர்கள் தம் அம்புகளை எய்தமையால் வழிப்போவார் பலரும் இறந்தனர். உயர்த்திய மயிரினை உடைய தலைகளைக் கொண்ட அவர்தம் உடல்களைத் தழைகளாலும், கற்களாலும் மூடிவைத்தனர். அவர்தம் உடலை மூடிய உயர்ந்த கற்குவியல்களில் காட்டு மல்லிகை எறியப்படும் என்பதனை,

'உயர் பதுக்கு இவர்ந்த ததர்கொடிஅதிரல்' (அகம்.289)

'கொடுவிற் கானவர் கணை இடத்தொலைந்தோர்
படுகளத்து உயர்த்த மயிர் தலைப் பதுக்கை' (அகம்.231)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் பதுக்கை பற்றிய செய்திகள் அகநானூற்றில்,

'வில் இடவீழ்ந்தோர் பதுக்கை' (அகம்.157)

'பதுக்கைத்து ஆய செதுக்கைநீழலி' (அகம்.151)

'ஆள் அழித்து உயர்நத அஞ்சுவருபதுக்கை' (அகம்.215)

'படுகளத்து உயர்ந்த மயிர்தலைப்பதுக்கை' (அகம்.151)

ஆகிய பாடல்களில் பதுக்கை காணக்கிடைக்கின்றன.

மேல் விளிம்பை உருவிய கொடிய வில்லையுடைய மறவரின் வலிமையை எதிர்நின்று காக்க இயலாமல் இறந்த புதியவரின் மீது தழையை மூடி வைத்த குவியல்கள் உயர்ந்து விளங்குகின்ற காட்சியை,

'அவ் விளிம்பு உரீஇய கொடுஞ்சிலை மறவர்
வைவார் வரிள விற்பகை பேணார்
மாறுநின்று இறந்த ஆறுசெல் வம்பலர்

உவல்படு பதுக்கை ஊரின் தோன்றும்' (குறுந்.297)

என்னும் பாடல்வரிகள் மூலம் பாலைநிலக் கள்வர்களை எதிர்த்தவரை அவர்கள் கொன்று புதைத்த செய்தியை அறியமுடிகின்றது. இவ்வாறு வழிப்போக்கர்களைக் கொன்று அவர்களின் உடல்களின் மீது தழையையிட்டு மூடி வைத்தனர். இவ்வாறு கொல்லப்பட்டவர் உடல் மறையுமாறு மூடிய பதுக்கைகள் காட்டு முற்களால் இடும் நெடிய வேலிபோல் காட்சியளிப்பதை,

'இடுமுள் நெடுவேலி போல கொலைவர்

கொடுமரம் தேய்த்தார் பதுக்கை நிரைத்த' (பா.எ.12)

என்னும் கலித்தொகைப் பாடல் உணர்த்துகிறது.

4.22 நடுகல்

நடுகல் என்பது வழிப்போக்கருடன் போரிட்டு உயிர் நீத்த ஆறலைக் கள்வருக்கு எழுப்புவது.

நடுகல் என்பதற்கு, ''இது வென்றியான் மேம்பட்டுத் துறக்கம் புக்க பெருவீரர் பெயரையும் அவர்கள் ஆங்காங்கு புரிந்த போர்ச் செயலையும் ஒரு நெடுங்கல்லில் எழுதி அதனை நாட்டி அதில் அவர்களின் உருச்செய்து வைப்பது''[67] என்று அபிதான சிந்தாமணி விளக்கம் தருகிறது.

பண்டைய காலம் முதல் இன்றுவரை நடுகல்லிற்கு மாலை, பலி முதலியனவற்றை இட்டுப் புனைந்து வழிபடுதல் தமிழ்நாட்டில் வழக்கமாக இருந்து வருவதைக் காணலாம்.

ஆறலைக் கள்வர் வணிகருடன் போரிட்டு அவர்கள் பொருளைக் கவர்ந்தனர். இப்போரில் இறந்துபடும் ஆறலைக் கள்வர்களுக்கு 'நடுகல்'

வைத்து வழிபட்ட செய்தி சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. ‘நடாஅ நெடுங்கல்’ என்று கூறுகிறது அகநானூற்றுப் பாடல் வரி,

**‘நட்ட போலும் நடாஅ நெடுங்கல்’** (அகம்.269)

உயர்ந்த கற்குவியலில் காட்டு மல்லிகை ஏறிப்படரும், அம்மல்லிகையின் மலர்களைக் கொண்டு நெடிது நிலைத்து நிற்கும் நடுகல்லாகிய தெய்வத்திற்குப் பலியிட்டு வழிபாடு செய்தனர் என்ற செய்தியும் அம்புகளை அச்சம் தரும் நடுகல்லில் தீட்டியதால் நடுகற்களின் ஓரத்தில் தேய்ந்து போன செய்தியும் அகநானூற்றில் கூறப்பட்டுள்ளன. இதனை,

**‘நெடு நிலை நடுகல் நாட்பலிக் கூட்டும்’** (அகம்.289)

**‘எழுத்தடை நடுகல் இன் நிழல் விதியும்’** (அகம்.53)

என்னும் பாடலடிகள் வழி அறியலாம்.

## 4.23 தொகுப்புரை

பாலை நிலம் என்பது மணலும் மணல் சார்ந்த இடமும் ஆகும். குறிஞ்சி நிலமும் முல்லை நிலமும் தன் இயல்புகளில் இருந்து மாறுபடும் போது உருவாவது பாலை நிலம் ஆகும்.

பாலை நிலமக்கள், எயினர், மறவர், எயிற்றி, மறத்தி என்று அழைக்கப்பட்டனர். மக்களின் தோற்ற அமைப்பு நில அமைப்பின் அடிப்படையிலேயே அமைந்திருந்துள்ளது. அவர்கள் தாங்கள் செய்யும் தொழிலுக்கு ஏற்ப மிகவும் வலிமை வாய்ந்தவர்களாக இருந்துள்ளனர்.

மகளிர் உயிரை விடவும், நாணத்தை விடவும் கற்புடைமைக்கே முக்கியத்துவம் கொடுத்துள்ளனர்.

பாலை நில மக்களாகிய எயினர்கள் எலி, அணில் போன்ற விலங்குகள் வீட்டின் உள்ளேவராதபடி கூர்மையான முனையை உடைய ஈந்தின் இலையால் தங்கள் குடில்களை அமைத்திருந்துள்ளனர்.

பாலை நிலத்தின் தன்மைக்கு ஏற்ப வெயிலைத் தாக்கு பிடிக்கக்கூடிய இலவமரம், இருப்பை மரம், ஓமை மரம், பாலை மரம், மராஅம்மரம், போன்ற மரங்களும் பூக்களும் இருந்துள்ளன.

செந்நாய், யானை, புலி போன்ற விலங்குகளும் கழுகு, புறா, கணந்துள், குடிஞை போன்ற பறவைகளும் இருந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

பாலை நில மக்களின் திருமண முறைகள் பற்றிச் சங்க இலக்கியங்களில் நேரடியாகச் சுட்டப்படவில்லை. ஒன்றிரண்டு இடங்களில்

மறைமுகமாகவே சிலகுறிப்புகள் காணக்கிடைக்கின்றன. எனினும் இவர்கள் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலையிலேயே வாழ்ந்துள்ளனர்.

பாலை நில மக்கள் புல்லரிசி, உப்புக்கண்டம், உடும்பு போன்றவற்றைச் சமைத்து உண்டதோடு மட்டுமின்றி வரும் விருந்தினருக்கும் தேக்கு இலையில் வைத்து அதனை உண்ணக் கொடுத்துள்ளனர்.

பாலை நில மக்கள் பூந்தொடை விழா, கார்த்திகை விழா இளவேனிற் விழா, பங்குனி விழா போன்ற விழாக்களையும், துடிக் கூத்து என்ற கூத்தையும் ஆடியுள்ளதைக் காண முடிகின்றது.

பாலை நில மக்கள் பல்வேறு பழக்கவழக்கங்களை உடையவர்களாகவேச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. இறந்தோரைப் புதைத்தல், பகிர்ந்து உண்ணுதல் போன்ற பல பழக்கவழக்கங்களை உடையவர்களாகவே இருந்துள்ளனர்.

கடவுள் மீது ஊழ்வினை பற்றிய நம்பிக்கை உடையவர்களாகவும் புள் நிமித்தம், மர நிமித்தம், பல்லி சகுனம் பார்த்தல், கழங்கிட்டுப் பார்த்தல் போன்றவற்றில் நம்பிக்கை உடையவர்களாகவும் இருந்துள்ளனர்.

பறை, துடி போன்ற இசைக்கருவிகளையும், யாழ் போன்ற நரம்புக்கருவிகளையும் குழல் போன்ற துளைக் கருவிகளையும் பாலைத்திணைப் பாடல்களில் காணமுடிகின்றது.

பாலைத் திணை ஆடவர்கள் ஆறலைத்தல் தொழிலை மேற்கொண்டுள்ளனர். இதற்கென்று தனியான வழிகள் மற்றும் தாக்கும்

முறைகளைச் சிறப்புற கையாண்டுள்ளதை இலக்கியங்கள் வழிக் காணமுடிகின்றது.

பாலை நில மகளிர் பூவிற்றல், ஊன் உலர்த்தல், புல்லரிசி திரட்டல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளதையும் காணமுடிகின்றது.

பாலைத்திணை மக்களிடையே அகவாழ்க்கைக்கு உரிய இயல்புகளாக உடன்போக்கு செல்லல், நற்றாய் வருந்துதல், செவிலி மகளைத் தேடிச் செல்லல், செலவு அழுங்குவித்தல், தலைவியை ஆற்றுவித்தல் போன்ற நிகழ்வுகள் காணக்கிடைக்கின்றன.

புற வாழ்க்கைக்குரிய இயல்புகளாக, பொருள்தேடிச் செல்லல்,ஈயாமை, அறவோர் அறிவுறுத்தல், வினை போன்ற நிகழ்வுகள் காணக்கிடைக்கின்றன. ஒருவர் இறந்த பின்பு அவர் உடலை இலை மற்றும் கற்கள் கொண்டு மூடிவைக்கும் பதுக்கை அமைப்பு முறையை பாலைத்திணைப் பாடல்களிலேயே காணமுடிகின்றது. அதுமட்டுமின்றி வழிப்போக்கருடன் போரிட்டு உயிர்நீத்த ஆறலைக் கள்வர்களுக்கு நடுகற்களும் எழுப்பப்பட்ட செய்தியும் சங்க இலக்கியங்களில் காணக்கிடைக்கின்றன.

# குறிப்புகள்

1. சிலப்பதிகாரம், காடுகாண் காதை, பா.வரி 66-68
2. சிறுபாண், பா.வரி.8-10
3. கழகப் புலவர், கழகத் தமிழ் அகராதி, ப.113
4. சதுரகராதி, பெயரகராதி, ப.89
5. கலித், பா.எ.4
6. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியக் கொள்கை, ப.290
7. அகம், பா.எ.185
8. நீதிக் களஞ்சியம், ப.3
9. அகம்., பா.எ.225
10. கோவை. இளஞ்சேரன், இலக்கியம் ஒரு பூக்காடு, ப.555
11. அகம்.35
12. கோவை.இளஞ்சேரன், மு.க.நூ.ப.250
13. மேலது, ப.250
14. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப.2904
15. பரி.பா.21
16. தமிழ்ப்பேழை, ப.289
17. கோவை இளஞ்சேரன், மு.க.நூ.ப.25
18. ஐங்., பா.எ.400
19. அகம்., பா.எ.221
20. அகம்., பா.எ.211
21. அகம்., பா.எ.317

22. அகம்., பா.எ.199

23. அகம்., பா.எ.115

24. நற்., பா.எ.148

25. குறுந்., பா.எ.237

26. ஆ.திருமலை முத்துசுவாமி, இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும், ப.39

27. கம்பர் சிலையெழுபது, பா.எ.10

28. பரிபாடல், பா.வரி.18,26,27

29. பாலைக் கலி, பா.எ.27

30. புறம்., பா.எ.360

31. அகம், பா.எ.389

32. குறள், பா.எ.380

33. பாலைக்கலி, பா.எ.5

34. அகம், பா.எ.141

35. அகம், பா.எ.85,133, கலி.25

36. அகம்., பா.எ.195

37. இளங்கோவடிகள், சிலப்பதிகாரம், பா.எ.1

38. அகம்., பா.எ.35

39. சிறுபாணாற்றுப்படை, பா.வரி.221-222

40. நற்., பா.எ.186

41. அகம்., பா.எ.297, நற்., பா.எ.212

42. அகம்., பா.எ.225

43. ஐங்., பா.எ.306

44. குறுந்., பா.எ.282

45. ஐந்திணை ஐம்பது. பா.எ.34

46. தொல்காப்பியம், சொல்லதிகாரம், நூ.எ.17

47. மேலது, நூ.எ.19

48. கழகப்புலவர், கழகத்தமிழ் அகராதி, ப.113

49. அ.கி.மூர்த்தி, சைவசித்தாந்த அகராதி, ப.49

50. குறள், பா.எ.285

51. கழகப்புலவர், கழகத்தமிழ் அகராதி, பா.எ.488

52. மேலது, பா.எ.50

53. மேலது, பா.எ.824

54. அகம், பா.எ.365

55. சிலம்பு, வேட்டுவவரி, பா.வரி.12

56. சிலப்பதிகாரம், வேட்டுவவரி, பா.வரி.54-64

57. நம்பியகப்பொருள், ப.20

58. நம்பியகப் பொருள், நூ.எ.181

59. வாழ்வியற் களஞ்சியம் தொகுதி 4, ப.784

60. குறள்., பா.எ.651

61. மேலது, பா.எ.213

62. ஆத்திசூடி, ஔவையார், ப.4

63. கழகப்புலவர் கழகத் தமிழ் அகராதி, ப.643

64. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி 12, ப.68

65. பிங்கலமுனிவர், மு.க.நூ.ப.461

66. தொல்லியல் நோக்கில் சங்க இலக்கியம், கா.ராஜன், ப.953

67. அபிதான சிந்தாமணி, ப.118

# துணைநூற்பட்டியல்

## அ.முதன்மை ஆதாரங்கள்


1. ஆலிஸ்.அ (உ.ஆ) - **பதிற்றுப்பத்து,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, ஐந்தாம்பதிப்பு – 2014.

2. சுப்பிரமணியன். பெ.(உ.ஆ) - **பரிபாடல் மூலமும் உரையும்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, ஐந்தாம்பதிப்பு – 2014.

3. செயபால். இரா - **அகநானூறு மூலமும் உரையும் (தொகுதி1,2)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை ஐந்தாம்பதிப்பு – 2014

4. தட்சிணாமூர்த்தி .அ (உ.ஆ) - **ஐங்குறுநூறு மூலமும் உரையும் (தொகுதி 1,2)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் சென்னை ஐந்தாம்பதிப்பு – 2014

5. நாகராசன்.வி (உ.ஆ) - **குறுந்தொகை மூலமும் உரையும் (தொகுதி 1,2)** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்

சென்னை
ஐந்தாம்பதிப்பு – 2014

6. பாலசுப்பிரமணியன். கு. வெ - நற்றிணை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
ஐந்தாம்பதிப்பு – 2014

7. பாலசுப்பிரமணியன். கு. வெ - புறநானூறு மூலமும் உரையும்
(தொகுதி -1,2)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
ஐந்தாம்பதிப்பு – 2014

8. மோகன். இரா. (உ.ஆ) - பத்துப்பாட்டு மூலமும் உரையும்
(தொகுதி -1,2 )
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
ஐந்தாம்பதிப்பு – 2014

9. விஸ்வநாதன். ஆ - கலித்தொகை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
ஐந்தாம்பதிப்பு – 2014.

## ஆ.துணைமை ஆதாரங்கள்


1. அழகப்பன்.ஆறு - தமிழ்ப் பேழை, திருவரசு புத்தக நிலையம், சென்னை – 2001.

2. அரங்கசாமி - சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், பாரிபுத்தக நிலையம், சென்னை, முதற்பதிப்பு – 2014.

3. ஆனந்தன்.சு - தமிழ் இலக்கிய வரலாறு, கண்மணி பதிப்பகம், திருச்சி – 2000.

4. இராசாராம்.சு - சங்க இலக்கியத்தில் நடைமுறை வாழ்க்கை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, முதல்பதிப்பு -2007.

5. இளஞ்சேரன் - இலக்கியம் ஒரு பூக்காடு, இராக்போர்ட்டு பப்ளிகேசன், திருமறைக்காடு, முதற்பதிப்பு – 1982.

6. இளவரசு.சோம - நன்னூல் (சொல்லதிகாரம்), மணிவாசகர் பதிப்பகம், சென்னை – 108, ஐந்தாம்பதிப்பு – 2010.

7. கந்தையா. ந.சி - தென்னிந்திய குலங்களும் குடிகளும்,
உதயம் அச்சகம்,
சென்னை,
முதற்பதிப்பு - 1999.

8. கலைவாணி.இரா - சங்க இலக்கியத்தில் இசை,
ஏழிசைப் பதிப்பகம்,
மயிலாடுதுறை – 2005.

9. கவிஞர்.மீனவன் - பண்டைய தமிழரும் பரதவர் வாழ்வும்,(ஆய்வு நூல்)
சிவசக்தி பதிப்பகம்,
நாகப்பட்டினம்
முதற்பதிப்பு - 2004.

10. கனகசபை பிள்ளை - 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட (அப்பாதுரையார் தமிழாக்கம்) தமிழகம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி,
முதற்பதிப்பு – 1962.

11. கார்த்திகேசு சிவதம்பி - பண்டைத் தமிழச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.
முதற்பதிப்பு -2010

12. குளோரியா சுந்திரமதி - **சங்க இலக்கியத்திணை துறை அமைப்பில் எழும் சிக்கல்,**
சங்க இலக்கியக் கட்டுரைகள்,
கேரளப் பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு – 1984.

13. கோ.பெ.நா - **நீதிக் களஞ்சியம்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர், சென்னை – 98,
நான்காம்பதிப்பு – 2011.

14. சிவ.சுப்பிரமணியன்.ஆ - **இனவரைவியலும் தமிழ் நாவலும்,**
பரிசில் வெளியீடு,
சென்னை,
முதற்பதிப்பு – 2009.

15. சிவபாதம்.வி - **கள்ளர் மரபினரின் பட்டப்பெயர்கள் ஒரு வரலாற்று பார்வை,**
பத்மா பதிப்பகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு - 2007.

16. சுந்தரவந்தியதேவன்.இரா - **பிறமலைக் கள்ளர் வாழ்வும் வரலாறும்,**
சந்தியா பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 2011.

17. சுப்பிரமணியன் ச.வே - **தமிழ் இலக்கிய வரலாறு,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை – 108, முதற்பதிப்பு – 1999.

18. சுப்பிரமணியன் ச.வே - **தொல்காப்பிய உரைவளக்கோவை,** மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு –2009.

19. சுபா.பே - **சிலை எழுபது,** அரசினர் கீழ்திசை சுவடிகள் நூலகம், - 2015.

20. சேனாவரையர் (உ.ஆ) - **தொல்காப்பியம் (சொல்),** சாரதா பதிப்பகம், சென்னை – 14, 1934.

21. ஞானசம்பந்தன் அ.ச - **இலக்கியக் கலை,** உ.வே.சாமிநாதர் நூல் நிலையம், சென்னை, முதற்பதிப்பு – 1981.

22. தட்சிணாமூர்த்தி.அ., - **சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்,** நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை – 98, முதற்பதிப்பு – 2016.

23. தனஞ்செயன் - விளிம்புநிலை மக்கள் வழக்காறுகள்,
இனவரைவியல் ஆய்வு,
புதுச்சேரி – 2006.

24. தனஞ்செயன் - சங்க இலக்கியமும்
பண்பாட்டு சூழலியலும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.
சென்னை,
முதற்பதிப்பு –2010.

25. திருஞானசம்பந்தம் (உ.ஆ) - நம்பி அகப்பொருள் விளக்கம்,
கதிர் பதிப்பகம்,
திருவையாறு
மூன்றாம் பதிப்பு - 2010.

26. திருமலை முத்துசுவாமி.அ - இலக்கியத்தில் விலங்குகளும் பறவைகளும்,
ஔவை நூலகம்,
சென்னை,
முதற்பதிப்பு –1959.

27. தேவநேயப்பாவணார் - தமிழர் வரலாறு,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு –2018.

28. நீலகண்ட பிள்ளை.தா - சங்கத் தமிழர் வாழ்வியல்,
செம்மூதாய் பதிப்பகம்,
சென்னை – 59,
முதற்பதிப்பு –2012.

29. பக்தவத்சல பாரதி - பண்பாட்டு மானிடவியல்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்,
நான்காம்பதிப்பு –2009.

30. பத்மா ரமேஷ் - சங்ககால மன்னர்களின்
காலநிலைத் தொகுதி – 1,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை – 2000.

31. பரிமேலழகர் (உ.ஆ) - திருக்குறள் மூலமும் உரையும்
அருணா பப்ளிகேஷன்ஸ்
முதற்பதிப்பு - 2015

32. பாக்கிய மேரி - தமிழ் இலக்கிய வரலாறு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
முதற்பதிப்பு –2008.

33. பார்வதி (ப.ஆ) - சங்க இலக்கியத்தில்
தொழில்கள்,
தமிழ்த்துறை,
வாவுவஹீதா வனிதையர்
கல்லூரி,

காயல்பட்டணம் - 2015.

34. பாலசுப்பிரமணியன் கு.வெ - **சங்க இலக்கியக் கொள்கை,** மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 2008.

35. பாலுச்சாமி - **வாழ்வியற் களஞ்சியம், தொகுதி – 4,** தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 1991.

36. மணவாளன், அ.அ - **இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், அம்பத்தூர், சென்னை – 2009.

37. மணிவேல்.மு - **தமிழ் இலக்கிய மரபுகள்,** செல்லப்பா பதிப்பகம், சென்னை – 2009.

38. மனோன்மணி.தி, செல்வநாயகி.தி - **தொல்லியல்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், 2018, சென்னை.

39. மனோன்மணி சண்முகதாஸ் - **குறுந்தொகை ஒரு நுண்ணாய்வு,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை 2000.

40. மாதையன் - இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்,
பாவை பப்ளிகேஷன்ஸ்,
2004.

41. மாதையன்.பெ - அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக் கவிதை மரபும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
2007, அம்பத்தூர்.

42. மாதையன்.பெ - சங்க இலக்கியத்தில் குடும்பம்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர்,
சென்னை – 2009.

43. ராஜன்.கா - தொல்லியல் நோக்கில் சங்ககாலம்,
ஆய்வு நூல்கள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
2010, சென்னை.

44. வானமாமலை.நா - இலக்கியத்தின் உள்ளடக்கமும் உருவமும்,
அலைகள் வெளியீட்டகம்,
சென்னை -1, 2009.

45. வித்தியானந்தன்.சு - தமிழர் சால்பு,
குமரன் புத்தக இல்லம்,
சென்னை – 2014.

46. வேங்கடசாமி நாட்டார்.ந.மு - சிலப்பதிகாரம்,
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
1923,சென்னை.

47. வேங்கடசாமி நாட்டார்.ந.மு - கள்ளர் சரித்திரம்,
சாரதா பதிப்பகம்,
2010, சென்னை.

48. ஸ்டீபன் - தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
அம்பத்தூர்,
சென்னை.

49. ஸ்ரீகுமார் - தமிழில் திணைக்கோட்பாடு,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
2012, சென்னை.

50. ஜெகதீசன் - குறுந்தொகை ஆய்வுக் கோவை தொகுதி 1,
குறிஞ்சிப் பதிப்பகம்,
2006, மதுரை.

51. ------------- - மானிடவியல் கோட்பாடுகள்,
புதுச்சேரி வல்லினம்,
2005.

## இ.அகராதிகள்


1. இரவண சித்தர் - அகராதி நிகண்டு, டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம், 1983,சென்னை.

2. கதிரை வேற்பிள்ளை நா. - தமிழ்மொழி அகராதி, ஏசியன் எஜீகேஷனஸ் சர்வீஸ், 2005, சென்னை.

3. கழகப்புலவர் - கழகத்தமிழ் அகராதி, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் 1998.

4. சக்திவேல்.சு - மானிடவியல் கலைச் சொல்லகராதி திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 1972, சென்னை.

5. சண்முகம் பிள்ளை (தொ.ஆ) - தமிழ் தமிழ் அகராதி, சென்னை பல்கலைக்கழகம், 1984,சென்னை.

6. சிங்காரவேலுமுதலியார்.ஆ - அபிதான சிந்தாமணி, ஏசியன் எஜீகேஷனஸ் சர்வீஸ், சென்னை 2002.

7. பவானந்தம் பிள்ளை - பவானந்தர் தமிழ்ச் சொல்லகராதி, நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை 1917.

8. தேவநேயப்பாவாணர்.ஞா - செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகர முதலி, தொகுதி –I, சென்னை – 2004.

9. பிங்கல முனிவர் - பிங்கலந்தை நிகண்டு, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருநெல்வேலி – 6.

10. ------------------ - **Tamil Lexicon Vol.I,** Madras University, 1982, Madras.

இ.ஆய்வேடு

1. அன்பரசன் - பெரும்பாணாற்றுப்படையில் இனவரைவியல், முனைவர் பட்ட ஆய்வேடு, திராவிடப் பல்கலைக் கழகம்.

2. இளங்கோ.நா. - தாய்தெய்வ வழிபாடு, கட்டுரைத் தொகுப்பு, இணையம் ஆகஸ்ட் 29, 2011.

3. ஞானசௌந்தரி - இனவரைவியல் நோக்கில் குறுந்தொகை,
இளம்முனைவர் பட்ட ஆய்வேடு,
புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி– 2012.

4. புஷ்பா.கி - இனவரைவியல் நோக்கில் அகநானூறு,
ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,
புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி.

5. பேச்சியம்மாள்.சு முனைவர் - இனவரைவியல் நோக்கில் குறுந்தொகை,
உதவிப்பேராசிரியர்,
தமிழியல் துறை,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,
திருநெல்வேலி.

6. மாயக்கருப்பன் சோழபாண்டியர் - கள்ளர் குல வரலாறு,
26, ஜனவரி 2019,
இணையப்பக்கம்.

| | | |
|---|---|---|
| 7. மாயக்கருப்பன் | - | **பாண்டியர்களும் கள்ளர் சமூகமும்,**<br>26, ஜனவரி 2019,<br>இணையப்பக்கம். |
| 8. ----------------- | - | **கள்ளர் குல வரலாறு,**<br>கட்டுரைத் தொகுப்பு,<br>இணையம்,<br>மார்ச் 5, 2015. |
| 9. ----------------- | - | **கள்ளர் உண்மை வரலாறு,**<br>கட்டுரைத் தொகுப்பு,<br>இணையம்,<br>செப்.2015, 2018. |

# ஆய்வு முடிவுரை

பண்பாட்டு மானிடவியலின் ஒரு பிரிவாக இனவரைவியல் அமைந்துள்ளது. இவ்இனவரைவியல் என்பதும் குறிப்பிட்ட மனித சமூகம் அல்லது அச்சமூகத்தின் ஒட்டுமொத்த வாழ்வியற் கூறுகளை விரிவாக விளக்குவதாக அமைந்துள்ளது எனலாம்.

சமூகத்தில் பொருளாதாரம் தொழில்நுட்பம் ஆகியவற்றின் தேவை அதிகரிக்க அதிகரிக்க மனிதர்கள் இயற்கையின் பாதிப்பில் இருந்து விடுபடத் துவங்கினார்கள்.

முதலில் தனித்த இனக்குழுக்களாக வாழ்ந்தவர்கள் பின்னர் பொருளாதாரம், இயற்கை சீற்றம் ஆகியவற்றின் காரணமாக ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு இடம்பெயரத் துவங்கினர். இவ்வாறு இடம்பெயர்ந்தவர்கள் அங்கு வாழும் மக்களுடன் தங்கி அவ்விடத்திலும் தங்கள் இனக்குழுக்களை நிலைநாட்டுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டிருக்கின்றனர். இதன்மூலம் பிற்காலத்தில் கலப்பு இனக்குழுக்கள் உருவான தன்மையை அறிய முடிகின்றது.

சங்க காலத்தில் குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மக்களை அந்த நிலப்பாகுபாட்டின் அடிப்படையிலோ அல்லது அவர்கள் மேற்கொண்ட தொழிலின் அடிப்படையிலோ அழைக்கும் முறை இருந்துள்ளது. ஆநிரை மேய்ப்பவரை ஆயர் என்றும், வழிப்பறி செய்பவரை ஆறலைக் கள்வர் என்றும் வேட்டையாடுபவரை வேட்டுவர் என்றும் அழைக்கப் பெற்றுள்ளமையைக் காணமுடிகின்றது.

இனவரைவியல் என்னும் சொல் எத்தினோகிராபி என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படுகின்றது.

ஒரு தனித்த சமூகத்தின் பண்பாட்டைப் பற்றி மானிடவியலாளர்கள் அச்சமூகத்தாரோடு நீண்ட காலம் ஒன்றி வாழ்ந்து ஆய்வு செய்து அதனை எழுத்தில் எழுதியளிக்கும் தனிவரைவு நூலே இனவரைவியல் எனப்படும் என்பதை அறிஞர்களின் வரையறை வழி அறியமுடிகின்றது.

இனவரைவியல் என்பது ஓர் இனத்தின் அல்லது ஒரு சமூகத்தின் வாழ்வியல் கூறுகளை விளக்கிக் கூறுவதே என்பதையும் அறிய முடிகிறது.

இலக்கியம் காலத்தைக் காட்டும் கண்ணாடி. ஒரு காலத்தில் எழும் இலக்கியம் ஏதேனும் ஒரு கதை மாந்தரை மையமாகக் கொண்டு எழுந்தாலும் அந்தத் தனிமனிதரைப் பற்றி மட்டும் பேசுவதில்லை. அக்காலத்தில் அவனைச் சுற்றி வாழ்ந்த அவனுடைய உறவுமுறை, சுற்றுச்சூழல் போன்றவற்றைப் பற்றியும் பேசும். எனவே இலக்கியம் என்பது ஒரு காலக்கட்டத்தில் வாழ்ந்த மனித இனம் பற்றிய வாழ்வியல் கூறுகளை அறிந்து கொள்ள அடிப்படையான ஒன்றாக அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

ஓர் இனம் குறித்த வேறு ஆவணங்கள் எதுவும் கிடைக்கப் பெறாத நிலையில் கடந்த காலத்தைப் பற்றிய செய்திகளையும் அக்காலக்கட்டத்தில் வாழ்ந்த மக்களின் சமூகப்பண்பாட்டைப் புரிந்து கொள்வதற்கும் ஆராய்வதற்கும் அக்காலத்தில் தோன்றும் இலக்கியங்களே முக்கிய ஆதாரமாகப் பயன்படுகின்றன.

இலக்கியம் என்பது மக்களின் அனுபவங்களை ஆவணப்படுத்தும் கருவியாகவும் அவர்தம் உணர்வுகளை வெளிப்படுத்தும் கலைகளுள் ஒன்றாகவும் அமைந்துள்ளது.

அந்தந்தக்கால மக்களின் வாழ்க்கைச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப அதனைப் பற்றிய பாடுபொருளும் வேறுபடுகின்றன. முதலில் காதல் மற்றும் வீரத்தை மையமாக வைத்து சங்க இலக்கியங்கள் தோன்றின. அதன் பின்பு பக்தியை மையமாக வைத்து பக்தி இலக்கியமும் பின்பு சாதாரண மக்களை மையமாகக் கொண்ட சிற்றிலக்கியமும் தோன்றின. இவ்வாறு காலந்தோறும் தோன்றிய இலக்கியங்கள் அந்தந்தக் காலக்கட்டத்தில் வாழ்ந்த மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடுகள், சடங்குமுறைகள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றை மையமாகக் கொண்டு அமைந்துள்ளதை அறியமுடிகின்றது.

மனிதப் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளும் இடம், காலம், சூழல் ஆகியவற்றைக் கொண்டே அமைகின்றன. சங்க இலக்கியங்கள் தோன்றிய காலக்கட்டத்தில் நிலஅமைப்பைக் கொண்டே இயங்கி வந்த தன்மையைக் காணமுடிகின்றது. தமிழில் திணை என்ற சொல் பண்டைய தமிழ் மக்களின் வாழ்வோடு பின்னிப்பிணைந்த ஒன்றாக இருந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

தொன்மைக்கால மனிதன் கட்டிட வளர்ச்சிக்கு முன்னர் பாதுகாப்பிற்கு அடைக்கலமான இடம் மலைக்குகைகளேயாகும். இதனைச் சங்க இலக்கியம் குறிஞ்சி என்று அழைக்கப்படுவதை அறியமுடிகின்றது.

குறிஞ்சி நிலமக்கள் வில் அம்பு போன்ற கருவிகளைப் பயன்படுத்தினர். அவை ஊகம்புல் மற்றும் ஈர்க்கினால் அமையப் பெற்றிருந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

குறிஞ்சி நிலமக்களின் குடில் தாழ்வான அமைப்பினைக் கொண்டது. இத்தகைய குடில்களின் மேல் தினைத்தாளையும், ஐவன நெல்லின் தாளையும் புற்களையும் கூரையாக அமைந்திருந்தனர் என்பதைச் சங்க இலக்கிய குறிஞ்சித் திணைப் பாடல்கள் மூலம் அறியமுடிகின்றது.

குறிஞ்சி நில மக்கள் விலங்குகளிடம் இருந்து தங்களைக் காத்துக் கொள்ள முதலில் வேட்டையாடத் துவங்கினர். பின்பு அதனையே தொழிலாக மாற்றிக் கொண்டனர் என்பதையும் காண முடிகிறது.

முல்லைநிலம் காட்டோடு தொடர்புடைய பகுதியாகும். அந்நில மக்கள் பெரிதும் ஆநிரைகளையே வளர்த்தனர் என்பதாலும் அம்மக்கள் அந்நிலத்தோடும் ஆநிரைகளோடும் தொடர்புடைய தொழில்களையே மேற்கொண்டதை அறியமுடிகின்றது.

ஆயர்கள் அதிகாலையில் ஆநிரைகளை மேய்ப்பதற்கு ஓட்டிச் சென்றதையும், அவ்வாறு செல்லும் போது தமக்குரிய உணவினை மூங்கிற் குழாயில் அடைத்து எருதின் கழுத்தில் பூட்டிச் சென்றதையும் அறியமுடிகின்றது.

ஆற்றின் கரையோரப் பகுதிகளான வண்டல் பகுதிகளில் வயல்வெளிகளை அமைத்தனர். இவ்வாறு வயல் சார்ந்த இடங்களே மருதநிலம் என்று வகைப்படுத்தப்பட்டதைக் காணமுடிகிறது.

நெல்வளம் நிறைந்திருக்கும் மருதநில உழவர்கள் சேறு நிரம்பிக் கிடக்கும் வயல்களில் நாற்று முடிகளை நடுவார்கள். இத்தகைய உழவர்கள் தங்கள் வீடுகளின் மேற்கூரைகளை வைக்கோல் மற்றும் தென்னக்கீற்றுகளைக் கொண்டு வேய்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

நெய்தல் என்பது கடலும் கடல் சார்ந்த இடமும் ஆகும். இங்கு வாழும் பரதவர்கள் கடற்கரையில் உள்ள மணல்மேடுகளில் தங்களுடைய குடில்களை அமைத்திருப்பர். அவை மூங்கில்களால் வேயப்பட்டிருந்ததை அறியமுடிகின்றது. அந்நிலமக்கள் கடலில் இருந்து கிடைக்கும் பொருட்களையே தங்கள் ஆதாரமாகக் கொண்டு வாழ்ந்தனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

நெய்தல் நில மக்களான பரதவர்கள் முத்துக்குளித்தல், மீன்பிடித்தல், உப்புவிளைத்தல் போன்ற தொழில்களைச் செய்ததைப் பண்டைய இலக்கியங்கள் மூலம் காணமுடிகின்றது.

சங்ககால மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையையே வாழ்ந்தனர். தாங்கள் வாழும் நிலஅமைப்பிற்கு ஏற்ப விவசாயம், கால்நடை வளர்ப்பு போன்ற தொழில்களைச் செய்ததை அறியமுடிகின்றது.

களவு என்பது ஒருவர் பொருளை அவர் அறியாதவாறு எடுத்தலாகும். சங்க இலக்கியங்களில் ஆறலைக்கள்வர் மட்டுமின்றி ஊர்க்கள்வர், கடல் கொள்ளையர் பற்றிய செய்திகளும் ஒன்றிரண்டு இடங்களில் காணப்படுகின்றன.

ஊர்க்கள்வர் மற்றும் நகர்க் கள்வர் பற்றிய செய்திகள் நேரடியாகச் சுட்டாமல் மறைமுகமாகவே சுட்டப்பட்டுள்ளதைக் காணமுடிகின்றது. பத்துப்பாட்டில் மதுரைக்காஞ்சியில் மட்டுமே ஊர்க்கள்வர் பற்றிய தோற்றமும் செயலும் வெளிப்படையாகக் கூறப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

ஊர்க்கள்வர்கள் இரவுக்காலங்களிலேயே ஊர்பகுதிகளிலும் நகரவீதிகளிலும் சுற்றித்திரிந்துள்ளனர். இவர்கள் கரிய யானையின் நிறம் போன்ற கருமையான நிறத்தை உடைய உடலை உடையவர்களாகவும் காணப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது.

பசு தமிழ்நாட்டில் புனிதமாகக் கருதப்படும் ஒரு விலங்காகும். மக்கள் பசுவைச் செல்வமாகவும் தெய்வமாகவும் கருதியதையும் தற்காலத்திலும் அவ்வாறே கருதுவதையும் அறியமுடிகின்றது. பாலை நில மக்களாகிய மறவர்கள் ஆநிரை கவர்தலில் ஈடுபட்டதையும் இத்தகைய ஆநிரைக் கவர்தலே பிற்காலத்தில் போர் ஏற்படக் காரணமாக இருந்தது என்பதனைப் புறஇலக்கியங்கள் மூலம் தெளிவாக உணரமுடிகிறது.

பாலைநிலம் மணலும் மணல் சார்ந்த இடமும் ஆகும். இங்கு வாழ்ந்த மக்கள் மறவர், எயினர் என்றழைக்கப்பட்டனர். இம்மக்கள் ஆறலைத்தல் தொழிலை செய்தனர் என்பதையும் பண்டைய இலக்கியங்கள் மூலம் அறியமுடிகின்றது.

தமிழ்நாட்டில் பாலைநிலம் என்ற தனியான நிலஅமைப்பு கிடையாது வறண்ட பூமியான நிலத்தில் விவசாயம் செய்ய முடியாமல் போகும் நிலையில் அங்குள்ள மக்கள் ஆறலைத்தல் தொழிலைச் செய்ததை காணமுடிகின்றது.

மற்ற நிலத்தில் பகல் நேரங்களில் காலை மற்றும் மாலையில் வெயில் குறைவாகவும் நண்பகலில் வெயில் அதிகமாகவும் காணப்படும். ஆனால் பாலை நிலத்தில் காலையிலேயே வெயிலின் தாக்கம் அதிகமாகக் காணப்படும் என்பதைச் சங்க இலக்கியப் பாலைத்திணைப் பாடல்கள் வழி அறியமுடிகின்றன.

கள்வர்கள் புலியின் பார்வை போன்ற கொடுமையான பார்வையும் அன்பில்லாத குணமும் கடுமையான கோபமும் உடையவர்களாகவும் போரில் புறங்கொடாத தன்மை உடையவர்களாகவும் இருந்ததை அறியமுடிகின்றது.

பாலை நில மக்களாகிய எயினர்கள் எலி, அணில் போன்ற விலங்குகள் வீட்டின் உள்ளே வராதபடி கூர்மையான முனையை உடைய ஈந்தின் இலையால் தங்கள் குடில்களை அமைந்திருந்துள்ளனர். இத்தகைய எயினர்களின் குடிலில் செம்பறி ஆடு இருந்துள்ளது என்பதையும் சங்க இலக்கியம் வழி அறியமுடிகின்றது.

பாலைநில மக்களாகிய எயினரும் மறவரும் வீரக்குடி மக்களாய் விளங்கினர் என்பதையும் இவர்கள் பாலைநில வழியே செல்பவர்களிடம் இருந்து பொருள்களை பறித்துள்ளனர் என்பதையும் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது.

ஒரு சில இடங்களில் வழிப்போக்கர்களிடம் இருந்த அணிகலன்களை பறித்ததற்கான செய்திகள் காணக்கிடைக்கின்றன.

ஆறலைக்கள்வர்கள் வழிப்பறி செய்வதற்குக் குறும்பாறைகள் அதிகம் காணப்படும் வழிகளையே பயன்படுத்தியுள்ளனர். அம்பின் நுனிகளை நடுகல்லில் தீட்டியுள்ளனர் என்பதையும் காணமுடிகின்றது.

பாலை நில மக்கள் பல்வேறு பழக்கவழக்கங்கள் உடையவர்களாகவே காணப்பட்டுள்ளனர். இவர்கள் பகிர்ந்து உண்ணுதல் இறந்தோரைப் புதைத்தல் போன்ற பழக்கவழக்கங்கள் உடையவர்களாக இருந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

பாலைநில மக்கள் ஊழ்வினை பற்றிய நம்பிக்கை உடையவர்களாகவும் பறை, துடி போன்ற இசைக்கருவிகளையும் யாழ், குழல் போன்ற கருவிகளையும் பயன்படுத்தியதையும் அறியமுடிகின்றது.

பாலைத்திணைப் பாடல்களில் கூறப்பட்டுள்ள கார்த்திகை விழா இன்றளவும் மக்களால் கொண்டாடப்பட்டு வருவதைக் காணமுடிகின்றது.

பாலை நிலமக்களான ஆறலைக்கள்வர்கள் எவ்விதமான பொருட்களை வழிப்போக்கரிடம் இருந்து பறித்துள்ளனர் என்பதற்கான தெளிவான விளக்கம் சங்கப்பாடல்களில் காணப்படவில்லை. ஆனால் பிற்காலத்தில் வந்த சமயநூலான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார் என்பவர் கள்ளர் சாதியைச் சார்ந்தவர் என்பதையும் அவர் திருமணம் செய்த பெண் விதித்த நிபந்தனைக்காக வழிப்பறி செய்வதில் ஈடுபட்டார் என்பதையும் காணமுடிகின்றது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் அவர் வழிப்பறி செய்த பொருள்கள் பற்றிய செய்திகள் காணக்கிடைக்கின்றன.

சங்க காலத்தில் எயினர், மறவர் என்று அழைக்கப்பட்ட பாலை நில மக்கள் பிற்கால உரையாசிரியர்களால் ஆறலைக்கள்வர் என்றழைக்கப்பட்டதைக் காணமுடிகின்றது.